கழக வெளியீடு—கஉ.

புகழேந்திப்புலவர்

இயற்றிய

# நளவெண்பா



சென்னைக் கிறித்தவ கலாசாலைத்
தமிழாசிரியராயிருந்த

**வா. மகாதேவ முதலியார் அவர்கள்**

எழுதிய

அரும்பொருள் விளக்கத்துடன்



திருநெல்வேலி, தென்னிந்திய : :
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி : : சென்னை.

# பொருளடக்கம்



## பாட்டு



## அரும்பொருள் விளக்கம்

## FOREWORD

NALAVENBA is a short and sweet poem of the great Poet, *Puhalendi* with the story of *King Nala* as its theme. It is very highly interesting and instructive as a beautiful delineation of the ups and downs in the life of an ancient Prince. It begins with the wooing and winning of *Dhamayandi* by the Prince, describes the subsequent loss of his kingdom and depicts his life in the forest. Then it deals with the pathetic departure of Nalan from Dhamayandi and his career as a cook *incognito*. Finally, the story has a happy ending in the meeting of both the King and the Queen and their restoration to their original status and glory.

In this book we get a glimpse of our ancient civilization in respect of marriage and with reference to the way in which princes adapted themselves to their circumstances. We have a standing example in the life of the hero, of the evils of gambling and the good effects of a life of love, adaptability, perseverance, truthfulness and high sense of duty. From an aesthetic point of view, the poem abounds in pictures of enchanting flower gardens, limpid pools, soft mannered Hamsa the Messenger of Love and the like in Nature as well as in descriptions of the courts and mansions of ancient days.

Further it makes a potent appeal to the varied sentiments of Love, Majesty, Pity, Distress, Des-

pair, Hope and Joy. It is written in such a beautiful and simple style that it supplies a fitting introduction to the study of bigger poems in Tamil Literature. Its author has developed the best possibilities of Venba metre in this work.

A good edition of this book has been recently issued by the **South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Ltd.** In this edition, the stanzas are faultless and are grouped under various headings so as to facilitate an analytical view of the story. The short notes at the end, are quite accurate and adequate for the purpose of understanding the meanings of the lines clearly and correctly. Since these notes are from the pen of the able scholar and teacher, *Mr. W. Mahadeva Mudaliar* of the Madras Christian College, the students are likely to find them very useful and edifying. In short, this little Tamil Poem deserves the attentive study of every student of Tamil Literature.

MYLAPORE, 1st Jan. 1923. K. SUBRAMANIAM M.A., M.L.
*Advocate.*

# புகழேந்திப்புலவர் வரலாறு

**ஊர்**

அவ்வை யென்னும் அருந்தமிழ் மூதாட்டி '**சான்றோருடைத்**' தென உற்ற துரைத்த பெற்றிமை சான்ற **தொண்டை** நன்னாட்டிற் **பொன்விளைந்த களத்தூரின்** ஆசிரியர், பிறந்தன ரென்ப. 'மாலார் **களந்தைப்** புகழேந்தியுந் தொண்டை மண்டலமே,' 'ஐயன் **களந்தைப்** புகழேந்தி யாண்டான்', 'காரார் **களந்தைப்** புகழேந்தி எனத் **தொண்டை மண்டல சதக**மு மதற்குச் சான்று பகர்தல் காண்க. இப் பொன்விளைந்த களத்தூர் செங்கற்பட்டென வழங்கும் செங்கழுநீர்ப் பட்டிக்கு அண்மைக்க ணுளது.

**பெயர்**

ஆசிரியர் பெயர் 'புகழேந்தி' யென்பது யாவரும் அறிந்ததொன்று. இஃதவரியற்பெயரன்று, கல்வியான் விளங்கிப் புகழ்படைத்த பின்னர்ப்பெற்ற காரணப் பெயரே யென்பது அறிஞர் சிலர் கொள்கை.

**இனம்**

இவர் துளுவ வேளாள மரபின ரென்ப. மருத நிலத்தைப் பற்றிக் கூறும்வழி யெல்லாம் அந்நிலத் தியல்பையும் கருப்பொருள்களையும் ஆங்கு நிகழும் உழு தொழில் முதலியவற்றையுங் கூர்ந்து நோக்கி நுணுகப் புனைதலின், இவர் அம் மரபினராதல் வேண்டுமென்பது யாவர்க்கும் ஒப்ப முடிந்தது.

இவர் கம்பர் காலத்தின ரென்ப. கம்பர் காலத்தை இரண்டாம் குலோத்துங்கன் காலமென ஆராய்ச்சி வல்லார்

அறுதியிட்டுக் கூறுபவாகலின், அது பன்னிரண்டாம் நூற்றாண்டின் முற்பகுதியென் றுணரற்பாற்று. ஆகலின் இருவரும் அப் பன்னிரண்டாம் நூற்றாண்டினரெனலே சால்புடைத்தென்க.

**காலம்**

இவர் வைணவ ரென்பதற்குப் போதிய சான்றுகள் நூலகத் துள. நூற்புறத்துக் கணபதி வணக்கமும் பரசிவ வணக்கமுங் கூறித் தம் பொதுநோக் குண்மை தெரிப்பினும், நூலகத்து வரும்.

**மதம்**

'நாராய ணாய நமவென் றவனடியிற்
சேராரை வெந்துயரஞ் சேர்ந்தாற்போற்—பாராளுங்
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி
கற்றவனைச் சேர்ந்தான் கலி' (கலிதொ-நு௩)

'மிக்கோ னுலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோ ரருவினைபோற் போயிற்றே—அக்காலங்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு' (கலிநீங்-எக)

என்னும் பாக்கள் இவர் வைணவ ரென்பதனைக் காட்டித் தருகின்றன.

முதற் பாண்டிநாட்டினும், மேற் சோழநாட்டினும் அதன்பின் அந் நாட்டி னொரு பகுதியாகிய மள்ளுவ நாட்டினும் வாழ்ந் திருந்தன ரெனத் தோன்றுகிறது.

**வாழிடம்**

இவர் அரசவைகளின் நின்று விளங்கினமையும், 'புலவர்க்கு வெண்பாப் புலி' என்றவாறு பல கட்டுக்களுக் குட்பட்டுப் பாகம் பெற யாத்தற் கரிதாய், நன்னடையும் இன்னொலியு முற்று 'வெண்பா' 'பார்ப்பனப் பா' வெனப் பெறூஉம் வெண்பா யாப்பின் யாக்குப் புக்கு,

**கல்வித் திறம்**

'வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோ
சயங்கொண்டான் விருத்த மென்னு
மொண்பாவிற் குயர்கம்பன் கோவையுலா
வந்தாதிக் கொட்டக் கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள்
வசைபாடக் காள மேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காச
லாலொருவர் பக ரொணாதே'

எனச் சமன்செய்து சீர்தூக்குங் கோல்போல அமைந்து ஒருபாற் கோடாத சான்றோ ரொருவராற் பாராட்டப் பெற்றமையும் இவரது கல்வித்திறத்தை விளக்கிநிற்பனவாம்.

இந் நளவெண்பாவொடு **இரத்தினச் சுருக்கமும்** இவர் செய்தன வென்பதனை ஒருவரும் மறு ரெனக.

'காரார் களந்தைப் புகழேந்தி சொன்ன கலம்பகத்தி
னேரான தையும் படியென்ற பாடலை நேரியர்கோன்
சீராகச் செப்பிய நற்பாடல் கொண்டவன் செஞ்சியர்கோன்
மாராபி ராமனங் கொற்றந்தை யூர்தொண்டை மண்டலமே'

என்னுந் **தொண்டை மண்டல சதகப்** பாவான் இவர் 'செஞ்சிக் கலம்பகமு' மியற்றினரெனத் தெரிகிறது.

**இயற்றிய வேறு நூல்கள்**

இனி, இவர் சிறைக் கோட்டத் திருந் தழிக் கிணற்று நீர் முகக்க வரும் மகளிர் சாளர வாயிலண்டை நின்று விரும்பிக் கேட்குமாறு செய்தன அல்லி யரசாணி மாலை, புனந்திரன் களவுமாலை முதலியன வென்பாரு முண்டு.

இவரது பெற்றோரைப்பற்றி ஒன்றும் அறிதற் கிடனில்லை.

இவர் பாண்டியன் சமத்தான வித்துவானாக விருக்கையில் அவன் தன் மகளுக்கும் குலோத்துங்க சோழனுக்கும் மணமுடிய ஸ்திரீதநத்தோடு இவரையுஞ் செலவிட்டனனெனவும், அச் சோழன்பாற் சமத்தான வித்துவானாக

**பிற குறிப்புகள்**

விருக்க **ஒட்டக்கூத்தர்க்கும்** இவர்க்கும் பகைவளர்ந்த தெனவும், ஒட்டக் கூத்தர் இவர் மீது குற்றம் சார்த்திச் சிறையிடுவித்தன ரெனவும், அச்சிறைக்கண் வைகுழி இவர் பல இனத்துப் பிள்ளைகட்குக் கல்வி பயிற்றி அவர்களைக் கொண்டு ஒட்டக்கூத்தரை மானபங்கஞ் செய்வித்தன ரெனவும், அரசன் மனைவி அஃதாவது பாண்டியன் மகள் இச்செய்தி அறிந்து இவரைச் சிறை நீக்குவித்தன ளெனவும், அதன்மேல் இவர் சிலகாலம் சோழன்பா லிருந்து அவன்மாட்டு ஓரங் கண்டு நீங்கி மள்ளுவ நாட்டு முரணை நகர் **சந்திரன் சுவர்க்கி** யென்னுஞ் சிற்றரசன்பாற் சென்று சிறந்து நின்று அவன் வேண்டியவாறு '**நளவெண்பா**' என்னும் இந் நூலை இயற்றினரெனவும், இதனை அரங்கேற்றுகையில்

'மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது'

என்னும் பாவிற்குப் பொருள் கூறுகையில் ஒட்டக்கூத்தர் தடை கூற அதற்கு இவர் தக்க விடை பகர்ந்தன ரெனவும், ஊன்றி நின்று பகை முற்றினமையின் இவர் ஒட்டக்கூத்தரைக் கொல்ல வெண்ணிக் கல்லொடு அவர் இல்லம் புக்கொளிப்புழி அவர் தம் மனைவியாரொடு தம்மைப் பலபடி புகழ்ந்து சொல்லாடக் கேட்டு நட்புக்கொண்டு அளவளாவின ரெனவுங் கூறுப.

இருபெரும் புலவர் ஒற்றுமை கொள்ளாது காரண மின்றித் தம்முட் பகைமையை வளர்த்து அதனை வெளித் தோற்றி நடைமுறை யறியாது இடர்ப்பட்டு முடிவில் ஒரு வரை யொருவர் கொல்லவும் நினைத்தன ரெனல் நம்பத் தக்கதன்று. இனி, 'மல்லிகையே வெண்சங்கா வண்டூத' என்பதற்கு ஒட்டக்கூத்தர் 'சங்கினடியின் வாய் வைத்து ஊதுதல் முறையாகலின் மல்லிகை மேன் மொய்த்து ஒலிக்கும் வண்டுகள் மல்லிகையாகிய வெண்சங்கு ஊதின வென்றணிதல் தவ' றெனக் குறை கூறின ரென்பதும் பொருந்தாது; என்னை? **பெரியாழ்வாரும் திருவாதவூரடிகளும்** அருளிச்செய்த பொருளையும் மொழியையும் ஆசிரியர் பொன்னேபோற் போற்றிக் கொண்டனராகலானும் அப் பிரயோகங்களை ஒட்டக்கூத்தர் கண்டிலரெனல் கூடாமை யானுமென்க.

நளவெண்பாவிற்கு முதனூல் வடமொழி மகாபாரதத்து ஆரண்யபர்வத்துள் வரும் 'நளோபாக்கியாநம்' என்க. 'நளவெண்பா' என்னுந் தொடரை 'நளன் வெண்பா' வெனப் பிரிக்க; 'நளனது வெண்பா' வென விரிக்க.

---

# கதைச் சுருக்கம்

நிடத நாட்டரசனாகிய நளன் விதர்ப்ப நாட்டரசனாகிய வீமன் மகள் தமயந்தியின் பொற்பு கற்பு முதலியவற்றைப் பலபடி பலர் புகழக்கேட்டு அவள்பாற் காதல் கொண்டிருப்ப அவளும் அவனது அழகு ஆண்மை முதலிய வற்றைப் பலபடி பலர் புகழக்கேட்டு அவன்பாற் காதல் கொண்டிருப்புழி நளன் விடுத்த அன்னத்தி னுரையால் தமயந்தி காதல் கைம்மிக அஃதுணர்ந்த வீமன் சுயம்வரஞ் சாற்றினன். நாரத முனிவரால் அச் சுயம்வரச் செய்தி அறிந்த இந்திரன், வருணன், யமன், அக்நி இவர்களோடு அச் சுயம்வரத்திற்கு வரும்வழியில் நளனைக் கண்டு தமயந்திபால் அவனைத் தூது விட்டனன். நளன் அவ்வாறே அவர்களுக்குத் தூதுசென்று அவள் இசையாமை இசைத்தான். அதன்மேல், அவர்கள் நால்வரும் நளனுருக் கொண்டு சுயம்வர மண்டபத்திற்குச் சென்றனர். கால் நிலந்தோய்தன் முதலிய குறிகளான் ஒன்றுன நளன் இன்னனென அறிந்து அவற்குத் தமயந்தி மாலைசூட்டி மகிழ்ந்தனள். இந்திரன் முதலிய நால்வரும் திரும்பிச் செல்கையில் வழியின் எதிர்ப்பட்ட கலிக்கு நிகழ்ந்த துரைப்ப அவன் சினந்து 'நளனுக்குக் கீழ்மை கொடுக்கின்றேன்' என்று சபதஞ் செய்து நளன் ஞாதியாகிய புஷ்கரனை நளனொடு சூதாட ஏவி அவனைத் தோற்பித்தனன். நாடு முதலிய எல்லாவற்றையும் பந்தயமாக வைத்துத் தோற்ற நளன் மக்களை வீமன்பால் விடுத்துத் தமயந்தியோடு நாடகன்று காடு புக்கனன்.

காட்டகத்து நள்ளிரவில் ஒரு பாழ்மண்டபத்திற் படுத்துத் தமயந்தி உறங்குகையில் நளன் கலியின் வலியான்

அவனை நீத்தகன்ருன். உறக்கம் நீத்த தமயந்தி நளனைக் காணுது வருந்திப் புலம்பி வணிகனெருவன் வழித்துணை கொண்டு சேதிநா டடைந்து அங்கு நின்றும் விதர்ப்பநாடு புக்குத் தந்தைபா லிருந்து நளனை நாடவிட்டனள். இங்கு இவ்வாருக, நளன் தீவாய்ப்பட்ட கார்க்கோடனை அவன் வேண்டியவாறு எடுத்துப் புறத்து விட்டு அவனுற் றீண்டப் பட்டு உருமாறி அவன் பழைய உருவேண்டுங்கால் தரித் துக்கொள்ளும்படி தந்த ஆடைகளையும் பெற்று ருதுபர்ண னென்னும் அயோத்தி மன்னன்பால் மடைத்தொழிலும் தேர்த்தொழிலுஞ் செய்ய அமர்ந்திருந்தான். நளனை நாடி- வந்த அந்தண னெருவன் அவன் அங்கிருத்தலை உய்த் துணர்ந்து தமயந்திக் கதனை அறிவிக்க அவள் 'தமயந்திக்கு இரண்டாஞ் சுயம்வர' மென்று ருதுபர்ணனுக்கு ஓலை போக்குவித்து அவன் தன் தேர்ப்பாகனும் மடையனு மாகிய நளனுடன் வர, மக்களை நளன்பா லேவி அவன் நிலை கேட்டு அவனை அணுகி அழுது நிற்பப் பழைய வுருவொடு அவன் வெளிப்பட்டனன்.

அதன்மேல், மனைவி மக்களுடன் வீமன் சேனையுட னும் மாவிந்த நகரம் புக்குப் புஷ்கரனெடு மறு சூதாடி- வென்று தன் அரசைக் கைப்பற்றி இனிது வாழ்ந்தனன்.

---

# நூற்பொருள்

நற்குண நற்செய்கையுடையார்க்குத் தெய்வ பலமுண்டென்பதூஉம்,

"வாழ்வினை நுதலிய மங்க லத்துநாள்
தாழ்வினை யதுவரச் சீரை சாத்தினன்
சூழ்வினை நான்முகத் தொருவற் சூழினும்
ஊழ்வினை யொருவரா லொழிக்கற் பாலதோ"

என்றபடி, எத்துணை யுயர்பதவியி லிருப்பினும் வினைவலியான் மிகத் தாழ்ந்த நிலையையும் அடைவரென்பதூஉம், தமக்குக் கெடுதியாகிய காரியத்தைச் செய்ய நேரினும் மேன்மக்கள் வாய்மை ஒரு சிறிதும் தவறாரென்பதூஉம்.

'அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார்' (குறள்-கூ௩௬.)

என்றபடி சூதான் வருந் துன்பம் பெரி தென்பதூஉம், மெய்யன்புடையார்க்கு இடைநின்று தடையியற்றல் தேவர்க்குங் கூடா தென்பதூஉம், நல்லோர்க்கு மலைபோல வருங் கெடுதியும் சூரியற் கண்ட பனிபோல நீங்கு மென்பதூஉம், ஒழுக்க முடையார்க்கு வருந் தீமையும் நன்மையாய் முடியுமென்பதூஉம்,

'தொடர்ந்த மும்மல முருக்கிவெம் பவக்கட லுலையக்
கடந்து ளோர்களுங் கடப்பரோ மக்கண்மேற் காதல்'
'விழைவெ னப்படு கின்றது மென்மெல
வழல்வி ரிந்த கனகத் தரும்பிமென்
மழலை மாதர் மருங்கிற் படர்ந்துபைங்
குழவி மீது கொளுந்துவிட் டோங்குமால்'

என்றபடி மக்களாசை ஒழித்தல் ஒருவருக்குங் கூடாதென்பதூஉம் இவைபோன்ற பிற உண்மைகளும் பல நீதிகளும் இந் நூலகத்தனவாம்.

---

## கவிமாண்பு

இந் நூற் பாக்கள் சொல்லையும் பொருளையுந் தேடி வருந்தி அமைத்தன வாகா; மோனை, எதுகை முதலியன பிறழ்வன வாகா; செம்பாகமும் பொருளாழமும் பெற இயன்றனவாம். சில பாக்கள் இயற் சொற்களா னமைந் திருப்பினும் அவற்றின் பொருள் சிறி தூன்றிநின் றுணரி னன்றிப் புலப்படா. ஆங்காங்கு வடசொற்கள் பயின்று வரினும் அவை தமிழ்மொழியிற் புக்கு வழங்குவனவே யாம். **சங்க நூல்கள், நாலாயிரப் பிரபந்தம், கம்பராமாயண** முதலிய நூல்களிற் சொல்லும் பொருளும் இந் நூலின்கட் காணப்படுகின்றன.

அவற்றிற் சில காட்டுதும் :—

'கேடில் விழுச்செல்வம் கேடெய்து சூதாடல்' (சுயம்-கக.)
'கேடில் விழுச்செல்வங் கல்வி' (திருக்குறள்-சா.)

என்பனவற்றையும்,

'சேவற் குயிற்பெடைக்குப் பேசுஞ் சிறுகுரல்கேட்
டாவி யுருகி யழிந்திட்டாள்' (சுயம்-சக.)
'செங்கால் மடப்புறவம் பேடைக்குப் பேசுஞ்
சிறுகுரலுக் குடலுருகிச் சிந்தித் தாங்கே'
(திருநெடுந்தாண்டகம்-எ.)

என்பனவற்றையும்,

'கற்பின்றாழ் வீழ்த்த கதவு' (சுயம்-அஉ.)
'நாணுத்தாழ் வீழ்த்த கதவு' (திருக்குறள்-கஉருக.)

என்பனவற்றையும்,

'வேலை பெறுவமுதம் வீமன் றிருமடந்தை' (சுயம்-கருஎ.)
'அலையிடைப் பிறவா வமுதே யென்கோ' (சிலப்பதிகாரம்.)

என்பனவற்றையும்,

'பாவையர்கை தீண்டப் பணியாதார் யாவரே' (கலிதொ-ரு.)
'வஞ்சிபோன் மருங்கு லார்மாட் டியாவரே வணங்க லாதார்'
(கம்ப-பாலகாண்டம்.)

என்பனவற்றையும்,

'வான்முகிலு மின்னும் வறுநிலத்து வீழ்ந்ததுபோற்
றானுங் குழலுந் தனிவீழ்ந்தாள்' (கலித்தொடர்-கக௪.)

'கொடிமின் முகிலொடு நிலஞ்சேர்ந் தென்ன
விருநுசுப் பலச வெறுநிலஞ் சேர்ந்தாங்கு'
(மணிமேகலை-பீடிகைகண்டு பிறப்புணர்ந்த காதை.)

என்பனவற்றையும்,

'போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவா
யரவகற்று மென்போல வார்கலியே மாதை
யிரவகற்றி வந்தாய்கொ லின்று' (கலிநீங்கு-௩௩.)

'வருதி பெயர்தி வருந்துதி துஞ்சாய்
பொருதி புலம்புதி நீயுங்—கருதுங்காற்
பண்டினை யல்லையாற் பாழித்தோட் கோதையைக்
கண்டனை யோவாழி கடல்' (சங்கச் செய்யுள்.)

என்பனவற்றையும்,

'தைய றுயர்க்குத் தரியாது தஞ்சிறகாங்
கையான் வயிறலைத்துக் காரிருள்வாய்—வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோற்
கூவினவே கோழிக் குலம்' (கலிநீங்கு-கக௫.)

"எண்டருங்கடை சென்றயாம மியம்புகின்றன வேழையான்
வண்டுதங்கிய தொங்கன்மார்பன் மயங்கிவிம்மிய வாறெலாங்
கண்டுநெஞ்சு கலங்கியஞ்சிறை யானகாமர் துணைக்கரங்
கொண்டுதம்வயி றெற்றியெற்றி விளிப்பபோன்றன கோழியே.
(கம்ப-அயோத்தி-சூழ்வினை-௭எ.)

என்பனவற்றையும், காண்க.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# நளவெண்பா

—ooo—

## பாயிரம்

## கடவுள் வாழ்த்து

### விநாயகக் கடவுள்

**நேரிசை வெண்பா**

நேசரிதங் கூர நிலவலயந் தாங்குநளன்
மாசரிதங் கூற வருந்துணையா—*ஈசன்
கரியா னனத்தான் கருதுபுகழ் பூண்ட
கரியா னனத்தான் கழல். க

### திருமால்

ஆதித் தனிக்கோல மானான் அடியவற்காச்
சோதித் திருத்தூணில் தோன்றினான்—வேதத்தின்
முன்னின்றான் வேழம் முதலே யெனவழைப்ப
என்னென்றான் எங்கட் கிறை. உ

---

..........................................* 'பேசரிய
மாமகிழ்மா றன்புகழாம் வண்டமிழ்வே தம்விரித்த
மாமகிழ்மா றன்றாண் மலர்' என்பது பாடாந்தரம்.

## சிவபெருமான்

கலாப *மயிலிருந்த பாகத்தார் கங்கை
உலாவு சடைமே லுறையும்—நிலாவை
வழியவார்த் தாலன்ன மாநீற்றார் நாகங்
கழியவார்த் தார்நமக்கோர் காப்பு. ௩

## சுப்பிரமணியர்

நீல நெடுங்கொண்மூ நெற்றி நிழலுறிக்
காலை யிருள்சிக்குங் காய்கதிர்போல்—சோலை
மணித்தோகை மேற்றோன்றி மாக்கடற்சூர் வென்றோன்
அணிச்சே வடியெம் மரண். ௪

## அவையடக்கம்

வேந்தறுகண் வேழத்தை வேரிக் கமலத்தின்
தந்துவினாற் கட்டச் சமைவதொக்கும்—பைந்தொடையில்
தேன்பாடுந் தார்நளன்றன் தெய்வத் திருக்கதையை
யான்பாட லுற்ற விது. ௫

## ஆக்கியோன் பெயர்

பாரார் நிடத பதிநளன்சீர் வெண்பாவால்
பேரார் புகழேந்தி பேசினான்—தாரார்
செழியனையுஞ் சென்னியையுஞ் சேரத் திறைகொள்
மொழியின் சுவையே முதிர்ந்து. ௬

பாயிர முற்றிற்று

---

* 'மயிலுகந்த' என்பதூஉம் பாடம்.

## நூல்

# க. சுயம்வர காண்டம்

பாண்டவரின் முன்றோன்றல் பார்முழுதுந் தோற்றொரு
ஆண்டகையே தூதுவனாய்ச் சென்றவனி—வேண்ட [நாள்
மறுத்தா னிருந்தானை மண்ணொடும்போய் மாளப்
பொறுத்தா னிருந்தான் புலர்ந்து. க

நாட்டின்கண் வாழ்வைத் துறந்துபோய் நான்மறையோ
ரீட்டங்கள் சூழ இருந்தானைக்—காட்டில்
பெருந்தகையைக் கண்டார்கள் பேரெழிற்றோள் வேந்தர்
வருந்தகைய ரெல்லாரும் வந்து. உ

கோற்றவேற் றானைக் குருநாடன் பாலணைந்தான்
எற்றுநீர் ஞாலத் திருள்நீங்க—முற்றும்
வழிமுறையே வந்த மறையெல்லாந் தந்தான்
மொழிமுறையே கோத்த முனி. ௩

மறைமுதல்வ நீயிங்கே வந்தருளப் பெற்றேன்
பிறவிப் பெருந்துயர மெல்லாம்—அறவே
பிழைத்தேன்யா னென்றானப் பேராழி யானை
அழைத்தேவல் கொண்ட வரசு. ௪

மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலும்
ஒத்திருக்கு முள்ளத் துரவோனே—சித்தம்
வருந்தியவா என்னென்றான் மாமறையா னுள்ளம்
திருந்தியவா மெய்த்தவத்தோன் தேர்ந்து. ரு

அம்பொற் கயிலைக்கே யாகத் தரவணிவார்
தம்பொற் படைக்குத் தமியனா—எம்பியைமுன்
போக்கினே னென்றுரைத்தான் பூதலத்தும் மீதலத்தும்
வாக்கினே ரில்லாத மன். சு

காண்டா வனந்தீக் கடவுளுணக் கைக்கணையால்
நீண்ட முகில்தடுத்து நின்றாற்கு—மீண்டமரர்
தாளிரண்டு நோவத் தனித்தனியே யோடியநாள்
தோளிரண்டு மன்றோ துணை. எ

பேரரசு மெங்கள் பெருந்திருவுங் கைவிட்டுச்
சேரரிய வெங்கானஞ் சேர்தற்குக்—காரணந்தான்
யாதோவப் பாவென்றா னென்றுந்தன் வெண்குடைக்கீழ்த்
தீதோவப் பார்காத்த சேய். அ

கேடில் விழுச்செல்வங் கேடெய்து சூதாடல்
ஏடவிழ்தார் மன்னர்க் கியல்பேகாண்—வாடிக்
கலங்கலைநீ யென்றுரைத்தான் காமருவு நாடற்
கிலங்கலைநூன் மார்ப னெடுத்து. கூ

கண்ணிழந்து மாயக் கவறாடிக் காவலர்தாம்
மண்ணிழந்து போந்து வனநண்ணி—விண்ணிழந்த
மின்போலு நூன்மார்ப மேதினியில் வேறுண்டோ
என்போ லுழந்தா ரிடர். க0

சேமவேன் மன்னனுக்குச் செப்புவான் செந்தனிக்கோல்
நாமவேற் காளை நளனென்பான்—யாமத்
தொலியாழி வைய மொருங்கிழப்பப் பண்டு
கலியால் விளைந்த கதை. கக

## நாட்டுச் சிறப்பு

காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் தளையவிழப்—பூமடந்தை
தன்னாட்டம் போலுந் தகைமைத்தே சாகரஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டும் நாடு. கஉ

## நகரச் சிறப்பு

கோதை மடவார்தங் கொங்கை மிசைத்திமிர்ந்த
சீத களபச் செழுஞ்சேற்றால்—வீதிவாய்

மானக் கரிவழுக்கும் மாவிந்த மென்றுளதோர்
ஞானக் கலைவாழ் நகர். ௧௫

நின்றுபுயல் வானம் பொழிந்த நெடுந்தாரை
என்று மகில்கமழு மென்பரால்—தென்றல்
அலர்த்துங் கொடிமாடத் தாயிழையா ரைம்பால்
புலர்த்தும் புகைவான் புகுந்து. ௧௪

வெஞ்சிலையே கோடுவன மென்குழலே சோருவன
அஞ்சிலம்பே வாய்விட் டரற்றுவன—கஞ்சங்
கலங்குவன மாளிகைமேற் காரிகையார் கண்ணே
விலங்குவன மெய்ந்நெறியை விட்டு. ௧௫

தெரிவன நூ லென்றுந் தெரியா தனவும்
வரிவளையார் தங்கள் மருங்கே—ஒருபொழுதும்
இல்லா தனவு மிரவே யிகழ்ந்தெவருங்
கல்லா தனவுங் கரவு. ௧௬

மாமனு நூல் வாழ வருசந் திரன்சுவர்க்கி
தாமரையாள் வைகுந் தடந்தோளான்—காமருபூந்
தாரான் முரணை நகர் தானென்று சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி. ௧௭

ஓடாத தானை நளனென் றுளனொருவன்
பீடாருஞ் செல்வப் பெடைவண்டோ—டோ
முருகுடைய மாதர் முலைநனைக்குந் தண்தார்
அருகுடையான் வெண்குடையா னங்கு. ௧௮

சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை யறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் தனிக்காத்தான்—மாதர்
அருகூட்டும் பைங்கிளியும் ஆடற் பருந்தும்
ஒருகூட்டில் வாழ வுலகு. ௧௯

## நளன் சோலைக்குச் செல்லுதல்

வாங்குவளைக் கையார் வதன மதிபூத்த
பூங்குவளைக் காட்டிடையே போயினன்—தேங்குவளைத்

தேனுடி வண்டு சிறகுலர்த்தும் நீர்நாடன்
பூநாடிச் சோலை புக. உ0

வென்றி மதவேள்தன் வில்லெடுப்ப வீதியெலாம்
தென்றல் மதுநீர் தெளித்துவர—நின்ற
தளவேனன் மீதலருந் தாழ்வரைசூழ் நாடற்
கிளவேனில் வந்த தெதிர். உக

தேரிற் றுகளைத் திருந்திழையார் பூங்குழலின்
வேரிப் புனலணைப்ப வேயடைந்தான்—கார்வண்டு [ங்கிப்
தொக்கிருந்தா லித்துழலுந் தூங்கிருள்வெய் யோற்கொது
புக்கிருந்தா லன்ன பொழில். உஉ

## அன்னம் வெளிப்படல்

நீணிறத்தாற் சோலை நிறம்பெயர நீடியதன்
தாணிறத்தாற் பொய்கைத் தலஞ்சிவப்ப—மாணிறத்தான்
முன்னப்புள் தோன்றும் முளரித் தலைவைகும்
அன்னப்புள் தோன்றிற்றே யாங்கு. உங

பேதை மடவன்னந் தன்னைப் பிழையாமல்
மேதிக் குலமேறி மென்கரும்பைக்—கோதிக்
கடித்துத்தான் முத்துமிழுங் கங்கைநீர் நாடன்
பிடித்துத்தா வென்றான் பெயர்ந்து. உச

நாடிமட அன்னத்தை நல்ல மயிற்குழாம்
ஓடி வளைக்கின்ற தொப்பவே—நீடியநற்
பைங்கூந்தல் வல்லியர்கள் பற்றிக் கொடுபோந்து
தங்கோவின் முன்வைத்தார் தாழ்ந்து. உரு

அன்னந் தனைப்பிடித்தங் காயிழையார் கொண்டுபோய்
மன்னன் திருமுன்னர் வைத்தலுமே—அன்னம்
மலங்கிற்றே தன்னுடைய வான்கிளையைத் தேடிக்
கலங்கிற்றே மன்னவனைக் கண்டு. உசு

அஞ்சல் மடவனமே யுன்ற னணிநடையும்
வஞ்சி யனையார் மணிநடையும்—விஞ்சியது

காணப் பிடித்ததுகா ணென்றான் களிவண்டு
மாணப் பிடித்ததார் மன். உஎ

செய்ய கமலத் திருவை நிகரான
தையல் பிடித்த தனியன்னம்—வெய்ய
அடுமாற்ற மில்லா அரசன்சொற் கேட்டுத்
தடுமாற்றந் தீர்ந்ததே தான். உஅ

திசைமுகந்த வெண்கவிகைத் தேர்வேந்தே யுன்றன்
இசைமுகந்த தோளுக் கிசைவாள்—வசையில்
தமையந்தி யென்றோதுந் தையலாள் மென்றோள்
அமையந்தி யென்றோ ரணங்கு. உகூ

அன்னம் மொழிந்த மொழிபுகா முன்புக்குக்
கன்னி மனக்கோயில் கைக்கொள்ளச்—சொன்னமயில்
ஆர்மடந்தை யென்றான் அநங்கன் சிலைவளைப்பப்
பார்மடந்தை கோமான் பதைத்து. ௩0

எழுவடுதோண் மன்ன இலங்கிழையோர் தூண்டக்
கொழுநுதியிற் சாய்ந்த குவளை—உழுநர்
மடைமிதிப்பத் தேன்பாயும் மாடொலிநீர் நாடன்
கொடைவிதர்ப்பன் பெற்றதோர் கொம்பு. ௩க

நாற்குணமும் நாற்படையா ஐம்புலனும் நல்லமைச்சா
ஆர்க்குஞ் சிலம்பே யணிமுரசா—வேற்படையும்
வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்
ஆளுமே பெண்மை யரசு. ௩உ

மோட்டிளங் கொங்கை முடியச் சுமந்தேற
மாட்டா திடையென்று வாய்விட்டு—நாட்டேன்
அலம்புவார் கோதை யடியிணையில் வீழ்ந்து
புலம்புமா நூபுரங்கள் பூண்டு. ௩௩

என்றும் நுடங்கு மிடையென்ப ஏழுலகும்
நின்ற கவிகை நிழல்வேந்தே—ஒன்றி

அறுகாற் சிறுபறவை யஞ்சிறகால் வீசுஞ்
சிறுகாற்றுக் காற்றாது தேய்ந்து. ௩௪

செந்தேன் மொழியாள் செறியளக பந்தியின்கீழ்
இந்து முறியென் றியம்புவார்—வந்தென்றும்
பூவாளி வேந்தன் பொருவெஞ் சிலைசார்த்தி
ஏவாளி தீட்டு மிடம். ௩௫

அன்னமே நீயுரைத்த அன்னத்தை என்னாவி
உன்னவே சோரும் உனக்கவளோ—டென்னை
அடைவென்றான் மற்றந்த அன்னத்தை முன்னே
நடைவென்றாள் தன்பால் நயந்து. ௩௬

பூமனைவாய் வாழ்கின்ற புட்குலங்கள் யாமவள்தன்
மாமனைவாய் வாழும் மயிற்குலங்கள்—காமன்
படைகற்பான் வந்தடைந்தான் பைந்தொடியாள் பாதம்
நடைகற்பான் வந்தடைந்தேம் நாம். ௩௭

இற்றது நெஞ்சம் எழுந்த திருங்காதல்
அற்றது மானம் அழிந்ததுநாண்—மற்றினியுன்
வாயுடைய தென்னுடைய வாழ்வென்றான் வெங்காமத்
தீயுடைய நெஞ்சுடையான் தேர்ந்து. ௩௮

வீமன் றிருமடந்தை மென்முலையை யுன்னுடைய
வாம நெடும்புயத்தே வைகுவிப்பேன்—சேம
நெடுங்குடையா யென்றுரைத்து நீங்கியதே யன்னம்
ஒடுங்கிடையாள் தன்பா லுயர்ந்து. ௩௯

இவ்வளவிற் செல்லுங்கொல் இவ்விளவிற் காணுங்கொல்
இவ்வளவிற் காதல் இயம்புங்கொல்—இவ்வளவின்
மீளுங்கொ லென்றுரையா விம்மினான் மும்மதநின்
றாளுங்கொல் யானை யரசு. ௪0

சேவல் குயிற்பெடைக்குப் பேசுஞ் சிறுகுரல்கேட்
டாவி யுருகி யழிந்திட்டான்—பூவி

னிடையன்னஞ் செங்கா லிளவன்னஞ் சொன்ன
நடையன்னந் தன்பால் நயந்து. சக

அன்ன முரைத்த குயிலுக் கலசுவான்
மென்மயில்தன் தோகை விரித்தாட—முன்ன தனைக்
கண்டாற்று துள்ளங் கலங்கினன் காமநோய்
கொண்டார்க்கிஃ தன்றே குணம். சஉ

வாரணியுங் கொங்கை மடவாள் நுடங்கிடைக்குப்
பேருவமை யாகப் பிறந்துடையீர்—வாரீர்
கொடியா ரெனச்செங்கை கூப்பினன் நெஞ்சந்
துடியா நெடிதுயிராச் சோர்ந்து. சங

கோங்கையிள நீரால் குளிர்ந்தவிளஞ் சொற்கரும்பால்
பொங்கு சுழியென்னும் பூந்தடத்தின்—மங்கைநறுங்
கொய்தாம வாசக் குழல்நிழற்கீ ழாறேனோ
வெய்தாமக் காம விடாய். சச

மன்னன் விடுத்த வடிவிற் றிகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி யருகணைய—நன்னுதலுந்
தன்னுடல் விட்டுத் தனியிடஞ்சேர்ந் தாங்கதனை
யென்னுடல் சொல்லென்று ளீங்கு. சரு

சேம்மனத்தான் தண்ணளியான் செங்கோலான்
[மங்கையர்கள்
தம்மனத்தை வாங்குந் தடந்தோளான்—மெய்ம்மை
நளனென்பான் மேனிலத்தும் நானிலத்தும் மிக்கான்
உளனென்பான் வேந்த னுனக்கு. சசு

அறங்கிடந்த நெஞ்சும் அருளொழுகு கண்ணும்
மறங்கிடந்த திண்டோள் வலியுந்—திறங்கிடந்த
செங்கண்மா லல்லனேல் தேர்வேந்த ரொப்பரோ
அங்கண்மா ஞாலத் தவற்கு. சஎ

புள்ளின் மொழியினொடு பூவாளி தன்னுடைய
உள்ளங் கவர வொளியிழந்த—வெள்ளை

மதியிருந்த தாமென்ன வாய்ந்திருந்தாள் வண்டின்
பொதியிருந்த மெல்லோதிப் பொன். ௪௮

மன்னன் மனத்தெழுந்த மையலை யத்தனையும்
அன்ன முரைக்க வகமுருகி—முன்னம்
முயங்கினாள் போற்றன் முலைமுகத்தைப் பாரா
மயங்கினா ளென்செய்வாள் மற்று. ௪௯

வாவி யுறையும் மடவனமே யென்னுடைய
ஆவி யுவந்தளித்தா யாதியால்—காவினிடைத் [தாள்
தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி யென்றுரைத்
பார்வேந்தன் பாவை பதைத்து. ௫௦

மன்னன் புயம்பின் வனமுலைக்குக் கச்சாகு
மென்ன முயங்குவிப்பே னென்றன்னம்—பின்னும்
பொருந்தவன்பா லோதிமலர்ப் பூங்கணைகள் பாய
இருந்தவன்பாற் போன தெழுந்து. ௫௧

வீமனுக்கு அறிவித்தல்

கொற்றவன்றன் தேவிக்குக் கோமகள்தன் தோழியர்கள்
உற்ற தறியா வுளநடுங்கிப்—பொற்றொடிக்கு
வேறுபா டுண்டென்றார் வேந்தனுக்கு மற்றதனைக்
கூறினாள் பெற்ற கொடி. ௫௨

கருங்குழலார் செங்கையினால் வெண்கவரிப் பைங்கால்
மருங்குலவ வார்முரச மார்ப்ப—நெருங்கு
புரிவளை நின்றேங்கப் போய்ப்புக்கான் பெற்ற
வரிவளைக்கை நல்லாள் மனை. ௫௩

கோதை சுமந்த கொடிபோ லிடைநுடங்கத்
தாதை திருவடிமேற் றான்வீழ்ந்தாள்—மீதெல்லாம்
காந்தாரம் பாடிக் களிவண்டு நின்றரற்றும்
பூந்தார மெல்லோதிப் பொன். ௫௪

பேரழகு சோர்கின்ற தென்னப் பிறைநுதன்மேல்
நீரரும்பத் தன்பேதை நின்றாளைப்—பாராக்

குலவேந்தன் சிந்தித்தான் கோவேந்தர் தம்மை
மலர்வேய்ந்து கொள்ளும் மணம். ருரு

## தூது விடல்

மங்கை சுயம்வரநா ளேழென்று வார்முரசம்
எங்கு மறைகென் றியம்பினன்—பைங்கமுகின்
கூந்தன்மேற் கங்கைக் கொழுந்தோடு நன்னுடன்
வேந்தர்மேற் றாதோட விட்டு. ருசு

மாமுத்த வெண்குடையான் மால்களிற்றான் வண்டிரைக்
தாமத் தரிச்சந் திரன்சுவர்க்கி—நாமத்தாற் [குந்
பாவேய்ந்த செந்தமிழா மென்னப் பரந்ததே
கோவேந்தர் செல்வக் குழாம். ருஎ

சேந்தடையும் வண்டுறைதார்ச் செய்யாள் வளர்மார்பன்
கந்தடையும் வேழக் கடைத்தலைவாய்—வந்தடைந்த
பூவேந்தர் தங்கள்கிளை பொன்னகரி லீண்டிற்றே
கோவேந்தன் மாதைக் குறித்து. ருஅ

புள்ளுறையுஞ் சோலைகளும் பூங்கமல வாவிகளும்
உள்ளும் புறமு மினிதுறைந்தார்—தெள்ளரிக்கண்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்றன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு. ருகூ

வழிமேல் விழிவைத்து வாணுதலாள் நாம
மொழிமேற் செவிவைத்து மோகச்—சுழிமேற்றன்
நெஞ்சோட வைத்தயர்வான் கண்டான் நெடுவானின்
மஞ்சோட வன்னம் வர. சுO

முகம்பார்த் தருள்நோக்கி முன்னிரந்து செல்வர்
அகம்பார்க்கு மற்றோரைப் போல—மிகுங்காதல்
கேளா விருந்திட்டா னன்னத்தைக் கேளாரை
வாளான் விருந்திட்ட மன். சுக

அன்னக் குலத்தி னரசே யழிகின்ற
என்னுயிரை மீள வெனக்களித்தாய்—முன்னுரைத்த

தேமொழிக்குத் தீதிலவே யென்றான் திருந்தாரை
ஏமொழிக்கும் வேலா னெடுத்து. சஉ

கோற்றவன்ற னேவலினாற் போயக் குலக்கொடிபால்
உற்றதுவு மீங்கவள்தா னுற்றதுவும்—முற்றும்
மொழிந்ததே யன்னம் மொழிகேட் டரசற்
கழிந்ததே யுள்ள வறிவு. சங

கேட்ட செவிவழியே கேளா துணர்வோட
ஓட்டை மனத்தோ டுயிர்தாங்கி—மீட்டுங்
குழியிற் படுகரிபோற் கோமான் கிடந்தான்
தழலிற் படுதளிர்போற் சாய்ந்து. சச

கோதை சுயம்வரநாள் கொற்றவனுக் குற்றுரைப்ப
ஏதமிலாக் காட்சியர்வந் தெய்தினார்—போதில்
பெடையோடு வண்டுறங்கும் பேரொலிநீர் நாடன்
அடையாத வாயி லகம். சரு

## நளன் சுயம்வரத்திற்கு வருதல்

காவலன்றன் தூதர் கடைகா வலர்க்கறிவித்
தேவலிற்போ யீதென் றியம்புதலும்—மாவிற
பொலிந்ததேர் பூட்டென்றான் பூவாளி பாய
மெலிந்ததோள் வேந்தன் விரைந்து. சசா

கேட்ட சிறுமருங்குற் கீழ்மகளிர் நீள்வரம்பில்
இட்ட பசுங்குவளை யேரடித்த—கட்டி
கரையத்தே னூறுங் கடல்நாட னூர்க்கு
விரையத்தே ரூரென்றான் வேந்து. சஎ

சடைச்செந்நெல் பொன்விளைக்குந் தன்னாடு பின்னாக்
கடற்றானை முன்னாகக் கண்டான்—அடற்கமைந்த
வில்லியரும் பொற்றாம வீமன் திருமகளாம்
நல்லுயிரும் வாழு நகர். சஅ

## நாரதர் தேவருலகு செல்லுதல்

நெற்றித் தனிக்கண் ணெருப்பைக் குளிர்விக்குங்
கொற்றத் தனியாழ்க் குலமுனிவன்—உற்றடைந்தான்
தேனுடுந் தெய்வத் தருவுந் திருமணியும்
வானுடுங் காத்தான் மருங்கு. சுகூ

வீரர் விறல்வேந்தர் விண்ணாடு சேர்கின்றார்
ஆரு மிலராலென் றையுற்று—நாரதனார்
நன்முகமே நோக்கினான் நாகஞ் சிறகரிந்த
மின்முகவேற் கையான் விரைந்து. எo

வீமன் மடந்தை மணத்தின் விரைதொடுத்த
தாமம் புனைவான் சுயம்வரத்து—மாமன்னர்
போயினா ரென்றான் புரந்தரற்குப் பொய்யாத
வாயினான் மாதவத்தோர் மன். எக

அழகு சுமந்திளைத்த ஆகத்தாள் வண்டு
பழகு கருங்கூந்தற் பாவை—மழகளிற்று
வீமன் குலத்துக்கோர் மெய்த்தீபம் மற்றவளே
காமன் திருவுக்கோர் காப்பு. எஉ

## இந்திராதியர் சுயம்வரத்திற்கு வருதல்

மால்வரையை வச்சிரத்தா லீர்ந்தானும் வானவரும்
கோல்வளைதன் மாலை குறித்தெழுந்தார்—சால்புடைய
விண்ணாடு நீங்கி விதர்ப்பன் திருநகர்க்கு
மண்ணாடு நோக்கி மகிழ்ந்து. எங

பைந்தெரியல் வேல்வேந்தன் பாவைபாற் போயினதன்
சிந்தை கெடுத்ததனைத் தேடுவான்—முந்தி
வருவான்போல் தேர்மேல் வருவானைக் கண்டார்
பெருவானில் தேவர் பெரிது. எச

காவற் குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்
ஏவற் றொழிலுக் கிசையென்றான்—ஏவற்கு

மன்னவனும் நேர்ந்தான் மனத்தினுன் மற்றதனை
யின்னதென வோரா திசைந்து. எரு

## தேவர் நளனைத் தமயந்திபால் தூதுவிடல்

செங்கண் மதயானைத் தேர்வேந்தே தேமாலை
யெங்களிலே சூட்ட இயல்வீமன்—மங்கைபால்
தூதாக என்றானத் தோகையைத்தன் ஆகத்தால்
கோதாக வென்றானக் கோ. எசு

தேவர் பணிதலைமேற் செல்லுந் திரிந்தொருகால்
மேவுமிளங் கன்னிபால் மீண்டேகும்—பாவிற்
குழல்போல நின்றுழலுங் கொள்கைத்தே பூவின்
நிழல்போலுந் தண்குடையான் நெஞ்சு. எஎ

ஆவ துரைத்தா யதுவே தலைநின்றேன்
தேவர்கோ னேயத் திருநகரிற்—காவல்
கடக்குமா றென்னென்றான் காமநீ ராழி
யடக்குமா றுள்ளத் தவன். எஅ

வார்வெஞ் சிலையொழிய வச்சிரத்தான் மால்வரையைப்
போர்வெஞ் சிறகறுத்த பொற்றோளான்—யாருமுனைக்
காணார்போய் மற்றவளைக் காணென்றான் கார்வண்டின்
பாணாறுந் தாரானைப் பார்த்து. எகூ

இசைமுகந்த வாயும் இயல்தெரிந்த நாவும்
திசைமுகந்தா லன்ன தெருவும்—வசையிறந்த
பொன்னாடு போந்திருந்தாற் போன்றதே போர்விதர்ப்பன்
நன்னாடர் கோமான் நகர். அ௦

தேங்குவளை தன்னிலே செந்தாமரைமலரப்
பூங்குவளை தாமரைக்கே பூத்ததே—யாங்கு
மதுநோக்குந் தாரானும் வாணுதலுந் தம்மிற்
பொதுநோக் கெதிர்நோக்கும் போது. அக

நீண்ட கமலத்தை நீலக் கடைசென்று
தீண்டு மளவிற் றிறந்ததே—பூண்டதோர்

அற்பின்றாழ் கூந்தலாள் வேட்கை யகத்தடக்கிக்
கற்பின்றாழ் வீழ்த்த கதவு. அஉ

உய்ஞ்சு கரையேற வொட்டுங்கொ லொண்டொடியாள்
நெஞ்சு தடவு நெடுங்கண்கள்—விஞ்சவே
நீண்டதோ வங்ஙனே யிங்ஙனே நீண்மலராள்
ஆண்டதோண் மன்ன னழகு. அங

மன்னகத் துள்ளழுந்தி வாரணிந்த மென்முலையும்
பொன்னனும் புக்சொளிப்பப் புல்லுவனென்—றன்ன
எடுத்தபே ரன்பை யிடையே புகுந்து
தடுத்ததே நாணுந் தறி. அச

## தமயந்தி வினவல்

காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய்
யாவனோ விஞ்சைக் கிறைவனோ—தேவனோ
உள்ளவா சொல்லென்றாள் ஊசற் குழைமீது
வெள்ளவாள் நீர்சோர விட்டு. அரு

தீராத காமத் தழலைத்தன் செம்மையெனும்
நீரா லவித்துக் கொடுநின்று—வாராத
பொன்னாட ரேவலுடன் போந்தவா சொல்லித்தன்
நன்னாடுஞ் சொன்னான் நளன். அசு

என்னுரையை யாதென் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகங் காக்கும் புரவலனை—மென்மாலை
சூட்டுவா யென்றான் தொடையில்தேன் தும்பிக்கே
ஊட்டுவா னெல்லா முரைத்து. அஎ

இயமரநின் றார்ப்ப இனவளைநின் றேங்க
வயமருதோண் மன்ன வகுத்த—சுயம்வரந்தான்
நின்பொருட்டா லென்று நினைகென்றாள் நீள்குடையான்
தன்பொருட்டால் நைவாள் தளர்ந்து. அஅ

போதரிக்கண் மாதராள் பொன்மாலை சூட்டத்தான்
ஆதரித்தார் தம்மோ டவையகத்தே—சோதிச்

செழுந்தரள வெண்குடையாய் தேவர்களும் நீயும்
எழுந்தருள்க வென்றா ளெடுத்து. அசு

வானவர்கோ னேவல் வழிச்சென்று வாணுதலைத்
தானணுகி மீண்டபடி சாற்றவே—தேன்முரலும்
வண்டார் நளன்போந்து வச்சிராயு தற்றொழுதான்
கண்டா ருவப்பக் கலந்து. சுO

விண்ணவர்த மேவலுடன் வீமன் றிருமகள்பால்
நண்ணு புகழ்நளனும் நன்குரைத்த—பெண்ணணங்கின்
வன்மொழியுந் தேவர் மனமகிழத் தான்மொழிந்த
மென்மொழியுஞ் சென்றுரைத்தான் மீண்டு. சுக

## தேவர்கள் நளனுக்கு வரமளித்தல்

அங்கி யமுதநீ ரம்பூ வணியாடை
யெங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே—சங்கையறப்
பெற்றா யெனவருண னுகண் டலன்றருமன்
மற்றோனு மீந்தார் வரம். சுஉ

அங்கவர்கள் வேண்டும் வரங்கொடுக்கப் பெற்றவர்கள்
தங்களொடுந் தார்வேந்தன் சார்ந்தனன்மேல்—மங்கை
வயமருவு கின்ற மணக்கா வலர்க்குச்
சயமரந்தான் கண்டதோர் சார்பு. சுந

## தமயந்தி வருந்தல்

தூதுவந்த காதலனைச் சொல்லிச் செலவிடுத்த
மாதுவந்து பின்போன வன்னெஞ்சால்—யாதும்
அயிர்த்தா ளுயிர்த்தாள் அணிவதன மெல்லாம்
வியர்த்தா ளுரைமறந்தாள் வீழ்ந்து. சுச

உள்ளம்போய் நாண்போ யுரைபோய் வரிநெடுங்கண்
வெள்ளம்போய் வேகின்ற மென்றளிர்போல்—பிள்ளைமீன்
புள்ளரிக்கு நாடன் றிருமடந்தை பூவாளி
உள்ளரிக்கச் சோர்ந்தா ளுயிர். சுரு

பூவின்வாய் வாளி புகுந்த வழியேயென்
ஆவியார் போனாலும் அவ்வழியே—பாவியேன்
ஆசைபோ காதென் றழிந்தா ளணியாழின்
ஓசைபோற் சொல்லா ளுயிர்த்து. ௯௬

## சூரியன் மறைதல்

வையம் பகலிழப்ப வான மொளியிழப்பப்
பொய்கையும் நீள்கழியும் புள்ளிழப்பப்—பையவே
செவ்வாய அன்றில் துணையிழப்பச் சென்றடைந்தான்
வெவ்வாய் விரிகதிரோன் வெற்பு. ௯௭

மாயிரு ஞாலத் துயிர்காண வானரங்கில்
பாயிரு ளென்னும் படாம்வாங்கிச்—சேயின்
றறைந்தா ரணம்பாட வாடிப்போய் வெய்யோன்
மறைந்தான் குடபால் வரை. ௯௮

மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது. ௯௯

புற்கென்றா ரந்தி புனைமலர்க்கண் நீரரும்ப
நிற்கின்ற தந்தோ நிலங்காப்பான்—முற்கொண்
டடைகின்ற வேந்தர்க்கு மாண்டஞ்சி னோர்க்கும்
இடைநின்ற காலம்போ லின்று. ௧௦௦

பைந்தொடியா ளாவி பருகுவான் நிற்கின்ற
அந்தி முறுவலித்த தாமென்ன—வந்ததால்
மையார்வேற் கண்ணாள் வனமுலைமே லாரழலைப்
பெய்வா னமைந்த பிறை. ௧௦௧

## தமயந்தி வருந்தல்

கூட்டுமை போற்சிறந்த கூரிருளைக் கூன்கோட்டாற்
கோட்டுமண் கொண்ட குளிர்திங்கள்—ஈட்டுமணிப்

பூணிலா மென்முலைமேற் போதச் சொரிந்ததே
தீணிலா வென்னு நெருப்பு. க0௨

அன்னங்காள் நீங்களுமவ் வாதித்தன் ருனும்போய்
மன்னும் படியகலா வல்லிரவில்—மின்னும்
மழைத்தாரை வல்லிருட்கும் வாடைக்கு நாங்கள்
பிழைத்தால்வந் தேனென்னும் பேர். க0௩

செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானே—யிப்பொழுது
மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயாற் றெரிந்து. க0௪

கானுந் தடங்காவுங் காமன் படைவீடு
வானுந்தேர் வீதி மறிகடலும்—மீனக்
கொடியாடை வையமெலாங் கோதண்ட சாலை
பொடியாடி கொன்றதெல்லாம் பொய். க0௫

கோள்ளைபோ கின்ற துயிரென்னுங் கோளரவின்
முள்ளெயிறே யூரி நிலாவென்னும்—உள்ளம்
கொடிதிரா வென்னுங் குழையுந் தழல்போல
நெடிதிரா வாய்புலரா நின்று. க0௬

வெங்கதிரோன் றன்னை விழுங்கிப் புழுங்கியோ
கொங்கை யனலிற் கொளுந்தியோ—திங்கள்
விரிகின்ற வெண்ணிலவால் வேகின்ற தேயோ
எரிகின்ற தென்னோ இரா. க0௭

ஊழி பலவோ ரிரவாயிற் றேவென்னும்
கோழி குரலடைத்த தோவென்னும்—ஆழி
துயிலாதோ வென்னுஞ் சுடர்மதியங் கான்ற
வெயிலா லுடலுருகா வீழ்ந்து. க0அ

ஆடி வரிவண் டருகே பறக்கவே
வாடி மெலிவாள் வனமுலைமேல்—ஓடிப்

பொறையாகச் சோர்வாள் பொறுக்குமோ மோகத்
துறைவா யடங்காத் துயர். கOசு

ஈர மதியே யிளநிலவே யிங்ஙனே
சோர்குழலின் மீதே சொரிவதெவன்—மாரன்
பொரவளித்தான் கண்ணி யுனக்குப் புலரா
இரவளித்தா னல்லனோ வின்று. ககO

தாங்கு நிலவின் தழல்போய்த் தலைகொள்ளத்
தேங்குழல்சேர் வண்டு சிறைவெதும்ப—ஓங்குயிர்ப்பின்
தாமங் கரியாத் தனியே தளர்கின்றாள்
யாமங் கரியாக வின்று. ககக

மையிட்ட கண்ணருவி வார வளைசோரக்
கையிற் கபோலத் தலம்வைத்து—மெய்வருந்தித்
தேனிருந்த பூங்கணையே தீயாகத் தேமொழியாள்
தானிருந்து செய்வாள் தவம். ககஉ

அள்ளிக் கொளலா யடையத் திரண்டொன்றாய்க்
கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளாய்—உள்ளம்
புதையவே வைத்த பொதுமகளிர் தங்கள்
இதையமே போன்ற திரா. ககங

ஊக்கிய சொல்ல ரொலிக்குந் துடிக்குரலர்
வீக்கிய கச்சையர் வேல்வாளர்—காக்க
இடையாமங் காவலர்கள் போந்தா ரிருளின்
புடைவா யிருள்புடைத்தாற் போன்று. ககச

சேமங் களிறுபுகத் தீம்பாலின் செவ்வழியாழ்
தாமுள் ளுறைபுகுதத் தார்வண்டு—காமன்றன்
பூவாளி யைந்திற் புகத்துயில் புக்கதே
யோவாது முந்நீ ருலகு. ககரு

ஊன்றின் றுவகையா லுள்ள வுயிர்புறம்பே
தோன்றுங் கழுதுந் துயின்றதே—தான்றன்

உரைசோரச் சோர வுடல்சோர் வாயின்
இரைசோரக் கைசோர நின்று. கக௬

அன்றி லொருகண் துயின்றொருகண் ஆர்வத்தால்
இன்றுணைமேல் வைத்துறங்கு மென்னுஞ்சொல்—இன்று
தவிர்ந்ததே போலரற்றிச் சாம்புகின்ற போதே
யவிழ்ந்ததே கண்ணீ ரவட்கு. ககஎ

ஏழுலகுஞ் சூழிருளா யென்பொருட்டால் வேகின்ற
ஆழ்துயர மேதென் றறிகிலேன்—பாழி
வரையோ வெனுநெடுந்தோண் மன்னவனோ தின்னும்
இரையோ விரவுக் கியான். ககஅ

கருவிக்கு நீங்காத காரிருள்வாய்க் கங்குல்
உருவிப் புகுந்ததா லூதை—பருகிக்கார்
வண்டுபோ கட்ட மலர்போன் மருண்மாலை
யுண்டுபோ கட்ட வுயிர்க்கு. கக௯

எழுந்திருக்கு மேமாந்து பூமாந் தவிசின்
விழுந்திருக்குந் தன்னுடம்பை மீளச்—செழுந்தரளத்
தூணோடு சேர்க்குந் துணையேது மில்லாதே
நாணோடு நின்றழியு நைந்து. கஉ0

விரிகின்ற மெல்லமளி வெண்ணிலவின் மீதே
சொரிகின்ற காரிருள்போற் சோரும்—புரிகுழலைத்
தாங்குந் தளருந் தழலே நெடிதுயிர்க்கும்
ஏங்குந் துயரோ டிருந்து. கஉக

உடைய மிடுக்கெல்லா மென்மேலே யோச்சி
விடிய மிடுக்கின்மை யாலோ—கொடியன்மேல்
மாகாதல் வைத்ததோ மன்னவர்த மின்னருளோ
வேகாத தென்னோ இரா. கஉஉ

மயங்குந் தெளியும் மனநடுங்கும் வெய்துற்
றயங்கும் வறிதே யுலாவும்—வயங்கிழைபோய்ச்

சோருந் துயிலுந் துயிலாக் கருநெடுங்கண்
ணீருங் கடைசோர நின்று. கஉ௩

விழுது படத்திணிந்த வீங்கிருள்வாய்ப் பட்டுக்
கழுதும் வழிதேடுங் கங்குற்—பொழுதிடையே
நீருயிர்க்குங் கண்ணோடு நெஞ்சுருகி வீழ்வார்தம்
ஆருயிர்க்கு முண்டோ அரண். கஉ௪

## சூரியன் உதித்தல்

பூசுரர்தங் கைம்மலரும் பூங்குமுத மும்முகிழ்ப்பக்
காசினியுந் தாமரையுங் கண்விழிப்ப—வாசம்
அலர்ந்ததேதங் கோதையா ளாழ்துயரத் தோடு
புலர்ந்ததே யற்றைப் பொழுது. கஉ௫

வில்லி கணையிழப்ப வெண்மதியஞ் சீரிழப்பத்
தொல்லை யிருள்கிழியத் தோன்றினான்—வல்லி
மணமாலை வேட்டிடுதோள் வாளரசர் முன்னே
குணவாயிற் செங்கதிரோன் குன்று. கஉ௬

முரைசெறிந்த நாளேழும் முற்றியபின் கொற்ற
வரைசெறிந்த தோண்மன்னர் வந்தார்—விரைசெறிந்த
மாலை துவள முடிதயங்க வால்வளையுங்
காலை முரசுங் கலந்து. கஉ௭

மன்றலந்தார் மன்னர் நடுவணைய வந்திருந்தான்
கன்று குதட்டிய கார்நீலம்—முன்றில்
குறுவிழிக்கு நேர்நாடன் கோதைபெருங் கண்ணின்
சிறுவிழிக்கு நோற்றிருந்த சேய். கஉ௮

## தமயந்தி மண்டபம் வருதல்

நித்திலத்திற் பொற்றோடு நீலமணித் தோடாக
மைத்தடங்கண் செல்ல வயவேந்தர்—சித்தம்
மருங்கே வரவண்டின் பந்தர்க்கீழ் வந்தாள்
அருங்கேழ் மணிப்பூ ணணங்கு. கஉ௯

பேதை மடமயிலைச் சூழும் பிணைமான்போல்
கோதை மடமானைக் கொண்டணைந்த—மாதர்
மருங்கின் வெளிவழியே மன்னவர்கண் புக்கு
நெருங்கினவே மேன்மேல் நிறைந்து. கஙo

மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்-மின்னிறத்துச்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னஞ் செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று. கஙக

வடங்கொள் வனமுலையாள் வார்குழைமே லோடும்
நெடுங்கட் கடைபார்த்து நின்றான்—இடங்கண்டு
பூவாளி வேந்தன்றன் பொன்னுவம் பின்னேயிட்
டேவாளி நாணின்மே லிட்டு. கஙஉ

மன்னர் குலமும் பெயரும் வளநாடும்
இன்ன பரிசென் றியலணங்கு—முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினாள்
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து. கஙங

பொன்னி யமுதப் புதுக்கொழுந்து பூங்கமுகின்
சென்னி தடவுந் திருநாடன்—பொன்னின்
சுணங்கவிழ்ந்த பூண்முலையாய் சூழமரிற் றன்னார்
கணங்கவிழ்ந்த வேலனிவன் காண். கஙச

போர்வாய் வடிவேலாற் போழப் படாதோருஞ்
சூர்வாய் மதராிக்கட் டோகாய்கேள்—பார்வாய்ப்
பருத்ததோர் மால்வரையைப் பண்டொருகாற் செண்டால்
திரித்தகோ இங்கிருந்த சேய். கஙரு

வென்றி நிலமடந்தை மென்முலைமேல் வெண்டுகில்போற்
குன்றருவி பாயுங் குடநாடன்—நின்றபுகழ்
மாதே யிவன்கண்டாய் மானத் தனிக்கொடியின்
மீதே சிலையுயர்த்த வேந்து. கஙசு

ஆழி வடிம்பலம்ப நின்றானும் அன்றொருகால்
ஏழிசை நூற் சங்கத் திருந்தானும்—நீள்விசும்பில்
நற்றேவர் தூது நடந்தானும் பாரதப்போர்
செற்றானுங் கண்டாயிச் சேய். கஙஎ

தேரியி லிவன்கண்டாய் செங்கழுநீர் மொட்டை
அரவின் பசுந்தலையென் றஞ்சி—யிரவெல்லாம்
பிள்ளைக் குருகிரங்கப் பேதைப்புட் டாலாட்டும்
வள்ளைக் குருநாடர் மன். கஙஅ

தேமருதார்க் காளை யிவன்கண்டாய் செம்மலர்மேற்
காமருசங் கீன்ற கதிர்முத்தைத்—தாமரைதன்
பத்திரத்தா லேற்கும் படுகர்ப் பழனஞ்சூழ்
மத்திரத்தார் கோமான் மகன். கஙகூ

அஞ்சாயன் மானே யிவன்கண்டா யாலைவாய்
வெஞ்சாறு பாய விளைந்தெழுந்த—செஞ்சாலி
பச்சைத்தாள் மேதிக் கடைவாயிற் பாலொழுகும்
மச்சத்தார் கோமான் மகன். கச0

வண்ணக் குவளை மலர்வெளவி வண்டெடுத்த
பண்ணிற் செவிவைத்தப் பைங்குவளை—யுண்ணா
தருங்கடா நிற்கு மவந்திநா டாளும்
இருங்கடா யானை யிவன். கசக

விடக்கதிர்வேற் காளை யிவன்கண்டாய் மீனின்
தொடக்கொழியப் போய்நிமிர்ந்த தூண்டில்-மடற்கமுகின்
செந்தோடு பீறித்தேன் செந்நெற் பசுந்தோட்டில்
வந்தோடு பாஞ்சாலர் மன். கசஉ

அன்னந் துயிலெழுப்ப வந்தா மரைவயலிற்
செந்நெ லரிவார் சினையாமை—வன்முதுகிற்
கூனிரும்பு தீட்டுங் குலக்கோ சலநாடன்
தேனிருந்த சொல்லாயிச் சேய். கசங

புண்டரிகந் தீயெரிவ போல்விரியப் பூம்புகைபோல்
வண்டிரியுந் தெண்ணீர் மகதர்கோன்—எண்டிசையிற்
போர்வேந்தர் கண்டறியாப் பொன்னுவம் பின்னுடைய
தேர்வேந்தன் கண்டாயிச் சேய். ௧௪௪

கூன்சங்கின் பிள்ளை கொடிப்பவளக் கோடிடறித்
தேன்கழியில் வீழத் திரைக்கரத்தால்—வான்கடல்வந்
தந்தோ வெனவெடுக்கு மங்கநா டாளுடையான்
செந்தேன் மொழியாயிச் சேய். ௧௪௫

வெள்வாளைக் காளைமீன் மேதிக் குலமெழுப்பக்
கள்வார்ந்த தாமரையின் காடுழக்கிப்—புள்ளோடு
வண்டிரியச் செல்லு மணிநீர்க் கலிங்கர்கோன்
தண்டெரியற் றேர்வேந்தன் றான். ௧௪௬

அங்கை வரிவளையா யாழித் திரைகொணர்ந்த
செங்கண் மகரத்தைத் தீண்டிப்போய்—கங்கையிடைச்
சேல்குளிக்குங் கேகயர்கோன் றெவ்வாடற் கைவரைமேல்
வேல்குளிக்க நின்றானிவ் வேந்து. ௧௪௭

மாநீர் நெடுங்கயத்து வள்ளைக் கொடிமீது
தானேகு மன்னந் தனிக்கயிற்றிற்—போநீள்
கழைக்கோ தையரேய்க்குங் காந்தார நாடன்
மழைக்கோதை மானேயிம் மன். ௧௪௮

அங்கை நெடுவேற்கண் ஆயிழையாய் வாவியின்வாய்ச்
சங்கம் புடைபெயரத் தான்கலங்கிச்—செங்கமலப்
பூச்சிந்து நாட்டேறல் பொன்விளக்குந் தண்பணைசூழ்
மாச்சிந்து நாட்டானிம் மன். ௧௪௯

## தேவர்கள் நளனுருவமைந்ததைக் கண்டு தமயந்தி ஐயுறல்

காவலரைத் தன்சேடி காட்டக்கண் டீரிருவர்
தேவர் நளனுருவாச் சென்றிருந்தார்—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணுநின்
றாசலா டுற்றா ளுளம். ௧௫௦

பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கால்
நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்—நீணிலத்து
மற்றேவர் வாராதார் வானவரும் வந்திருந்தார்
பொற்றேர் நளனுருவாய்ப் போந்து. கருக

## தமயந்தி தெய்வத்தை வேண்டல்

மின்னுந்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்
கன்னியா ளுகிற் கடிமாலை—யன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட அருளென்றாள் சூழ்விதியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து. கருஉ

## தமயந்தி நளனை அறிதல்

கண்ணிமைத்த லாலடிகள் காசினியிற் றோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்—எண்ணி
நறுந்தா மரைவிரும்பும் நன்னுதலே யன்னாள்
அறிந்தாள் நளன்றன்னை யாங்கு. கருங

## தமயந்தி நளனுக்கு மாலை சூட்டல்

விண்ணரச ரெல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகன் ஞாலங் களிகூற—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன். கருச

திண்டோள் வயவேந்தர் செந்தா மரைமுகம்போய்
வெண்டா மரையாய் வெளுத்தவே—யொண்டாரைக்
கோமாலை வேலான் குலமாலை வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்த போது. கருரு

மல்லன் மறுகின் மடநா குடனாகச்
செல்லு மழவிடைபோற் செம்மாந்து—மெல்லியலாள்
பொன்மாலை பெறறதோ ளோடும் புறப்பட்டான்
நன்மாலை வேலான் நளன். கருசு

## தேவர்கள் கலியைக் காணுதல்

வேலை பெறுவமுதம் வீமன் றிருமடந்தை
மாலை பெறுதகலும் வானுடர்—வேலை
பொருங்கலிநீர் ஞாலத்தைப் புன்னெறியி லாக்கும்
இருங்கலியைக் கண்டா ரெதிர். 	௧௫௭

ஈங்குவர வென்னென் றிமையவர்தங் கோன்வினவத்
தீங்கு தருகலியுஞ் செப்பினான்—நீங்கள்
விருப்பான வீமன் றிருமடந்தை யோடு
மிருப்பான் வருகின்றேன் யான். 	௧௫௮

மன்னவரில் வைவேல் நளனே மதிவதனக்
கன்னி மணமாலை கைக்கொண்டான்—உன்னுடைய
உள்ளக் கருத்தை யொழித்தே குதியென்றான்
வெள்ளைத் தனியானை வேந்து. 	௧௫௯

## கலி சினங் கொள்ளுதல்

விண்ணரசர் நிற்க வெறுத்தேன் மணமாலை
மண்ணரசர்க் கீந்த மடமாதின்—எண்ணம்
கெடுக்கின்றேன் மற்றவன் கேள்வனுக்குங் கீழ்மை
கொடுக்கின்றே னென்றான் கொதித்து. 	௧௬௦

வாய்மையுஞ் செங்கோல் வளனும் மனத்தின்கட்
டூய்மையும் மற்றவன் தோள்வலியும்—பூமான்
நெடுங்கற்பும் மற்றவர்க்கு நின்றுரைத்துப் போனான்
அடுங்கொற்ற வச்சிரத்தா னங்கு. 	௧௬௧

செருக்கதிர்வேற் கண்ணியுடன் தேர்வேந்தன் கூட
இருக்கத் தரியேன் இவரைப்—பிரிக்க
வுடனாகை வென்றா னுடனே பிறந்த
விடநாக மன்னன் வெகுண்டு. 	௧௬௨

## சூரியன் உதித்தல்

வெங்கதிரோன் றானும் விதர்ப்பன் றிருமடந்தை
மங்களநாள் காண வருவான்போல்—செங்குமுதம்

வாயடங்க மன்னற்கும் வஞ்சிக்கும் நன்னெஞ்சில்
தீயடங்க வேறினன் தேர். ௧௬௩

## மணம் புரிதல்

இன்னுயிர்க்கு நேரே யிளமுறுவ லென்கின்ற
பொன்னழகைத் தாமே புதைப்பார்போன்-மென்மலருஞ்
சூட்டினர் சூட்டித் துடிசே ரிடையாளைப்
பூட்டினர் மின்னிமைக்கும் பூண். ௧௬௪

கணிமொழிந்த நாளிற் கடிமணமுஞ் செய்தார்
அணிமொழிக்கு மண்ண லவற்கும்—பணிமொழியார்
குற்றேவல் செய்ய கொழும்பொன் னறைபுக்கார்
மற்றெவரு மொவ்வார் மகிழ்ந்து. ௧௬௫

## புணர்ச்சி வகை கூறல்

செந்திருவின் கொங்கையினுந் தேர்வேந்த னகத்தும்
வந்துருவ வார்சிலையைக் கால்வளைத்து—வெந்தீயும்
நஞ்சுந் தொடுத்தனைய நாம மலர்வாளி
யஞ்சுந் தொடுத்தா னவன். ௧௬௬

ஒருவ ருடலி லொருவ ரொதுங்கி
யிருவ ரெனுந்தோற்ற மின்றிப்—பொருவெங்
கனற்கேயும் வேலானுங் காரிகையுஞ் சேர்ந்தார்
புனற்கே புனற்கலந்தாற் போன்று. ௧௬௭

குழைமேலுங் கோமா னுயிர்மேலுங் கூந்தன்
மழைமேலும் வாளோடி மீள—விழைமேலே
அல்லோடும் வேலா னகலத் தொடும்பொருதாள்
வல்லோடுங் கொங்கை மடுத்து. ௧௬௮

வீரனக லச்செறுவின் மீதோடிக் குங்குமத்தின்
ஈர இளவண்ட லிட்டதே—நேர்பொருத
காராரு மெல்லோதிக் கன்னியவள் காதலெனும்
ஓரா றுபாய வுடைந்து. ௧௬௯

கொங்கை முகங்குழையக் கூந்தன் மழைகுலையச்
செங்கயற்க ணோடிச் செவிதடவ—அங்கை
வளைபூச லாட மடந்தையுடன் சேர்ந்தான்
விளைபூசற் கொல்யானை வேந்து. கள0

தையல் தளிர்க்கரங்கள் தன்தடக்கை யாற்பற்றி
வைய முழுதும் மகிழ்தூங்கத்—துய்ய
மணந்தான் முடித்ததற்பின் வாணுதலுந் தானும்
புணர்ந்தார் நெடுங்காலம் புக்கு. களக

சுயம்வர காண்டம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் - களஎ.

---

# உ. கலிதொடர் காண்டம்

## காப்பு

முந்தை மறைநூன் முடியெனலாந் தண்குருகூர்ச்
செந்தமிழ் வேத சிரமெனலாம்—நந்தும்
புழைக்கைக்கு நேயப் பொதுவர் மகளிர்க்கும்
அழைக்கைக்கு முன்செல் லடி. க

சேக்கர் நடுவானிற் றிங்கள் நிலாத்துளும்பி
உக்க தெனச்சடைமே லும்பர்நீர்—மிக்கொழுகும்
வெள்ளத்தான் வெள்ள நெடுங்கிரியான் மெய்யன்ப
ருள்ளத்தா னெங்கட் குளன். உ

### நளன் மனைவியுடன் தன்னகர்க் கேகுதல்

தவளத் தனிக்குடையின் வெண்ணிழலுந் தையல்
குவளைக் கருநிழலுங் கொள்ளப்—பவளக்
கொழுந்தேறிச் செந்நெற் குலைசாய்க்கு நாடன்
செழுந்தேரி லேறினன் சென்று. ௩

## பெண்கள் பூக்கொய்தலும் நீர் விளையாடலும் நளன் தமயந்திக்குக் காட்டல்

மங்கையர்கள் வாச மலர்கொய்வான் வந்தடையப்
பொங்கி யெழுந்த பொறிவண்டு—கொங்கோ
டெதிர்கொண் டணைவனபோ லேங்குவன முத்தின்
கதிர்கொண்ட பூண்முலையாய் காண். ச

பாவையர்கை தீண்டப் பணியாதார் யாவரே
பூவையர்கை தீண்டுமப் பூங்கொம்பு—மேவியவர்
பொன்னடியிற் றாழ்ந்தனவே பூங்குழலாய் காணென்றான்
மின்னெடுவேற் கையான் விரைந்து. ரு

மங்கை யொருத்தி மலர்கொய்வாள் வாண்முகத்தைப்
பங்கயமென் றெண்ணிப் படிவண்டைச்—செங்கையால்
காத்தாளக் கைம்மலரைக் காந்தளெனப் பாய்தலுமே
வேர்த்தாளைக் காணென்றான் வேந்து. சா

புல்லும் வரிவண்டைக் கண்டு புனமயில்போல்
செல்லும் மடந்தை சிலம்பவித்து—மெல்லப்போய்
அம்மலரைக் கொய்யா தருந்தளிரைக் கொய்வாளைச்
செம்மலரிற் றேனே தெளி. எ

கொய்த மலரைக் கொடுங்கையி லணைத்து
மொய்குழலிற் சூட்டுவான் முன்வந்து—தையலாள்
பாதார விந்தத்தே சூட்டினன் பாவையிடைக்
காதார மின்மை யறிந்து. அ

ஏற்ற முலையார்க் கிளைஞ ரிடும்புலவித்
தோற்ற வமளியெனத் தோற்றுமால்—காற்றசைப்ப
உக்க மலரோ டுகுத்தவளை முத்தமே
எக்கர் மணன்மே லிசைந்து. கூ

அலர்ந்த மலர்சிந்தி யம்மலர்மேற் கொம்பு
உலர்ந்தசைந்து பூவணைமேற் புல்லிக்—கலந்தொசிந்த

புல்லென்ற கோலத்துப் பூவையரைப் போன்றதே
அல்லென்ற சோலை யழகு. ௧௦

கொங்கை முகத்தணையக் கூட்டிக் கொடுங்கையால்
அங்கணைக்க வாய்நெகிழ்ந்த வாம்பற்பூக்-கொங்கவிழ்தேன்
வார்க்கின்ற கூந்தன் முகத்தை மதியென்று
பார்க்கின்ற தென்னலாம் பார். ௧௧

கோய்த குவளை கிழித்துக் குறுநுதன்மே
லெய்தத் தனிவைத்த ஏந்திழையாள்—வையத்தார்
உண்ணுக் கடுவிடத்தை யுண்ட வொருமூன்று
கண்ணனைப் போன்றனளே காண். ௧௨

கொழுநன் கொழுந்தாரை நீர்வீசக் கூசிச்
செழுமுகத்தைத் தாமரைக்கே சேர்த்தாள்—கெழுமியவக்
கோமகற்குத் தானினைந்த குற்றங்க ளத்தனையும்
பூமகட்குச் சொல்லுவாள் போல். ௧௩

போய்தற் கமலத்தின் போதிரண்டைக் காதிரண்டிற்
பெய்து முகமூன்று பெற்றாள்போல்—எய்த
வருவாளைப் பாரென்றான் மாற்றாரை வென்று
செருவாளைப் பார்த்துவக்குஞ் சேய். ௧௪

பொன்னுடைய வாசப் பொகுட்டு மலரலையத்
தன்னுடனே மூழ்கித் தனித்தெழுந்த—மின்னுடைய
பூணாள் திருமுகத்தைப் புண்டரிக மென்றயிர்த்துக்
காணா தயர்வாளைக் காண். ௧௫

சிறுக்கின்ற வாண்முகமுஞ் செங்காந்தட் கையான்
முறுக்குநெடு மூரிக் குழலுங்—குறிக்கிற்
கரும்பாம்பு வெண்மதியைக் கைக்கொண்ட காட்சி
யரும்பாம் பணைமுலையா யாம். ௧௬

சோர்புனலின் மூழ்கி யெழுவாள் சுடர்நுதன்மேல்
வார்குழலை நீக்கி வருந்தோற்றம்—பாராய்

விரைகொண் டெழுந்தபிறை மேகத் திடையே
புரைகின்ற தென்னலாம் பொற்பு. ௧௭

செழுநீல நோக்கெறிப்பச் செங்குவளை கொய்வாள்
முழுநீல மென்றயிர்த்து முன்னர்க்—கழுநீரைக்
கொய்யாது போவாளைக் கோல்வளைக்குக் காட்டினான்
வையாரும் வேற்றடக்கை மன். ௧அ

## தமயந்தியும் நளனும் நீராடல்

காவி பொருநெடுங்கட் காதலியுங் காதலனும்
வாவியு மாறுங் குடைந்தாடித்—தேவிற்
கழியாத சிந்தையுடன் கங்கைநதி யாடி
ஒழியா துறைந்தா ருவந்து. ௧௯

## நளன் தமயந்திக்குச் சோலை காட்டல்

நறையொழுக வண்டுறையும் நன்னகர்வாய் நாங்கள்
உறையு மிளமரக்கா வொக்கும்—இறைவளைக்கைச்
சிற்றிடையாய் பேரல்குற் றேமொழியாய் மென்முறுவற்
பொற்றொடியாய் மற்றிப் பொழில். ௨௦

கன்னியர்தம் வேட்கையே போலுங் களிமழலை
தன்மணிவா யுள்ளே தடுமாற—மன்னவனே
இக்கடிகா நீங்கள் உறையு மிளமரக்கா
ஒக்குமதோ வென்றா ளுயிர்த்து. ௨௧

தொண்டைக் கனிவாய் துடிப்பச் சுடர்நுதன்மேல்
வெண்டரள மென்ன வியர்வரும்பக்—கெண்டைக்
கடைசிவப்ப நின்றாள் கழன்மன்னர் வெள்ளைக்
குடைசிவப்ப நின்றான் கொடி. ௨௨

தங்கள் புலவித் தலையிற் றனித்திருந்த
மங்கை வதன மணியரங்கில்—அங்கண்
வடிவாண்மேற் கால்வளைத்து வார்புருவ மென்னுங்
கொடியாடக் கண்டானோர் கூத்து. ௨௩

சில்லரிக் கிண்கிணிமென் தெய்வமலர்ச் சீறடியைத்
தொல்லை மணிமுடிமேற் சூட்டினன்—வல்லை
முழுநீலக் கோதை முகத்தே மலர்ந்த
செழுநீல மாறுச் சிவப்பு. ௨௪.

அங்கைவேன் மன்ன னகல மெனுஞ்செறுவில்
கொங்கையேர் பூட்டிக் குறுவியர்நீர்—அங்கடைத்துக்
காதல் வரம்பொழுக்கிக் காமப் பயிர்விளைத்தாள்
கோதையரின் மேலான கொம்பு. ௨௫

வேரி மழைதுளிக்கும் மேகக் கருங்கூந்தற்
காரிகையுந் தானும்போய்க் கண்ணுற்றான்—மூரித்
திரையேற மென்கிடங்கிற் சேலேற வாளை
கரையேறுங் கங்கைக் கரை. ௨௬

சூதக் கனியூற லேற்ற சுருள்வாழை
கோதி னறவேற்குங் குப்பியென—மாதரார்
ஐயுற்று நோக்கு மகன்பொழில்சென் றெய்தினன்
வையுற்ற வேற்றானை மன். ௨௭

## நளன் தமயந்தியுடன் தன்னகர் சேர்தல்

வான்றோய நீண்டுயர்ந்த மாடக் கொடிநுடங்கத்
தான்றோன்று மற்றித் தடம்பதிதான்—வான்றோன்றி
வில்விளக்கே பூக்கும் விதர்ப்பனா டாளுடையான்
நல்விளக்கே யெங்கள் நகர். ௨௮

பொய்கையும் வாசப் பொழிலும் எழிலருவிச்
செய்குன்று மாறுந் திரிந்தாடித்—தையலுடன்
ஆறிரண்டாண் டெல்லை கழித்தா னடையலரைக்
கூறிரண்டாக் கொல்யானை கோ. ௨௯

கோல நிறம்விளர்ப்பக் கொங்கை முகங்கருக
நீல நிறமயிர்க்கால் நின்றெறிப்ப—நூலென்னத்
தோன்றாத நுண்மருங்குல் தோன்றச் சுரிகுழலாள்
ஈன்றாள் குழவி யிரண்டு. ௩௦

ஆண்டிரண்டா றெல்லை யளவுந் திரிந்தேயுங்
காண்டகைய வெங்கலியுங் காண்கிலான்—நீண்டபுகழ்ச்
செந்நெறியாற் பார்காத்த செங்கோல் நிலவேந்தன்
றன்னெறியால் வேறோர் தவறு. ௩௧

## கலி நளனைச் சேர்தல்

சந்திசெயத் தாள்விளக்கத் தாளின்மறுத் தான்கண்டு
புந்தி மகிழப் புகுந்துகலி—சிந்தையெலாந்
தன்வயமே யாக்கித் தமைய னுடனிருந்தான்
பொன்னசல மார்பற் புகைந்து. ௩௨

நாராய ணாய நமவென் றவனடியிற்
சேராரை வெந்துயரஞ் சேர்ந்தாற்போல்—பாராளுங்
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி
கற்றவனைச் சேர்ந்தான் கலி. ௩௩

## கலி புட்கரனை நளனுடன் சூதாட அழைத்தல்

நன்னெறியில் சூதால் நளனைக் களவியற்றித்
தன்னரசு வாங்கித் தருகின்றேன்—மன்னவனே
போதுவா யென்னுடனே யென்றான் புலைநரகுக்
கேதுவாய் நின்றா னெடுத்து. ௩௪

புன்னை நறுமலரின் பூந்தா திடையொதுங்கும்
கன்னி யிளமேதிக் காற்குளம்பு—பொன்னுரைத்த
கல்லேய்க்கு நாடன் கவராடப் போயினான்
கொல்லேற்றின் மேலேறிக் கொண்டு. ௩௫

வெங்கட் சினவிடையின் மேலேறிக் காலேறிக்
கங்கைத் திரைநீர் கரையெறிச்—செங்கதிர்ப்பைம்
பொன்னொழியப் போதும் புறம்பணைசூழ் நன்னாடு
பின்னொழியப் போந்தான் பெயர்ந்து. ௩௬

அடற்கதிர்வேன் மன்ன னவனேற்றின் முன்போய்
யெடுத்தகொடி யென்னகொடி யென்ன—பிடற்கூரு
வெல்லுங் கொடியென்றான் வெங்கலியா லங்கவன்மேற்
செல்லுங் கொடியோன் றெரிந்து. ௩௭

### நளன் சூதாடச் சம்மதித்தல்

என்றோ மிதுவாயின் மெய்ம்மையே யெம்மோடு
வான்றோய் மடற்றெங்கின் வான்றேறல்—தான்றேக்கி
மீதாடி வாளைவயல் வீழ்ந்துழக்கு நன்னாடன்
சூதாட வென்றான் துணிந்து. ௩௮

### மந்திரி முதலானோர் நளனுக்குப் புத்திகூறல்

காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
ஈதன் மறுத்த லிவைகண்டாய்—போதில்
சினையாமை வைகுந் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி. ௩௯

அறத்தைஅவே கல்லும் அருநரகிற் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்—மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ என்றார் தெரிந்து. ௪0

உருவழிக்கும் உண்மை யுயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கும் மானஞ் சிதைக்கும்—மருவும்
ஒருவரோ டன்பழிக்கும் ஒன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து. ௪௧

ஆயம் பிடித்தாரும் அல்லற் பொதுமகளிர்
நேயம் பிடித்தாரும் நெஞ்சிடையே—மாயம்
பிடித்தாரின் வேறல்ல ரென்றுரைப்ப தன்றே
வடித்தாரின் னூலோர் வழக்கு. ௪௨

### மந்திரியை நளன் கோபித்தல்

தீது வருக நலம்வருக சிந்தையாற்
சூது பொரஇசைந்து சொல்லினோம்—யாதும்
விலக்கலிர்நீ ரென்றான் வராலேற மேதி
கலக்கலைநீர் நாடன் கனன்று. ௪௩

### புட்கரன் நளனைப் பந்தயம் யாதெனல்

நிறையில் கவறாடல் நீநினைந்தை யாகில்
திறையிற் கதிர்முத்தஞ் சிந்தும்—துறையில்

கரும்பொடியா மள்ளர் கடாவடிக்கு நாடா
பொரும்படியா தென்றுனிப் போது. சச

## பந்தயம் வைத்தல்

விட்டொளிர்வில் வீசு விளங்குமணிப் பூண்ஹாரம்
ஒட்டினேன் உன்பணைய மோதென்ன—மட்டவிழ்தார்
மல்லேற்ற தோளானும் வான்பணைய மாகத்தன்
கொல்லேற்றை வைத்தான் குறித்து. சரு

## நளன் தோற்றல்

காரேயுங் கூந்தலார் காரிகைமேற் காதலித்த
தாரேயுந் தோளான் தனிமனம்போல்—நேரே
தவறுய்ப் புரண்ட தமையனொடுங் கூடிக்
கவறுய்ப் புரண்டான் கலி. சசு

வைத்த மணியாரம் வென்றேன் மறுபலகைக்
கொத்த பணைய முரையென்ன—வைத்தநிதி
நூரு யிரத்திரட்டி நூறுநா ருயிரமும்
வேருகத் தோற்றுனவ் வேந்து. சஎ

பல்லா யிரம்பரியும் பத்துநா ருயிரத்துச்
சொல்லார் மணித்தேருந் தோற்றதற்பின்—வில்லாட்கள்
முன்தோற்று வானின் முகில்தோற்கும் மால்யானை
பின்தோற்றுத் தோற்றுன் பிடி. சஅ

சாதுரங்கம் வென்றேன் தரும்பணைய மேதென்ன
மாதுரங்கம் பூணு மணித்தேரான்—சூதரங்கில்
பாவையரைச செவ்வழியாழ்ப் பண்ணின்மொழிப் பின்னுகுழற்
பூவையரைத் தோற்றுன் பொருது. சகூ

கற்பின் மகளிர்பா னின்றுந் தமைக்கவட்டின்
விற்கு மகளிர்பான் மீண்டாற்போல்—நிற்கும்
நெறியானை மெய்ம்மைவாய் நின்றானை நீங்கிச்
சிறியானைச் சேர்ந்தாள் திரு. ருo

## புட்கரன் தமயந்தியைப் பந்தயமாக வைக்கச் சொல்லுதல்

மனைக்குரியா ரன்றே வருந்துயரந் தீர்ப்பார்
சினைச்சங்கின் வெண்டலையைத் தேனல்—நனைக்கும்

குவளைப் பணைப்பைந்தாட் குண்டுநீர் நாடா
இவளைப் பணையந்தா இன்று. ௫௧

## நளன் தமயந்தியைக் கானகஞ் செல்ல அழைத்தல்

இனிச்சூ தொழிந்தோ மினவண்டு கிண்டிக்
கனிச்சூத வார்பொழிலின் கண்ணே—பனிச்சூதப்
பூம்போ தவிழ்க்கும் புனனாடன் பொன்மகளே
நாம்போது மென்றான் நளன். ௫௨

மென்காற் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப்
புன்காகங் கொள்ளத்தான் போனாற்போல்—தன்கால்
பொடியாடத் தேவியொடும் போயினா னன்றே
கொடியானுக் கப்பார் கொடுத்து. ௫௩

கடப்பா ரெவரே கடுவினையை வீமன்
மடப்பாவை தன்னுடனே மன்னன்—நடப்பான்
வனத்தே செலப்பணித்து மாயத்தாற் சூழ்ந்த
தனைத்தே விதியின் வலி. ௫௪

## நகரத்தார் வருந்தல்

ஆருயிரின் தாயே அறத்தின் பெருந்தவமே
பேரருளின் கண்ணே பெருமானே—பாரிடத்தை
யார்காக்கப் போவதுநீ யாங்கென்றார் தங்கண்ணில்
நீர்வார்த்துக் கால்கழுவா நின்று. ௫௫

வேலை கரையிழந்தால் வேத நெறிபிறழ்ந்தால்
ஞால முழுதும் நடுவிழந்தால்—சீலம்
ஒழிவரோ செம்மை உரை திறம்பாச் செய்கை
அழிவரோ செங்கோ லவர். ௫௬

வடியேறு கூரிலைவேன் மன்னவோ உன்றன்
அடியேங்கட் காதரவு தீரக்—கொடிநகரில்
இன்றிருந்து நாளை யெழுந்தருள்க வென்றுரைத்தார்
வென்றிருந்த தோளான்றாள் வீழ்ந்து. ௫௭

மன்றலிளங் கோதை முகநோக்கி மாநகர்வாய்
நின்றுருகு வார்கண்ணின் நீர்நோக்கி—இன்றிங்

கிருத்துமோ வென்றான் இளங்குதலை வாயாள்
வருத்தமோ தன்மனத்தின் வைத்து. ருஅ

## நளனைப் புகழ்வாரைக் கொல்லப் புட்கரன் கட்டளையிடல்

வண்டாடுந் தார்நளனை மாநகரில் யாரேனும்
கொண்டாடி னார்தம்மைக் கொல்லென்று—தண்டா
முரசறைவா யாங்கென்றான் முன்னே முனிந்தாங்
கரசறியா வேந்த னழன்று. ருக

அறையும் பறையரவங் கேட்டழிந்து நைந்து
பிறைநுதலாள் பேதைமையை நோக்கி—முறுவலியா
இந்நகர்க்கீ தென்பொருட்டா வந்த தெனவுரைத்தான்
மன்னகற்றுங் கூரிலைவேன் மன். சு0

## நளன் மனைவி மக்களுடன் நகர் நீங்கல்

தன்வாயின் மென்மொழிபே தாங்கினான் ஓங்குநகர்ப்
பொன்வாயில் பின்னாகப் போயினான்—முன்னாளில்
பூமகளைப் பாரினொடும் புல்லினான் றன்மகனைக்
கோமகளைத் தேவியொடுங் கொண்டு. சுக

கோற்றவன்பாற் செல்வாரைக் கொல்வான் முரசறைந்து
வெற்றியொடு புட்கரனும் வீற்றிருப்ப—முற்றும்
இழவு படுமாபோ லில்லங்கள் தோறும்
குழவிபா லுண்டிலவே கொண்டு. சுஉ

## மக்கள் பெற்றோரை நோக்கிக் கூறுவது

சந்தக் கழற்றா மரையுஞ் சதங்கையணி
பைந்தளிரும் நோவப் பதைத்துருகி—எந்தாய்
வடந்தோய் களிற்றாய் வழியான வெல்லாங்
கடந்தோமோ வென்றார் கலுழ்ந்து. சுங

## நளன் வருந்தல்

தூய தன் மக்கள் துயர்நோக்கிச் சூழ்கின்ற
மாய விதியின் வலிநோக்கி—யாதும்
தெரியாது சித்திரம்போல் நின்றிட்டான் செம்மை
புரிவான் துயராற் புலர்ந்து. சுச

### நளன் கூறல்

காத லிருவரையுங் கொண்டு கடுஞ்சுரம்போக்
கேத முடைத்திவரைக் கொண்டுநீ—மாதராய்
வீமன் திருநகர்க்கே மீளென்றான் விண்ணவர்முன்
தாமம் புனைந்தாளைத் தான். கூ௫

### தமயந்தி கூறல்

குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரையும்
பெற்றுக் கொளலாம் பெறலாமோ—கொற்றவனே
கோக்கா தலனைக் குலமகளுக் கென்றுரைத்தாள்
நோக்கான் மழைபொழியா நொந்து. கூசு

### நளன் கூறுவது

கைதவந்தான் நீக்கிக் கருத்திற் கறையகற்றிச்
செய்தவந்தா மெத்தனையுஞ் செய்தாலும்—மைதீர்
மகப்பெறு மாதுடர்கள் வானவர்த மூர்க்குப்
புகப்பெறார் மாதராய் போந்து. கூஎ

பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ—இன்னடிசில்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர். கூஅ

சொன்ன கலையின் துறையனைத்துந் தோய்ந்தாலும்
என்ன பயனுடைத்தாம் இன்முகத்து—முன்னங்
குறுகுதலைக் கிண்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி. கூகூ

### தமயந்தி கூறுவது.

போற்றரிய செல்வம் புனலுட் டொடும்போதத்
தோற்றமையும் யாவர்க்குந் தோற்றாதே—ஆற்றலாய்
எம்பதிக்கே போந்தருளு கென்றாள் எழிற்கமலச்
செம்பதிக்கே வீற்றிருந்த தேன். எ0

### நளன் உரைப்பது

சினக்கதிர்வேற் கண்மடவாய் செல்வர்பாற் சென்றீ
யெனக்கென்னு மிம்மாற்றங் கண்டாய்—தனக்குரிய

தானந் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானந் துடைப்பதோர் வாள். எ௧

மன்னராய் மன்னர் தமையடைந்து வாழ்வெய்தி
யின்னமுதந் தேக்கி யிருப்பாரேல்—சொன்ன
பெரும்பே டிகளலரேல் பித்தரே யன்றோ
அரும்பேடை மானே யவர். எ௨

தமயந்தி உரைப்பது

செங்கோலா யுன்றன் திருவுள்ள மீதாயின்
எங்கோன் விதர்ப்பன் எழில்நகர்க்கே—நங்கோலக்
காதலரைப் போக்கி யருளென்றாள் காதலருக்
கேதிலரைப் போல வெடுத்து. எ௩

நளன் ஒரு பார்ப்பானை நோக்கிச் சொல்லுதல்

பேதை பிரியப் பிரியாத பேரன்பின்
காதலரைக் கொண்டுபோய்க் காதலி தன—தாதைக்குக்
காட்டுநீ யென்றான் கழியாத வுள்ளத்தை
வாட்டுநீர் கண்ணிலே வைத்து. எ௪

மக்கள் பெற்றோர் முகத்தை நோக்கிக் கூறல்

தந்தை திருமுகத்தை நோக்கித் தமைப்பயந்தாள்
இந்து முகத்தை யெதிர்நோக்கி—யெந்தம்மை
வேறாகப் போக்குதிரோ என்னா வழுவழுது
ஆறாகக் கண்ணீ ரழுது. எ௫

தமயந்தி மக்களை மார்போடு அணைத்தல்

அஞ்சனந்தோய் கண்ணி லருவிநீ ராங்கவர்க்கு
மஞ்சனநீ ராக வழிந்தோட—நெஞ்சுருகி
வல்லிவிடா மெல்லிடையாள் மக்களைத்தன் மார்போடும்
புல்லிவிடா நின்றாள் புலர்ந்து. எ௬

மக்கள் குண்டினபுரஞ் சேர்தல்

இருவ ருயிரு மிருகையான் வாங்கி
யொருவன்கொண் டேகுவா னொத்து—வருமறையோன்
கோமைந்த னோடிளைய கோதையைக்கொண் டேகினான்
வீம னகர்க்கே விரைந்து. எஎ

காத லவர்மேலே கண்ணோட விண்ணோடும்
ஊதை யெனநின் றுயிர்ப்போட—யாதும்
உரையாடா துள்ள மொடுங்கினான் வண்டு
விரையாடுந் தாரான் மெலிந்து. எஅ

சேலுற்ற வாவித் திருநாடு பின்னொழியக்
காலிற்போய்த் தேவியொடுங் கண்ணுற்றான்-ஞாலஞ்சேர்
கள்ளிவே கத்தரவின் கண்மணிகள் தாம்பொடியாத்
துள்ளிவே கின்ற சுரம். எகூ

### கலி புள் வடிவாய்த் தோன்றல்

கன்னிறத்த சிந்தைக் கலியுமவன் முன்பாகப் [றிக்கே
பொன்னிறத்த புள்வடிவாய்ப் போந்திருந்தான்—நன்னெ
அஞ்சிப்பா ரீந்த அரசனையுந் தேவியையும்
வஞ்சிப்பான் வேண்டி வனத்து. அ0

### தமயந்தி பறவையைப் பிடித்துத் தா வெனல்

தேன்பிடிக்குந் தண்டுழாய்ச் செங்கட் கருமுகிலை
மான்பிடிக்கச் சொன்ன மயிலேபோல்—தான்பிடிக்கப்
பொற்புள்ளைப் பற்றித்தா வென்றாள் புதுமழலைச்
சொற்கிள்ளை வாயாள் தொழுது. அக

### நளன் அப்போற்பறவையைப் பிடித்தல்

பொற்புள் ளதனைப் பிடிப்பான் நளன்புகுதக்
கைக்குள் வருமாபோற் கழன்றோடி—எய்க்கும்
இளைக்குமா போல இருந்ததுகண் டன்றே
வளைக்குமா றெண்ணினான் மன். அஉ

கோற்றக் கயற்கட் கோடியே யிருவேமும்
ஒற்றைத் துகிலா னுடைபுனைந்து—மற்றிந்தப்
பொற்றுகிலாற் புள்வளைக்கப் போதுவோ மெனறுரைத்தான
பற்றகலா வுள்ளம் பரிந்து. அங

எற்றித் திரைபொரநொந் தேறி யிளமணலிற்
பற்றிப் பவளம் படர்நிழற்கீழ்—முத்தீன்று
வெள்வளைத்தா யோடுநீர் வேலைத் திருநாடன்
புள்வளைத்தா னுடையாற் போந்து. அசு

## பறவை சொல்லுதல்

கூந்த லிளங்குயிலுங் கோமானுங் கொண்டணைத்த
பூந்துகில்கொண் டந்தரத்தே போய்நின்று—வேந்தனே
நன்னுடு தோற்பித்தோன் நானேகா ணென்றதே
பொன்னுடு மானிறத்த புள். அரு

காவிபோற் கண்ணிக்குங் கண்ணியங்தோட் காளைக்கும்
ஆவிபோ லாடையுமொன் றுனதே—பூவிரியக்
கள்வேட்டு வண்டுழலுங் கானத் திடைக்கனகப்
புள்வேட்டை யாதரித்த போது. அசு

## தமயந்தி வருந்தல்

அறம்பிழைத்தார் பொய்த்தார் அருள்சிதைத்தார் மானத்
திறம்பிழைத்தார் தெய்வ மிகழ்ந்தார்—புறங்கடையிற்
சென்றுர் புகுநரகஞ் சேர்வாய்கொல் என்றழியா
நின்றுள் விதியை நினைந்து. அஎ

வையந் துயருழப்ப மாயம் பலசூழ்ந்து
தெய்வங் கெடுத்தாற் செயலுண்டோ—மெய்வகையே
சேர்ந்தருளி நின்றதனிச் செங்கோலா யிங்கொழியப்
போந்தருளு கென்றுள் புலர்ந்து. அஅ

## சூரியன் மறைதல்

அந்த நெடுஞ்சுரத்தின் மீதேக ஆங்கழலும்
வெந்தழலை யாற்றுவான் மேற்கடற்கே—யெந்தை
குளிப்பான்போற் சென்றடைந்தான் கூரிருளாற் பாரை
யொளிப்பான்போல் பொற்றே ருடன். அகூ

பானு நெடுந்தேர் படுகடலிற் பாய்ந்ததற்பின்
கான அடம்பின் கவட்டிலைகள்—மானின்
குளம்பேய்க்கு நன்னுடன் கோதையொடுஞ் சென்றுன்
இளம்பேய்க்குந் தோன்று இருள். கூ0

## பாழ் மண்டபங் காணல்

எங்காம் புகலிடமென் றெண்ணி யிருள்வழிபோய்
வெங்கா னகந்திரியும் வேலைதனில்—அங்கேயோர்

பாழ்மண் டபங்கண்டான் பால்வெண் குடைநிழற்கீழ்
வாழ்மண் டபங்கண்டான் வந்து. சுக

### அம்மண்டபத்தில் இருவரும் உறங்குதல்

மூரி யிரவும்போய் முற்றிருளாய் மூண்டதால்
சாரு மிடமற்றுத் தானில்லை—சோர்கூந்தல்
மாதராய் நாமிந்த மண்டபத்தே கண்டுயிலப்
போதரா யென்றான் புலர்ந்து. சுஉ

### தமயந்தி வருந்தல்

வைய முடையான் மகரயாழ் கேட்டருளும்
தெய்வச் செவிகொதுகின் சில்பாடல்—இவ்விரவில்
கேட்டவா வென்றழுதாள் கெண்டையங்கண் ணீர்சோரத்
தோட்டவார் கோதையாள் சோர்ந்து. சுங

### அரசன் அவளைத் தேற்றல்

பண்டை வினைப்பயனைப் பாரிடத்தி லார்கடப்பார்
கொண்டல் நிழலிற் குழைதடவுங்—கெண்டை
வழியனீ ரென்றான் மனநடுங்கி வெய்துற்
றழியனீ யென்றா னரசு. சுச

விரைமலர்ப்பூ மெல்லணையும் மெய்காவல் பூண்ட
பரிசனமும் பள்ளி யறையும்—அரைசேநான்
காணேனிங் கென்னாக் கலங்கினாள் கண்பனிப்பப்
பூணேர் முலையாள் புலர்ந்து. சுரு

தீய வனமுந் துயின்று திசைதுயின்று
பேயுந் துயின்றதாற் பேர்யாமம்—நீயுமினிக்
கண்மேற் றுயில்கை கடனென்றான் கைகொடுத்து
மண்மேற் றிருமேனி வைத்து. சுசா

### நளன் வருந்தல்

தன்கண்கூர் யாமத்துப் பூமிமேல் தான்படுத்துப்
புன்கண் துயில்வாளைத் தான்கண்டும்—என்கண்
பொடியாதால் உள்ளாவி போகாதால் நெஞ்சம்
வெடியாதா லென்றான் விழுந்து. சுஎ

### தமயந்தி வருந்தல்

முன்றிறனின் மேற்படுக்க முன்ரு னையுமின்றி
இன்று துயில விறைவனுக்கே—என்றனது
கைபுகுந்த தென்னுடைய கால்புகுந்த தென்றழுதாள்
மைபுகுந்த கண்ணீர் வர. கூஅ

### நளன் கூறல்

வீமன் திருமடந்தை விண்ணவரும் பெற்றிலாத்
தாமமெனக்களித்த தையலாள்—யாமத்துப்
பாரே யணையாப் படைக்கண் துயின்ருள்மற்
ருரே துயரடையா ராங்கு. கூகூ

### கலி வலியால் தமயந்தியைப் பிரிய நினைத்தல்

பெய்ம்மலர்ப்பூங் கோதை பிரியப் பிரியாத
செம்மை யுடைமனத்தன் செங்கோலான்—பொய்ம்மை
விலக்கினன் நெஞ்சத்தை வேருக்கி நின்று
கலக்கினன் வஞ்சக் கலி. க00

வஞ்சக் கலிவலியான் மாகத் தராவளைக்குஞ்
செஞ்சுடரின் வந்த கருஞ்சுடர்போல்—விஞ்ச
மதித்ததேர்த் தானை வயவேந்தன் நெஞ்சத்
துதித்ததே வேருே ருணர்வு. க0க

காரிகைதன் வெந்துயரங் காணமல் நீத்தந்தக்
கூரிருளிற் போவான் குறித்தெழுந்து—நேரே
இருவர்க்கு மோருயிர்போ லெய்தியதோ ராடை
அரிதற் கவனினைந்தா னங்கு. க0உ

எண்ணிய எண்ணம் முடிப்ப இகல்வேந்தன்
கண்ணி யதையறிந்து காய்கலியும்—பண்ணினுக்குக்
கேளான தேமொழியை நீக்கக் கிளரொளிசேர்
வாளாய் மருங்கிருந்தான் வந்து. க0ரு

ஒற்றைத் துகிலு முயிரும் இரண்டாக
முற்றுந்தன் அன்பை முதலோடும்—பற்றி
அரிந்தா னரிந்திட் டவள்நிலைமை நெஞ்சில்
தெரிந்தா னிருந்தான் திகைத்து. க0ச

போயொருகான் மீளும் புகுந்தொருகான் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த அடுபாலின்—தோயல்
கடைவார்தங் கைபோல வாயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம். கoரு

சிந்துரத்தாள் தெய்வ முனிவன் தெரிந்துரைத்த
மந்திரத்தாற் றம்பித்த மாநீர்போல்—முந்த
ஒலித்ததேர்த் தானை யுயர்வேந்தன் நெஞ்சம்
வலித்ததே தீக்கலியால் வந்து. கoசு

## நளன் வனதேவதைகளைப் பிரார்த்தித்தல்

தீக்கா னகத்துறையுந் தெய்வங்காள் வீமன்றன்
கோக்கா தலியைக் குறிக்கொண்மின்—நீக்காத
காதலன்பு மிக்காளைக் காரிருளிற் கைவிட்டின்
றேதிலன்போற் போகின்றேன் யான். கoஎ

## பிரிதல்

ஏந்து மிளமுலையா ளின்னுயிருந் தன்னருளும்
பூந்துகிலும் வேறாகப் போயினான்—தீந்தேன்
தொடைவிரவு நாண்மாலை சூட்டினா டன்னை
இடையிருளிற் கானகத்தே யிட்டு. கoஅ

தாருவெனப் பார்மேல் தருசந் திரன்சுவர்க்கி
மேருவரைத் தோளான் விரவார்போல்—கூரிருளில்
செங்கா னகஞ்சிதையத் தேவியைவிட் டேகினான்
வெங்கா னகந்தனிலே வேந்து. கoகூ

## தமயந்தி விழித்துக்கொண்டு அரசனைத் தேடித் துயருறல்

நீல மளவே நெகிழ நிரைமுத்தின்
கோல மலரின் கொடியிடையாள்—வேல்வேந்தே
யெங்குற்றா யென்னா இனவளைக்கை நீட்டினாள்
அங்குத்தான் காணா தயர்ந்து. ககo

உடுத்த துகிலரிந்த தொண்டொடியாள் கண்டு
மடுத்த துயிலான் மறுகி—யடுத்தடுத்து
மன்னே யெனவழைப்பாள் மற்றுமவ னைக்காணா
தென்னேயிஃ தென்னென் றெழுந்து. கக்க

வெய்ய தரையென்று மெல்லமளி யைத்தடவிக்
கையரிக்கொண் டவ்விடத்துங் காணமல்—ஐயகோ
வென்னப்போய் வீழ்ந்தாள் இனமேதி மென்கரும்பைத்
தின்னப்போ நாடன் திரு. ககஉ

அழல்வெஞ் சிலைவேட னம்புருவ வாற்ரு
துழலுங் களிமயில்போ லோடிக்—குழல்வண்
டெழுந்தோட வீழ்ந்தா ளிருகுழைமேற் கண்ணீர்க்
கொழுந்தோட வீமன் கொடி. ககங

வான்முகிலு மின்னும் வறுநிலத்து வீழ்ந்ததுபோல்
தானுங் குழலுந் தனிவீழ்ந்தாள்—ஏனம்
குளம்பான் மணிகிளைக்குங் குண்டுநீர் நாடன்
இளம்பாவை கைதலைமே லிட்டு. ககச

## சூரியன் உதித்தல்

தையல் துயர்க்குத் தரியாது தஞ்சிறகாம்
கையான் வயிறலைத்துக் காரிருள்வாய்—வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோல்
கூவினவே கோழிக் குலம். ககரு

வான நெடுவீதி செல்லு மணித்தேரோன்
தான மடந்தைக்குத் தார்வேந்தன்—போனநெறி
காட்டுவான் போலிருள்போய்க் கைவாங்கக் கானூடே
நீட்டுவான் செங்கரத்தை நின்று. ககசு

செய்தபிழை யேதென்னுந் தேர்வேந்தே யென்றழைக்கும்
எய்து துயர்க்கரைகா ணேனென்னும்—பையவே
என்னென்னு தென்னென்னு மிக்கானின் விட்டேகு
மன்னென்னு வாடு மயர்ந்து. ககஎ

அல்லியந்தார் மார்ப னடித்தா மரைஅவள்தன்
நல்லுயிரு மாசையும்போல் நாறுதலும்—மல்லுறுதோள்
வேந்தனே யென்னு விழுந்தாள் விழிவேலை
சாய்ந்தநீர் வெள்ளத்தே தான். ககஅ

வெறித்த இளமான்காள் மென்மயில்காள் இந்த
நெறிக்கண் நெடிதூழி வாழ்வீர்—பிறித்தெம்மைப்

போனாரைக் காட்டுதிரோ வென்னாப் புலம்பினாள்
வானாடர் பெற்றிலா மான். கககூ

வேட்ட கரியை விழுங்கிப் பெரும்பசியால்
மோட்டு வயிற்றரவு முன்றோன்ற—மீட்டதனை
ஓரா தருகணைந்தா ளுண்டே னறற்கூந்தற்
போரார் விழியாள் புலர்ந்து. க௨0

## தமயந்தியைப் பாம்பு சுற்றல்

அங்கண் விசும்பி னவிர்மதிமேற் சென்றடையும்
வெங்க ணரவுபோன் மெல்லியலைக்—கொங்கைக்கு
மேலெல்லாந் தோன்ற விழுங்கியதே வெங்கானின்
பாலெல்லாந் தீயுமிழும் பாம்பு. க௨க

வாளரவின் வாய்ப்பட்டு மாயாமுன் மன்னவநின்
தாளடைந்து வாழுந் தமியேனைத்—தோளால்
விலக்காயோ வென்றழுதாள் வெவ்வரவின் வாய்க்கிங்
கிலக்காகி நின்றா ளெடுத்து. க௨௨

வென்றிச் சினவரவின் வெவ்வா யிடைப்பட்டு
வன்றுயராற் போயாவி மாள்கின்றேன்—இன்றுன்
திருமுகநான் காண்கிலேன் தேர்வேந்தே யென்றாள்
பொருமுகவேற் கண்ணாள் புலர்ந்து. க௨௩

மற்றொடுத்த தோள்பிரிந்து மாயாத வல்வினையேன்
பெற்றெடுத்த மக்காள் பிரிந்தேகுங்—கொற்றவனை
நீரேனுங் காண்குதிரோ வென்றழுதாள் நீள்குழற்குக்
காரேனு மொவ்வாள் கலுழ்ந்து. க௨௪

அடையுங் கடுங்கானி லாடரவின் வாய்ப்பட்
டுடையுமுயிர் நாயகனே யோகோ—விடையெனக்குத்
தந்தருள்வா யென்னாத்தன் தாமரைக்கை கூப்பினாள்
செந்துவர்வாய் மென்மொழியாள் தேர்ந்து. க௨௫

## வேடன் வருதல்

உண்டோ ரழுகுரலென் றொற்றி வருகின்ற
வெண்டோடன் செம்பங்கி வில்வேடன்—கண்டான்

கழுகுவாழ் கானகத்துக் காரரவின் வாயின்
முழுகுவாள் தெய்வ முகம். கஉசு

வெய்ய அரவின் விடவாயி னுட்பட்டேன்
ஐயன்மீ ருங்கட் கபயம்யான்—உய்ய
அருளீரோ என்று அரற்றினா ளஞ்சி
இருளீரும் பூணா ளெடுத்து. கஉஎ

## வேடன் தமயந்தியை மீட்டல்

சங்க நிதிபோல் தருசந் திரன்சுவர்க்கி
வெங்கலிவாய் நின்றுலக மீட்டாற்போல்-மங்கையைவெம்
பாம்பின்வாய் நின்று பறித்தான் பகைகடிந்த
காம்பின்வாய் வில்வேடன் கண்டு. கஉஅ

ஆருயிரு நானு மழியாம லேயாவிப்
பேரரவின் வாயிற் பிழைப்பித்தாய்—தேரின்
இதற்குண்டோ கைம்மா றெனவுரைத்தாள் வென்றி
விதர்ப்பன்றன் பெற்ற விளக்கு. கஉகூ

## வேடன் தமயந்தியை அழைத்தல்

இந்து நுதலி யெழினோக்கி யேதோதன்
சிந்தை கருதிச் சிலைவேடன்—பைந்தொடிநீ
போதுவா யென்னுடனே யென்றான் புலைநரகுக்
கேதுவாய் நின்றா னெடுத்து. கஙo

வேட னழைப்ப விழிபதைத்து வெய்துயிரா
ஆடன் மயில்போ லலமரா—ஓடினாள்
தூறெலா மாகச் சுரிகுழல்வேற் கண்ணினீர்
ஆறெலா மாக வழுது. கஙக

## வேடன் நீறுதல்

தீக்கட் புலிதொடரச் செல்லுஞ் சிறுமான்போல்
ஆக்கை தளர வலமந்து—போக்கற்றுச்
சீறா விழித்தாள் சிலைவேட னவ்வளவில்
நீறாய் விழுந்தான் நிலத்து. கஙஉ

வண்டமிழ்வா ணர்ப்பிழைத்த வான்குடிபோல்தீத்தழன்மீ
மண்டு கொடுஞ்சுரத்தோர் மாட்டிருந்து—பண்டையுள
வாழ்வெல்லாந் தானினைந்து மற்றழுதாள் மன்னிழைத்த
தாழ்வெல்லாந் தன்றலைமேல் தந்து. கருந

அவ்வளவி லாதிப் பெருவழியி லாய்வணிகன்
இவ்வளவு தீவினையே னென்பாள்தன்—மெய்வடிவைக்
கண்டானை யுற்றான் கமலமயி லேயென்றான்
உண்டாய வெல்லா முணர்ந்து. கருச

## தமயந்தியை வணிகன் யாரென வினவல்

எக்குலத்தாய் யார்மடந்தை யாதுன்னூர் யாதுன்பேர்
நெக்குருகி நீயழுதற் கென்னிமித்தம்—மைக்குழலாய்
கட்டுரைத்துக் காணென்றான் கார்வண்டு காந்தாரம்
விட்டுரைக்குந் தார்வணிகர் வேந்து. கருரு

## தமயந்தியின் விடை

முன்னை வினையின் வலியான் முடிமன்னன்
என்னைப் பிரிய விருங்கானில்—அன்னவனைக்
காணா தழுகின்றே னென்றாள் கதிர்மைக்கும்
பூணாரம் பூண்டாள் புலர்ந்து. கருசா

## சேதி நகர்க்கேக வழி காட்டல்

சேதி நகர்க்கே திருவைச் செலவிட்டப்
போதிற் கொடைவணிகன் போயினான்—நீதி
கிடத்துவான் மன்னவர்தங் கீர்த்தியினைப் பார்மேல்
நடத்துவான் வட்டை நடந்து. கருஎ

அற்ற துகிலும் அருதொழுகு கண்ணீரும்
உற்ற துயரு முடையவளாய்—மற்றொருத்தி
நின்றாளைக் கண்டே நிலவேந்தன் பொற்றேவி
யென்றார் மடவா ரெடுத்து. கருஅ

போயகலா முன்னம் புனையிழையாய் பூங்குயிலை
ஆய மயிலை யறிவே—நீயேகிக்
கொண்டுவா வென்றாள்தன் கொவ்வைக் கனிதிறந்து
வண்டுவாழ் கூந்தன் மயில். கருகூ

ஆங்கவளு மேக அரசன் பெருந்தேவி
பூங்கழலின் மீதே புரண்டழுதாள்—தாங்கும்
இனவளையா யுற்றதுய ரெல்லா மெனது
வினைவழிகா ணென்றாள் மெலிந்து. கசO

### சேதியரசி தமயந்தியை வினவல்

அந்தா மரையி லவளேயென் றையுற்றுச்
சிந்தா குலமெனக்குத் தீராதால்—பைந்தொடியே
யுள்ளவா றெல்லா முரையென்றா ளொண்மலரின்
கள்ளவார் கூந்தலாள் கண்டு. கசக

### தமயந்தி கூறல்

என்னைத் தனிவனத்திட் டெங்கோன் பிரிந்தேக
அன்னவனைக் காணா தலமருவேன்—இந்நகர்க்கே
வந்தே னிதுவென் வரவென்றாள் வாய்புலராச்
செந்தேன் மொழிபதறச் சேர்ந்து. கசஉ

### சேதியரசி சொல்லல்

உன்றலைவன் றன்னை யொருவகையால் நாடியே
தந்து விடுமளவுந் தாழ்குழலாய்—என்றனுடன்
இங்கே யிருக்க இனிதென்றாள் ஏந்திழையைக்
கொங்கேயுந் தாராள் குறித்து. கசந

ஈங்கிவளிவ் வாறிருப்ப இன்னலுழந் தேயேகிப்
பூங்குயிலும் போர்வேற் புரவலனும்—யாங்குற்றார்
சென்றுணர்தி யென்று செலவிட்டான் வேதியனைக்
குன்றுறழ்தோள் வீமன் குறித்து. கசச

### வீமன்விட்ட பார்ப்பான் தமயந்தியைக் காணல்

ஓடும் புரவித்தேர் வெய்யோ னொளிசென்று
நாடு மிடமெல்லாம் நாடிப்போய்க்—கூடினன்
போதிற் றிருநாடும் பொய்கைத் திருநாடாஞ்
சேதித் திருநாடு சென்று. கசரு

தாமஞ்சே ரோதித் தமயந்தி நின்றாளை
யாமென் றறியா வருமறையோன்—வீமன்

கொடிமேல் விழுந்தழுதான் கொம்புமவன் செம்பொன்
அடிமேல் விழுந்தா ளழுது. கசசு

மங்கை விழிநீர் மறையோன் கழல்கழுவ
அங்கவன்றன் கண்ணீ ரவளுடன்மேற்—பொங்கக்
கடல்போலுங் காதலார் கையற்றார் தங்கள்
உடல்போலு மொத்தா ருயிர். கசஎ

மாரி பொருகூந்தன் மாதராய் நீபயந்த
காரிகைதான் பட்ட துயர் கண்டாயோ—சோர்குழலும்
வேணியாய் வெண்டுகிலும் பாதியாய் வெந்துயருக்
காணியாய் நின்றா ளயர்ந்து. கசஅ

## சேதியரசி புத்திரி யென்றறிந்து வருந்தல்

தன்மக ளாவ தறியாத் தடுமாறாப் [ரைக்
பொன்வடிவின் மேலழுது போய்வீழ்ந்தாள்—மென்மல
கோதிப்போய் மேதி குருகெழுப்புந் தண்பணைசூழ்
சேதிக்கோன் தேவி திகைத்து. கசக

## தமயந்தியைக் குண்டினபுரஞ் செலவிடுதல்

கந்தனையுங் கன்னியையுங் கண்டா யினுஞ்சிறிது
தன்துயரந் தீர்ந்து தனியாறத்—தந்தை
பதியிலே போக்கினான் சேதியர்கோன் பண்டை
விதியிலே போந்தாளை மீண்டு. கருo

கோயிலு மந்தப் புரமுங் கொடிநுடங்கும்
வாயிலும் நின்று மயங்கியவே—தீயகொடுங்
கானுள மக்களையுங் கைவிட்டுக் காதலன்பின்
போனாள் புகுந்த பொழுது. கருக

அழுவார் விழுவா ரயிர்ப்பா ருயிர்ப்பார்
தொழுவார் தமரெங்குஞ் சூழ்வார்—வழுவாத
காமநீ ரோதக் கடல்கிளர்ந்தா லொத்ததே
நாமவேல் வீமன் நகர். கருஉ

## தமயந்தி பிதாவைக் காணல்

தந்தையைமுன் காண்டலுமே தாமரைக்க ணீர்சொரியச்
சிந்தை கலங்கித் திகைத்தலமந்—தெந்தையான்

பட்டதே யென்னப்போய் வீழ்ந்தாள் படைநெடுங்கண்
விட்டநீர் மேலே விழ. கடுரு

**பெற்றேர் வருந்தல்**

செவ்வண்ண வாயாளுந் தேர்வேந் தனுமகளை
யவ்வண்ணங் கண்டக்கா லாற்றுவரோ—மெய்வண்ணம்
ஓய்ந்துநா நீர்போ யுலர்கின்ற தொத்ததமர்
நீந்தினர் கண்ணீரி னின்று. கடுச

பனியிருளிற் பாழ்மண் டபத்திலே யுன்னை
நினையாது நீத்தகன்ற போது—தனியேநின்
றென்னினைந்தா யென்செய்தா யென்னுப் புலம்பினள்
பொன்னினைத்தாய் நோக்கிப் புலர்ந்து. கடுரு

கலிதொடர் காண்டம் முற்றிற்று.

ஆக்ச் செய்யுள் - நகஉ.

---

# ந. கலிநீங்கு காண்டம்

**காப்பு**

மூலப் பழமறைக்கு முன்னேயுங் காணலாங்
காலிக்குப் பின்னேயுங் காணலாம்—மால்யானை
முந்தருளும் வேத முதலே யெனவழைப்ப
வந்தருளுஞ் செந்தா மரை. க

போதுவார் நீறணிந்து பொய்யாத வைந்தெழுத்தை
ஓதுவா ருள்ள மெனவுரைப்பார்—நீதியார்
பெம்மா னமரர் பெருமா னொருமான்கை
அம்மானின் றூடு மரங்கு. உ

**நளன் செய்தி**

மன்னு வுனக்கபய மென்னு வனத்தீயிற்
பன்னுக வேந்தன் பதைத்துருகிச்—சொன்ன
மொழிவழியே சென்றுன் முரட்கலியின் வஞ்சப்
பழிவழியே செல்கின்றுன் பார்த்து. ந

## நளன் தீவாய்ப்பட்ட பாம்பைக் காத்தல்

ஆருந் திரியா வரையிருளி னங்ஙனே
சோர்குழலை நீத்த துயரோடும்—வீரன்
திரிவானத் தீக்கானிற் செந்தீயின் வாய்ப்பட்
டெரிவானைக் கண்டா னெதிர். ௪

தீக்கடவுள் தந்த வரத்தைத் திருமனத்தின்
ஆக்கி யருளா வரவரசை—நோக்கி
அடைந்தா னடைதலுமே யாரழலோ னஞ்சி
உடைந்தான்போய்ப் புக்கா னுவந்து. ௫

வேத முனியொருவன் சாபத்தால் வெங்கானின்
ஆதபத்தின் வாய்ப்பட் டழிகின்றேன்—காதலால்
வந்தெடுத்துக் காவென்றான் மாலை மணிவண்டு
சந்தெடுத்த தோளானைத் தான். ௬

சீரியாய் நீயெடுப்பத் தீமை கெடுகின்றேன்
கூருந் தழலவித்துக் கொண்டுபோய்—பாரில்
விடுகென்றான் மற்றந்த வெந்தழலான் வெம்மைப்
படுகின்றான் வேல்வேந்தைப் பார்த்து. ௭

என்றுரைத்த வவ்வளவி னேழுலகுஞ் சூழ்கடலுங்
குன்றுஞ் சுமந்த குலப்புயத்தான்—வென்றி
யரவரசைக் கொண்டகன்றா னரணியந் தன்னின்
இரவரசை வென்றா னெடுத்து. ௮

மண்ணின்மீ தென்றனைநின் வன்றாளா லொன்றுமுதல்
எண்ணித் தசவென் றிடுகென்றான்—நண்ணிப்போர்
மாவலான் செய்த வுதவிக்கு மாறாக
ஏவலாற் றீங்கிழைப்பே னென்று. ௯

## அப்பாம்பு நளனைக் கடித்தல்

ஆங்கவன்றா னவ்வா றுரைப்ப வதுகேட்டுத்
தீங்கலியாற் செற்ற திருமனத்தான்—பூங்கழலை
மண்ணின்மேல் வைத்துத் தசவென்று வாய்மையான்
எண்ணினான் வைத்தா னெயிறு. ௰

### நளன் வடிவம் மாறுதல்

வீமன் மடந்தை விழிமுடியக் கண்டறியா
வாம நெடுந்தோள் வறியோருக்—கேமங்
கொடாதா ரகம்போற் குறுகிற்றே மெய்ம்மை
விடாதான் றிருமேனி வெந்து. கக

ஆற்ற லரவரசே யாங்கென் னுருவத்தைச்
சீற்றமொன் றின்றிச் சினவெயிற்றால்—மாற்றுதற்கின்
றென்கா ரணமென்றா னேற்றமரிற் கூற்றழைக்கும்
மின்கா லயின்முகவேல் வேந்து. கஉ

காயுங் கடகளிற்றாய் கார்க்கோ டகனென்பேர்
நீயிங்கு வந்தமை யானினைந்து—காயத்தை
மாறாக்கிக் கொண்டு மறைந்துறைதல் காரணமா
வேறாக்கிற் றென்றான் விரைந்து. கங

கூனிறால் பாயக் குவளை தவளைவாய்த்
தேனிறால் பாயுந் திருநாடா—கானில்
தணியாத வெங்கனலைத் தாங்கினா யிந்த
அணியாடை கொள்கென்றா னாங்கு. கச

சாதி மணித்துகில்நீ சாத்தினால் தண்கழுநீர்ப்
போதின்கீழ் மேயும் புதுவரால்—தாதின்
துளிக்குநா நீட்டுந் துறைநாடர் கோவே
ஒளிக்குநாள் நீங்கு முரு. கரு

வாகு குறைந்தமையால் வாகுகனென் றுன்னாமம்
ஆக வயோத்தி நகரடைந்து—மாகனகத்
தேர்த்தொழிற்கு மிக்கான்நீ யாகென்றான் செம்மனத்தாற்
பார்த்தொழிற்கு மிக்கானைப் பார்த்து. கசு

இணையாரு மில்லா னிழைத்த வுதவி
புணையாகச் சூழ்கானிற் போனான்—பணையாகத்
திண்ணாக மோரெட்டுந் தாங்குந் திசையனைத்தும்
எண்ணாக வேந்த னெழுந்து. கஎ

### நளன் துயருறல்

நினைப்பென்னுங் காற்றசைப்ப நெஞ்சிடையே மூளுங்
கனற்புகைய வேகின்றான் கண்டான்—பனிக்குருகு

தண்படா நீழல் தனிப்பேடை பார்த்திரவு
கண்படா வேலைக் கரை. ௧௮

கோம்பா ரிளங்குருகே கூறு திருத்தியூல்
அம்புயத்தின் போதை யறுகாலால்—தும்பி
திறக்கத்தே னூறுந் திருநாடன் பொன்னை
உறக்கத்தே நீத்தேனுக் கொன்று. ௧௯

புன்னை நறுந்தாது கோதிப் பொறிவண்டு
கன்னிப் பெடையுண்ணக் காத்திருக்கும்—இன்னருள்கண்
டஞ்சினு ளாவி யழிந்தா னறவுயிர்த்து
நெஞ்சினு னெல்லா நினைந்து. ௨௦

காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாதம்
அளிக்கின்ற வாழிவா யாங்கலவ வோடி
ஒளிக்கின்ற தென்னோ வுரை. ௨௧

பானலே சோலைப் பசுந்தென்றல் வந்துலவுங்
கானலே வேலைக் கழிக்குருகே—யானுடைய
மின்னிமைக்கும் பூணாளவ் வீங்கிருள்வா யாங்குணர்ந்தால்
என்னினைக்குஞ் சொல்வீ ரெனக்கு. ௨௨

போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவாய்
அரவகற்று மென்போல ஆர்கலியே மாதை
இரவகற்றி வந்தாய்கொ லின்று. ௨௩

## நளன் அயோத்தி நகர் அடைதல்

மூன்னீர் மடவார் முறுவற் றிரள்குவிப்ப
நன்னீ ரயோத்தி நகரடைந்தான்—பொன்னீர்
முருகுடைக்குந் தாமரையின் மொய்ம்மலரைத் தும்பி
அருகுடைக்கு நன்னாட் டரசு. ௨௪

மான்றேர்த் தொழிற்கு மடைத்தொழிற்கு மிக்கோனென்
றான்றேயக்கும் வேலா னுயர்நறவத்—தேன்றோய்க்குந்
தார்வேந்தற் கென்வரவு தானுரைமி னென்றுரைத்தான்
தேர்வேந்தன் வாகுகனாய்ச் சென்று. ௨௫

அம்மொழியைத் தூத ரரசற் கறிவிக்கச்
செம்மொழியாத் தேர்ந்ததனைச் சிந்தித்தே—இம்மொழிக்
தக்கானை யிங்கே தருமி னெனவுரைக்க [குத்
மிக்கானுஞ் சென்றான் விரைந்து. ௨௬

போய்யடையாச் சிந்தைப் புரவலனை நோக்கித்தன்
செய்ய முகமலர்ந்து தேர்வேந்தன்—ஐயா நீ
எத்தொழிலின் மிக்கனைகொல் யாதுன் பெயரென்றான்
கைத்தொழிலின் மிக்கானைக் கண்டு. ௨௭

அன்ன மிதிப்ப அலர்வழியுந் தேறல்போய்ச்
செந்நெல் விளைக்குந் திருநாடா—மன்ன [றான்
மடைத்தொழிலுந் தேர்த்தொழிலும் வல்லென்யா னென்
கொடைத்தொழிலின் மிக்கான் குறித்து. ௨௮

## நளனைத் தேடப் புரோகிதனை விடல்

என்னை யிருங்கானில் நீத்த இகல்வேந்தன்
தன்னைநீ நாடுகெனத் தண்கோதை—மின்னுப்
புரைகதிர்வேல் வேந்தன் புரோகிதனுக் கிந்த
உரைபகர்வ தானா ளுணர்ந்து. ௨௯

காரிருளிற் பாழ்மண் டபத்தேதன் காதலியைச்
சோர்துயிலி னீத்தல் துணிவன்றோ—தேர்வேந்தற்
கென்றறைந்தால் நேர்நின் றெதிர்மாற்றந் தந்தாரைச்
சென்றறிந்து வாவென்றாள் தேர்ந்து. ௩௦

## புரோகிதன் நளனைத் தேடல்

மின்னாடு மால்வரையும் வேலையும் வேலைசூழ்
நன்னாடுங் கானகமும் நாடினான்—மன்னு
கடந்தாழ் நளியானைக் காவலனைத் தேடி
யடைந்தா னயோத்தி நகர். ௩௧

கானகத்துக் காதலியைக் காரிருளிற் கைவிட்டுப்
போனதூஉம் வேந்தற்குப் போதுமோ—தானென்று
சாற்றினா னந்தவுரை சார்வேந்தன் தன்செவியில்
ஏற்றினான் வந்தா னெதிர். ௩௨

### நளன் விடை

ஒண்டொடி தன்னை யுறக்கத்தே நீத்ததூஉம்
பண்டை விதியின் பயனேகாண்—தண்டரளப்
பூத்தாம வெண்குடையான் பொன்மகளை வெவ்வனத்தே
நீத்தானென் றையுறேல் நீ. ௫௫

### தமயந்தி புரோகிதனை வினவுதல்

எங்க ணுறைந்தனகொல் எத்திசைபோய் நாடினைகொல்
கங்கைவள நாட்டார்தங் காவலனை—அங்குத்
தலைப்பட்ட வாறுண்டோ சாற்றென்றாள் கண்ணீ
ரலைப்பட்ட கொங்கையா ளாங்கு. ௫௪

### புரோகிதன் கூறுதல்

வாக்கினான் மன்னவனை யொப்பான் மறித்தொருகால்
ஆக்கையே நோக்கி னவனல்லன்—பூக்கமழும்
கூந்தலாய் மற்றக் குலப்பாக னென்றுரைத்தான்
ஏந்துநூன் மார்ப னெடுத்து. ௫௫

### அயோத்தி யரசனுக்குத் தமயந்தியின் இரண்டாஞ் சுயம்வரம் தெரிவித்தல்

மீண்டோர் சுயம்வரத்தை வீமன் றிருமடந்தை
பூண்டாளென் றந்தணநீ போயுரைத்தால்—நீண்ட
கொடைவேந்தற் கித்தூரந் தேர்க்கோலங் கொள்வான்
படைவேந்த னென்றாள் பரிந்து. ௫௬

எங்கோன் மகளுக் கிரண்டாஞ் சுயம்வரமென்
றங்கோர் முரச மறைவித்தான்—செங்கோலாய்
அந்நாளும் நாளை யளவென்று னந்தணன்போய்த்
தென்னாளுந் தாரானைச் சேர்ந்து. ௫௭

வேத மொழிவாணன் மீண்டு சுயம்வரத்தைக்
காதலித்தாள் வீமன்றன் காதலியென்—றோதினான்
என்செய்கோ மற்றிதனுக் கென்று னிகல்சீறும்
மின்செய்த வேலான் விரைந்து. ௫௮

### அதற்கு நளன் சொல்வது

குறையாத கற்பினாள் கொண்டானுக் கல்லால்
இறவாத வேந்திழையா ளின்று—பறிபீறி

நெல்லிற் பருவரா லோடு நெடுநாடா
சொல்லப் படுமோவிச் சொல். ௩௯

### அயோத்தியரசன் சிந்தித்தல்

என்மே லெறிகின்ற மாலை யெழில்நளன்றன்
முன்னே விழுந்ததுகாண் முன்னுளில்—அன்னதற்குக்
காரணந்தா னீதன்றோ வென்றான் கடாஞ்சொரியும்
வாரணந்தா னன்னான் மதித்து. ௪௦

### நளன் சிந்தித்தல்

முன்னை வினையான் முடிந்ததோ மொய்குழலாள்
என்னைத்தான் காண இசைந்ததோ—தன்மரபுக்
கொவ்வாத வார்த்தை யுலகத் துரைப்பட்ட
தெவ்வாறு கொல்லோ இது. ௪௧

### நளன் இருதுபர்ணனுக்குச் சாரத்தியஞ் செய்தல்

காவலனுக் கேவற் கடன்பூண்டேன் மற்றவன்றன்
ஏவன் முடிப்பெ னினியென்று—மாவைக்
குலத்தேரிற் பூட்டினான் கோதையர்தங் கொங்கை
மலர்த்தேன் துளிக்குந்தார் மன். ௪௨

ஒற்றைத் தனியாழித் தேரென்ன வோடுவதோர்
கொற்ற நெடுந்தேர் கொடுவந்தேன்—மற்றிதற்கே
போந்தேறு கென்றுரைத்தான் பொம்மென் றளிமுரலத்
தீந்தேறல் வாக்குந்தார்ச் சேய். ௪௩

முந்தை வினைகுறுக மூவா மயல்கொண்டான்
சிந்தை யினுங்கடுகச் சென்றதே—சந்தவிரைத்
தார்குன்ற மெல்லோதி தன்செயலைத் தன்மனத்தே
தேர்கின்றா னூர்கின்ற தேர். ௪௪

மேலாடை வீழ்ந்த தெடுவென்றா னவ்வளவில்
நாலாறு காதம் நடந்ததே—தோலாமை
மேல்கொண்டா னேறிவர வெம்மைக் கலிச்சூதின்
மால்கொண்டான் கோல்கொண்ட மா. ௪௫

இத்தாழ் பணையி லிருந்தான்றிக் காயெண்ணின்
பத்தா யிரங்கோடி பாரென்ன—உய்த்ததன்பால்

தேர்திறத்தி யெண்ணினன் தேவர் சவைநடுவே
தார்திறத்துந் தோள்வேந்தன் றான். சசு

ஏரடிப்பார் கோலெடுப்ப இன்தேன் தொடைபீறிக்
காரடுத்த சோலைக் கடல்நாடன்—தேரடுத்த [தான்
மாத்தொழிலு மித்தொழிலும் மாற்றுதியோ வென்றுரைத்
தேர்த்தொழிலின் மிக்கானைத் தேர்ந்து. சஎ

கலி நளனைவிட்டு நீங்குதல்

வண்டரர் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
தண்டார் புனைசந் திரன்சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பால் நின்ற கலி. சஅ

இருதுபர்ணன் வீமராசன் பட்டணஞ் சேர்தல்

ஆமை முதுகி லலவன் துயில்கொள்ளும்
காமர் நெடுநாடு கைவிட்டு—வீமன்றன் [றம்
பொன்னகரி சென்றடைந்தான் போர்வேட் டெழுங்கூற்
அன்னகரி யொன்றுடையா னங்கு. சகூ

வெற்றித் தனித்தேரை வீமன் பெருங்கோயில்
முற்றத் திருத்தி முறைசெய்யுங்—கொற்றவற்குத்
தன்வரவு கூறப் பணித்துத் தனிப்புக்கான்
மன்விரவு தாரான் மகிழ்ந்து. ருo

இருதுபர்ணனை வீமன் வினவியது

கன்னி நறுந்தேறன் மாந்திக் கமலத்தின்
மன்னித் துயின்ற வரிவண்டு—பின்னையும்போய்
நெய்தற் கவாவு நெடுநாட நீயென்பால்
எய்தற் கவாவியவா றென். ருக

இருதுபர்ணன் சொல்லல்

இன்றுன்னைக் காண்பதோ ராதரவால் யானிங்ஙன்
மன்றன் மலர்த்தாராய் வந்தடைந்தேன்—என்றான்
ஒளியார்வேற் கண்ணுள்மே லுள்ளந் துரப்பத்
தெளியாது முன்போந்த சேய். ருஉ

ஆதி நெடுந்தேர்ப் பரிவிட் டவையாற்றிக்
கோதி லடிசிற் குறைமுடிப்பான்—மேதிக்

கடைவாயிற் கார்நீலங் கண்விழிக்கு நாடன்
மடைவாயிற் புக்கான் மதித்து. ௫௩

ஆதி மறைநூ லனைத்துந் தெரிந்துணர்ந்த
நீதி நெறியாளர் நெஞ்சம்போல்—யாதும்
நிரப்பாம லெல்லாம் நிரம்பிற்றே பொற்றேர்
வரப்பாகன் புக்க மனை. ௫௪

## தமயந்தி தன் மக்களைத் தேர்ப்பாகனுகிய நளனிடத்தில் விட்டது

இடைச்சுரத்தில் தன்னை யிடையிருளில் நீத்த [ழில்கள்
கொடைத்தொழிலா னென்றயிர்த்த கோமான்-மடைத்தொ
செய்கின்ற வெல்லாந் தெரிந்துணர்ந்து வாவென்ருள்
நைகின்ற நெஞ்சாள் நயந்து. ௫௫

கோதை நெடுவேற் குமரனையுந் தங்கையையும்
ஆதி யரச னருகாகப்—போத
விளையாட விட்டவன்றன் மேற்செயல்நா டென்ருள்
வளையாடுங் கையாள் மதித்து. ௫௬

## அரசன் மக்களைத் தழுவி வினவல்

மக்களைமுன் காணு மனநடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா—மக்காள்நீர்
என்மக்கள் போல்கின்றீர் யார்மக்க ளென்றுரைத்தான்
வன்மக் களியானை மன். ௫௭

## பிள்ளைகள் சொல்லல்

மன்ன னிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்
அன்னை தனைக் கான்விட் டவனேக—இந்நகர்க்கே
வாழ்கின்ருே மெங்கள் வளநாடு மற்ருெருவன்
ஆள்கின்ரு னென்ரு ரழுது. ௫௮

ஆங்கவர் சொன்ன உரைகேட் டழிவெய்தி
நீங்கா உயிரோடு நின்றிட்டான்—பூங்காவின்
வள்ளம்போற் கோங்கு மலருந் திருநாடன்
உள்ளம்போற் கண்ணீ ருகுத்து. ௫௯

### அரசன் வினா

உங்க ளரசொருவன் ஆளநீ ரோடிப்போந்
திங்க ணுறைத லிழுக்கன்றோ—செங்கை
வளவரசே யென்றுரைத்தான் மாதவத்தாற் பெற்ற
இளவரசை நோக்கி யெடுத்து. கூ0

### மக்கள் விடையளித்தல்

நெஞ்சாலிம் மாற்றம் நினைந்துரைக்க நீயல்லா
தஞ்சாரோ மன்னர் அடுமடையா—எஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலாய் எங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி. கூக

எந்தை கழலிணையி னெம்மருங்குங் காணலாம்
கந்து சுளியுங் கடாக்களிற்றின்—வந்து
பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தங்கள்
மணிமுடியிற் றேய்ந்த வடு. கூஉ

### அரசன் சொல்லல்

மன்னர் பெருமை மடைய ரறிவரோ
உன்னை யறியா துரைசெய்த—என்னை
முனிந்தருள லென்று முடிசாய்த்து நின்றான்
கனிந்துருகி நீர்வாரக் கண் கூங

### தமயந்தி துயர்முழுவல்

கொற்றக் குமரனையுங் கோதையையுந் தான்கண்டு
மற்றவன்றா னுங்குரைத்த வாசகத்தை—முற்றும்
மொழிந்தாரம் மாற்றம் மொழியாத முன்னே
அழிந்தாள் விழுந்தா ளழுது. கூச

கொங்கை யளைந்து குழல்திருத்திக் கோலஞ்செய்
அங்கை யிரண்டும் அடுபுகையால்—இங்ஙன்
கருகியவோ வென்றழுதாள் காதலனை முன்னாள்
பருகியவேற் கண்ணாள் பதைத்து. கூரு

மற்றித் திருநகர்க்கே வந்தடைந்த மன்னவற்குக்
கொற்றத் தனித்தேருங் கொண்டணைந்து—மற்றும்
மடைத்தொழிலே செய்கின்ற மன்னவன்கா ணெங்கள்
கொடைத்தொழிலா னென்றாள் குறித்து. கூகா

### வீமன் நளனிடஞ் செல்லல்

போதலருங் கண்ணியான் போர்வேந்தர் சூழப்போய்க்
காதலிதன் காதலனைக் கண்ணுற்றான்—ஓதம்
வரிவளைகண் டேறும் வளநாடன் றன்னைத்
தெரிவரிதா நின்றான் திகைத்து. சுஎ

செவ்வாய் மொழிக்குஞ் செயலுக்குஞ் சிந்தைக்கும்
ஒவ்வாது கொண்ட வுருவென்னை—எவ்வாயும்
நோக்கினான் நோக்கித் தெளிந்தான் நுணங்கியதோர்
வாக்கினான் றன்னை மதித்து. சுஅ

### வீமன் நளனை நோக்கிச் சொல்லியது

பைந்தலைய நாக பணமென்று பூகத்தின்
ஐந்தலையின் பாளைதனை யையுற்று—மந்தி
தெளியா திருக்குந் திருநாடா உன்னை
ஒளியாது காட்டுன் னுரு. சுகூ

அரவரசன் முன்கொடுத்த அம்பூந் துகிலின்
ஒரு துகிலை வாங்கி யுடுத்தான்—ஒரு துகிலைப்
போர்த்தான் பொருகலியின் வஞ்சனையாற் பூண்டளிக்குங்
கோத்தாய முன்னிழந்த கோ. எ0

### நளன் மாறுவேடம் நீங்கல்

மிக்கோ னுலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோ ரருவினைபோற் போயிற்றே—அக்காலம்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு. எக

தாதைதாய்முன் காண்டலுமே தாமரைக்க ணீரரும்பப்
போதலருங் குஞ்சியான் புக்கணைந்து—கோதிலாப்
பொன்னடியைக் கண்ணிற் புனலாற் கழுவினான்
மின்னிடையா ளோடும் விழுந்து. எஉ

பாதித் துகிலோடு பாய்ந்திழியுங் கண்ணீருஞ்
சீதக் களபதனஞ் சேர்மாசும்—போத
மலர்ந்ததார் வேந்தன் மலரடியில் வீழ்ந்தாள்
அலர்ந்ததே கண்ணீ ரவற்கு. எங

வெவ்விடத்தோ டொக்கும் விழியிரண்டும் வீழ்துயில்கொள்
அவ்விடத்தே நீத்த வவரென்றே—இவ்விடத்தே
வாரார் முலையாளம் மன்னவனைக் காணாமல்
நீரான் மறைத்தனவே நின்று. ௭௪

### தேவர்கள் நளன்மேற் பூமாரி சொரிதல்

உத்தமரில் மற்றிவனை யொப்பா ரொருவரிலை
இத்தலத்தி னென்றிமையோ ரெம்மருங்கும்-கைத்தலத்தின்
தேமாரி பெய்யுந் திருமலர்த்தார் வேந்தன்மேல்
பூமாரி பெய்தார் புகழ்ந்து. ௭௫

### கலிபுருடன் நளனுக்கு வரமளித்தல்

தேவியிவள் கற்புக்குஞ் செங்கோன் முறைமைக்கும்
பூவுலகி லொப்பாயார் போதுவார்—காவலனே
மற்றென்பால் வேண்டும் வரங்கேட்டுக் கொள்ளென்றான்
முற்றன்பாற் பாரளிப்பான் முன். ௭௬

உன்சரிதஞ் செல்ல வுலகாளுங் காலத்தும்
மின்சொரியும் வேலாய் மிகவிரும்பி—என்சரிதம்
கேட்டாரை நீயடையே லென்றான் கிளர்மணிப்பூண்
வாட்டானை மன்னன் மதித்து. ௭௭

என்காலத் துன்சரிதங் கேட்டாரை யானடையேன்
மின்கா லயில்வேலாய் மெய்யென்று—நன்காவி
மட்டிறைக்குஞ் சோலை வளநாடன் முன்னின்று
கட்டுரைத்துப் போனான் கலி. ௭௮

வேத நெறிவழுவா வேந்தனையும் பூந்தடங்கட்
கோதையையும் மக்களையுங் கொண்டுபோய்த்—தாது
புதையத்தேன் பாய்ந்தொழுகும் பூஞ்சோலை வேலி
விதையக்கோன் செய்தான் விருந்து. ௭௯

### இருதுபர்ணன் தன்னகர் சேர்தல்

உன்னையா னென்று முணரா துரைத்தவெலாம்
பொன்னமருந் தாராய் பொறுக்கென்று—பின்னைத்தன்
மேனீர்மை குன்றா வெறுந்தேர் மிசைக்கொண்டான்
மானீ ரயோத்தியார் மன். ௮0

## நளன் மனைவி மக்களுடன் நிடததேசஞ் செல்லல்

விற்றானை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்லப்
பொற்றேர்மேற் றேவியொடும் போயினான்—முற்றாம்பல்
தேனீ ரளித்தருகு செந்நெற் கதிர்விளைக்கும்
மாநீர் நிடதத்தார் மன். அக

தானவரை வெல்லத் தரித்தநெடு வைவேலாய்
ஏனைநெறித் தூரமினி யெத்தனையோ—மானேகேள்
இந்த மலைகடந் தேழுமலைக் கப்புறமா
விந்தமெனு நம்பதிதான் மிக்கு. அஉ

இக்கங்குல் போக இகல்வேல் நளனெறிநீர்
செய்க்கங்கு பாடுந் திருநாடு—புக்கங்
கிருக்குமா காண்பான்போ லேறினான் குன்றில்
செருக்குமான் தேர்வெய்யோன் சென்று. அங

மன்றலிளங் கோதையொடு மக்களுந் தானுமொரு
வென்றி மணிநெடுந்தேர் மேலேறிச்—சென்றடைந்தான்
மாவிந்த மென்னும் வளநகரஞ் சூழ்ந்ததொரு
பூவிந்தை வாழும் பொழில். அச

## நளன் புட்கரனுக்குத் தூதுவிட்டு மறுபடியும் சூதாடல்

மற்றவனுக் கென்வரவு சொல்லி மறுசூதுக்
குற்ற பணைய முளதென்று—கொற்றவனைக்
கொண்டணைவீ ரென்று குலத்தூ தரைவிடுத்தான்
தண்டெரியற் றேர்வேந்தன் றான். அரு

மாய நெடுஞ்சூதில் வஞ்சித்த வன்னெஞ்சன்
தூய நறுமலர்ப்பூஞ் சோலைவாய்—ஆய
பெருந்தானை சூழப் பெடைநடையா ளோடும்
இருந்தானைக் கண்டா னெதிர். அசு

செங்கோ லரசன் முகநோக்கித் தேர்ச்சியிலா
வெங்கோ லரசன் வினையினான்—அங்கோலக்
காவற் கொடைவேந்தே காதலற்குங் காதலிக்கும்
யாவர்க்குந் தீதிலவே யென்று. அஎ

### பந்தயம் வைத்தல்

தீது தருகலிமுன் செய்ததனை யோராதே
யாது பணைய மெனவியம்பச்—சூதாட
மையாழி யிற்றுயிலு மாலனையான் வண்மைபுனை
கையாழி வைத்தான் கழித்து. அஅ

### நளன் வெற்றியடைந்து தன்னகரைக் கைப்பற்றல்

அப்பலகை யொன்றி னருகிருந்தார் தாமதிக்கச்
செப்பரிய செல்வத் திருநகரும்—ஒப்பரிய
வன்றானை யோடு வளநாடும் வஞ்சனையால்
வென்றானை வென்றானவ் வேந்து. அசுஅ

அந்த வளநாடு மவ்வரசு மாங்கொழிய
வந்த படியே வழிக்கொண்டான்—செந்தமிழோர்
நாவேய்ந்த சொல்லால் நளனென்று போற்றிசைக்கும்
கோவேந்தற் கெல்லாங் கொடுத்து. கூ0

ஏனை முடிவேந்த ரெத்திசையும் போற்றிசைப்பச்
சேனை புடைசூழத் தேரேறி—ஆனபுகழ்ப்
பொன்னகர மெய்தும் புரந்தரனைப் போற்பொலிந்து
நன்னகரம் புக்கான் நளன். கூகூ

கார்பெற்ற தோகையோ கண்பெற்ற வாண்முகமோ
நீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ—பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ வுரைப்பெ னெதிர். கூஉ

## கலிநீங்கு காண்டம் முற்றிற்று.

ஆக்கச்செய்யுள் சஉஅ.

## நளவெண்பா முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

---

திருச்சிற்றம்பலம்

# அரும்பொருள் விளக்கம்

## பாயிரம்:—கடவுள் வாழ்த்து

க. நேசர் இதம்கூர-நட்டார் இன்பம்மிக; எனவே, 'பகைவர் துன்ப முற' என்பது கொள்க. 'மா சரிதம்' எனப் பிரிக்க. 'துணையா வரும்' என மாற்றுக. ஈசன்-உருத்திரன். கரியான்-விஷ்ணு. அனத்தான்-பிரமன். கருது புகழ்-(தாம் பெறக்) கருதும் புகழ்; அவர்கட்கும் இல்லாத புகழ் என்பதாம். ஈசன் கரியான் அனத்தான்' என்புழி 'மூவர்' என்னுந் தொகையொடு முற்றும்மையும் சிறப்பேகாரமுந் தொக்கன. கரி-கரத்தையுடையது; அஃதாவது துதிக்கை யுடையது. கரி-ஆனனத்தான்-யானைமுகன். 'கரி' 'ஆனனம்' என்பன வடசொல். கழல்-தானியாகு பெயர்.

மா மகிழ் மால்-திருமகள் மகிழ்கின்ற விஷ்ணு. மா மகிழ் மாறன்-பெருமை பொருந்திய மகிழம்பூ மாலையை யுடைய சடகோபன். மாறன்—(காமாதிகட்குப்) பகைவன் என்பது சொல்லின்படி பொருள்.

உ. ஆதி கோலம்-ஆதி வராகம். வராகம் ஆனது இரணியாக்கன் பூமியைப் பாயாகச் சுருட்டிக் கடலிற் புக்குழி யென்க. அடியவற்கு-பிரஹ்லாதற்கு. வேதத்தின் முன் நின்றான்-வேதத்தின்கண் முதன்மையாக நின்றான்; இனி, '(எப்போதும்) வேதத்திற்கு முன் நின்றவன்; அஃதாவது வேதத்திற்கு எட்டாதவன், எனப் பொருளுரைத்தலு மொன்று. வேழம்-கஜேந்திரனென்னும் யானை. மூலமே-ஆதிமூலமே! என் என்றான்: 'விரைந்து சென்றான்' என்னும் பொருட்டு.

'பங்கயத் திருவைப் பாரான் பணிமுடி நிழலைத் தேடான்
சங்குசக் கரங்க ளேந்தான் றன்னெதிர் தாழ்ந்து நிற்கு
மிங்கிதக் கருடன் மீதி லேறிடா னிபத்தைக் காக்கக்
கங்கையைப் பெற்ற பாத சாரியாய்க் கடுகி வந்தான்'

என்றிருத்த லுணர்க.

௩. கலாபம் - தோகை; மயில் - ஈண்டுப் பார்வதி. நிலாவும் நீறும் ஒத்த வெண்மைய வென்பார் 'நிலாவை வழியவார்த் தாலன்ன மாநீற்றர்' என்றார். 'மாநீற்றர்' என்றது பிறவிப் பிணியை நீக்கும் பெருமை யுடைத்தாகலின். ஆர்த்தார்-கட்டினார்.

௪. கொண்மூ-மேகம். நெற்றி-உச்சியின்கண். நிழல்-ஒளி. நாறி - வீசி. 'கதிர்' ஈண்டுச் சூரியன். மணித்தோகை - அழகிய கலாபங்களை யுடைய மயில்.

'உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்

கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி' (திருமுருகாற் றுப்படை) என்றார் நக்கீரநும். மாக்கடல் - கரிய கடலின் நடுவில். சூர் - சூரபதுமனை. அரண் - காப்பு.

௫. தறுகண் - அஞ்சாமை. வேழத்தை - யானையை. வேரி- தேன்; மணமுமாம். தந்துவினால் - நூலால்; 'தந்து' என்பது வடசொல். தேன் - தேன்வண்டுகள். 'இது ஒக்கும்' எனமுடிக்க.

௬. செழியன் - பாண்டியன். சென்னி - சோழன். சேர - ஒருசேர. திறைகொள்ளுதலாவது - தன்வயமாகுதல்.

'சதுர னெழிற்சோண சைலத் துதிப்பன்
மதுரமொழி யன்பர் மனமாங்—குதிரை திறை
கொண்டவனென் றேத்துங் குரைகழற்கால் யானைதிறை
கொண்டவனை யென்மனத்தே கொண்டு'

என்னும் பாவினைக் காண்க. (சோணசைலமாலை)

மொழியின் சுவை - சொற் சுவை. முதிர்ந்து - முதிர; இஃ தெச்சத் திரிபு. சுவை முதிர்ந்தே பேசினன், என ஏகாரம் பிரித்துக் கூட்டுக. ஏகாரம் தேற்றம்.

—oo❀oo—

# நூல்

## க. சுயம்வர காண்டம்

க. முன்னேன்றல் - தருமபுத்திரன். ஆண்டகை - கிருஷ்ணன். ஏகாரம்-சிறப்பு. அவனி - இது வடசொல்; 'காப்பது' என்பது அதன் தாதுப்பொருள். மறுத்தான் - துரியோதனன்; இது வினையாலணைந்த பெயர். இருந் தானை - பெரிய சேனை. பொறுத்தான்—இது முற்றெச்சம். புலர்ந்து - வாடி.

உ. ஈட்டங்கள் - கூட்டங்கள். இருந்தானை - இருந்த தருமபுத்திரனை. 'வரும் தகையார் வேந்தர் எல்லாரும் வந்து பெருந் தகையைக் காட்டிற் கண்டார்கள்' என முடிவு செய்க. தகையார் - தன்மையார்.

ங. கொற்றம் - வெற்றி. தானை - சேனை. குருநாடன்பால்- தருமபுத்திரனிடத்து. எற்று - மோதுகின்ற; எற்று நீர்-கடல். இருள் - அஞ்ஞான விருள். வழிமுறை - கர்ணபரம்பரையில். 'தந் தான் மொழி முறையே மறையெல்லாங் கோத்தமுனி' என் றமை வயிக்க. தந்தான் - ஈசன். மொழி முறையே - அருளிய முறைப் படியே. கோத்த - வரிசைப்படுத்திய. முனி - வியாச முனி. 'முனி குருநாடன் பால் அணைந்தான்' என்க.

ச. அற - நீங்க. பிழைத்தேன் - உய்ந்தேன். அ - உலகறி சுட்டு. பேர் ஆழியான் - கிருஷ்ணன். ஏவல் கொண்ட - (தூது செல்லுதலாகிய) ஏவற்றொழிலைச் செய்வித்த.

ரு. மெய்த்திரு - அழியாதசெல்வம். துயர் -வறுமைநோய். ஒத்திருக்கும்-ஒரு தன்மையாக(எற்று)இருக்கின்ற. உரவோனே- அறிஞனே! 'ஆறு' என்பது 'ஆ' எனக் கடைக்குறை யாயிற் றென்க. அவாம் மெய்த்தவத்தோன் - மெய்த்தவம் அவாவு வோன்; அது வடநூன் முடிவு. அவாவுதல் விரும்புதல்.

கூ. 'அம்பொன்கயிலை' என்றார் வெள்ளியை 'வெண் பொன்' என்பவாகலின். பொன் - அழகு. தம் பொற்படை யென்றது பாசுபதாஸ்திரத்தை. வாக்கு - வாய்ச்சொல்.

எ. காண்டாவனம் - 'காண்டவ் வனம்' என்பதன் விகாரம். இவ்வனம் இந்திரன் காவலி னமைந்தது. 'அவ்வனம் கொண்டல் வாகனன் காவல்' என்றார் **வில்லிபுத்தூராரும்.** முகில்-(இந்திரன் ஏவிய) மேகம். தடுத்து நின்றாற்கு - (தன் அம்புகளால்) தடை செய்த அருச்சுனற்கு. அமரர் - (இந்திரனோடு வந்தெதிர்த்த) தேவர்கள். ஓடிய - (புறங்கொடுத்து) ஓடிய

வேள்வியின் நெய் மிகவுண்டு குன்மநோய் கொண்ட அக்நி 'என் நோய் நீங்க மூலிகைகள் செறிந்த காண்டவ வனத்தை யான் உண்ணத் தருக,' வென அருச்சுனனை வேண்ட, அவன் 'தந்தேன்' என்ன, அக்நி அவ் வனத்தைத் தகிக்கப் புக்க போது இந்திரன் மேகத்தை ஏவ, அருச்சுனன் சரகூடத்தான் மழை நீர் வீழாதபடி தடுக்க, இந்திரன் தேவர்களுடன் போர்க்கு வர, அவர்களை யெல்லாம் அருச்சுனன் புறங்கண்டன னென்பது கதை.

அ. பெருந்திருவும் - பெருஞ்செல்வமும். கைவிட்டு-இழந்து. யாதோ - ஈண்டு 'ஓகாரம்' இரக்கப் பொருளது. 'தீது ஓவ' எனப் பிரிக்க; ஓவ - நீங்க.

கூ. கேடில் விழுச்செல்வங் கல்வி என்பவாகலின், பொருளைக் 'கேடில் விழுச்செல்வம்' என்பது வழுவமைதி யென்பர் **நச்சினார்க்கினியர் கலித்தொகை** யுரையுள். விழுமம் - சீர்மை; சீர்மையாவது தக்கார் கண்ணே நிற்றல். 'விழுமஞ் சீர்மை சிறப்பு இடும்பையும்' [தொல் - சொல் - ௩௫௩.] என்பது ஓத்தாகலின். எய்து - எய்துதற் கேதுவாகிய; இது காரியத்தின்கண் வந்த வினைத்தொகை. ஏடு - இதழ். அவிழ் - விரிந்த. கலங்கலை - கலங்காதே. கா - சோலை. இலங்கு அலை நூல் - விளங்குகின்ற அசையும் முப்புரிநூல்.

௧௦. கண்-அறிவு. கவறு-சூது. போந்து-புகுந்து. 'இழந்து வனம் போந்து நண்ணி என்போல் இடர் உழந்தார் காவலர் தாம் வேறுண்டோ' என்க.

௧௧. சேமம்-காவல். 'தனிச் செங்கோல்' என் மாறுக. நாமம்—'நாம்' என்னும் உரிச்சொல் ஈறு திரிந்து வந்தது; 'அச்சம்' என்பது அதன் பொருள். காளை-ஆகுபெயர். என்பான்-ஈண்டுப் 'படு' விகுதி தொக்கது. ஆழி-கடல். 'முனி நளனென்பான் வையம் இழப்பக் கலியான் விளைந்த கதை செப்புவான்' என்க.

௧௨. காமர்-அழகு. காவி-நீலம். தளை-கட்டு, முறுக்கு. பூமடந்தை-பூமிதேவி. நாட்டம்-கண். சாகரம்-கடல்; சகராற்றோண்டப் படுதலின் சாகரமாயிற்று; இது வடமொழித்தத்திதாந்தம். நன்னாட்டின்-பூமியின்கண். முன் நாட்டும் நாடு-முதலின் நிறுத்தப்பெறும் நாடு; இது நிடதநாடு. கயல் புரளுதலும் நீல வரும்பு விரிதலும் தாமரை மலர்தலும் உடைமையின் இந் நாடு பூமிதேவியின் கண் ஒக்குந் தன்மைத் தென்றார். கயலையும் நீல மலரையும் தாமரையையும் கண்ணுக்கு ஒப்புமை கூறல் கவிமரபு.

௧௩. கோதை-மாலை. களபச்சேறு-கலவைச் சந்தனச் சேறு. மானம்-கொண்டாட்டம். கரி-யானை. ஞானக்கலை-ஞானமென்னும் அம்சம்; ஞான சாத்திரமென்பாருமுளர். 'சீத களபம்' என்னும் வடமொழித்தொடர் வடநூன்முடிபு பெற்றது. 'ஞானக்கலை' என்னும் வடமொழித்தொடர் தமிழ்நூன் முடிபு பெற்றது.

௧௪. புயல்-மேகம். வானம் நின்று-ஆகாயத்தின்கணிருந்து, அகில்-அகில் மணம். அலர்த்தும்-விரிக்கும். ஆயிழையார்-அழகிய ஆபரண மணிந்த பெண்கள். ஐம்பால்-ஐந்து பகுதியாய் முடிக்கப்படுங் கூந்தல்.

'ஐம்பான் முடியுங் கொண்டையுங் குழலும்
வம்பார் பனிச்சை வான்மயிர்ச் சுருளும்'

என்பது காண்க. புலர்த்தும்-உலர்த்தும். புகை-அகிற்புகை. புகுந்து-எச்சத்திரி பென்க.

கரு. 'கஞ்சம்' என்புழியும் ஏகாரங் கூட்டுக. ஏகாரங்கள் பிரிநிலை. சிலை-வில். கோடுவன-வளைவன. குழல்-கூந்தல். சிலம்பு-காற்சிலம்பு. அரற்றுவன-ஒலிப்பன. கஞ்சம்-நீர். காரிகையார்-பெண்கள் (காரிகை-அழகு). 'காரிகையார் கண்ணே மெய்ந் நெறியைவிட்டு விலங்குவன' என்றார் அது மயக்கஞ் செய்தலின்;

—'முனிவரையு
மாலுறுப்ப மகிழ்செய்வ மாண்பினஞ்சு மமுதுமுமே
போல்குணத்த பொருகயற் கண்'

என்றார் சிந்தாமணி யுடையாரும்.

அதற்கு, 'கன்னியாகலின், மாலுறுப்ப வென்றார்' என்றார் நச்சினார்க்கினியரும்.

'கண்ணெனும்
பூச லம்பு நெறியின் புறஞ்செலாக்
கோச லம்புனை யாற்றணி கூறுவாம்'

என்னுங் கம்பர் கூறிய நாட்டியற்கு இது மாறுதல் காண்க.

இனி, ஈண்டுக் காரிகையா ரென்றது கணிகையரை யென் பாரு முளர். அந்நகரில் தீநெறிப்படுவாரும், தளர்ச்சியுறுவாரும், முறையிடுவாரும், மனங் கலங்குவாரும், மெய்ந்நெறியின் விலகு வாரு மில்லை யென்பது கருத்து. இது நியமச்சிலேடையணி.

'சாய லார்க ணுசுப்பே தளர்வன
ஆய மாடக் கொடியே யசைவன
சேய வோடைக் களிறே திகைப்பன
பாய சோலைத் தருவே பயத்தன' (பெரிய புராணம்)

'கொடியன மகளிர் தங்கள் குழையுநுண் ணுசுப்பே வாளா
படுகொலை புரிவ மாதர் படைநெடுங் குவளைக் கண்ணே
அடிமிசை முறையிட் டென்று மரற்றுவ சிலம்பே சூழ்ந்து
கடிமது நுகர்வ வன்னோர் கருங்குழற் காமர் வண்டே'
(நைடதம்)

என்றார் பிறரும்.

கசு. தெரிவன-(எவரும்) ஆராய்வன. வரி-கீற்று; பூத் தொழில். மருங்கு-இடை. இரவு-இரத்தல். கரவு-ஒளித்தல்; வஞ்சனையுமாம்.

கஎ. நூல்-ஸ்மிருதி. தாமரையாள்-இலக்குமி. முரணை யென்பது புகழேந்தியாரை ஆதரித்த சிற்றரசனாகிய சந்திரன் சுவர்க்கி யென்பான் தலை நகர். அவன் பெயரை யமைத்து அவன் நகர்ச்சிறப்புக் கூறல் நன்றியறிவு பற்றி யென்க.

கஅ. ஓடாத-(ஒரு காலத்தும்) பகைவர்க்குப் புறங்கொடாத. பீடு-பெருமை. வண்டோடு-ஆண் வண்டொடு. ஊடாட-ஊட; பிணங்குதலின்-இஃதெச்சத்திரிபு. முருகு உடைய-இளமை யுடைய. தார்-மாலை. அருகு-(இரண்டு)பக்கம்; இரண்டு தோள்கள்.

ககூ. மதிக் குடை-சந்திரவட்டக் குடை. தாது-மகரந்தப் பொடி. அருகு-சமீபம். ஆடல்-வெற்றி; வலியுமாம்.

பகைப்பறவைகளும் ஒன்றி வாழக் காத்தா னெனவே அவன் அரசிற் பகைமை கொள்வார் யாண்டு மிலரென்பது கூறாதே அமையும்.

‘ வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசைய
ருள்ளமு மொருவழி யோட நின்றவன் ’

என்றார் கம்பநும்.

‘தாரான் உலகு தனிக்காத்தான்’ என்க. தனிக்காத்தலாவது உலகம் பொதுவாதலை நீக்கித் தனக்கே யுரியதாக்கிக் காத்தல்.

உ0. வாங்கு வளை-வளைந்த வளையல்கள்; இஃது ‘ஆழாழி’ என்பது போன்றதொரு தொடர். இனி, ‘வாங்கு வளைக் கை யார்’ என்பது வடநூன் முடிபெனக் கொண்டு ‘வளை வாங்கு கையார்’ எனமாற்றி, ‘(மென்மையுடைமையின்) வளையல்களை எளிதினேற்கும் கைகளை யுடையார்’ எனவும், ‘நளன் எழில் கண்டு (இளைத்தமையின்) வளையல்கள் நீங்கிய கைகளை யுடையார்’ எனவும் பொருள் கூறுதலு முண்டு. வதனமதி-முகமாகிய சந்திரன். குவளை-(கண்ணாகிய) குவளை. காடு-தொகுதி.

தேன்-மண மிக்க. குவளை-நீலமலர். தேன் ஆடி-தேனின் கண் மூழ்கி. பூநாடி-பூக்கொய்தலை விரும்பி. 'நீர் நாடன் சோலை புகப் போயினான்' என்றியைக்க.

பூங்குவளைக் காட்டிடையே போயினான் என்பது எல்லா மங்கையரும் அவனையே ஒரு சேர நோக்கப் போயினான் என்னும் பொருட்டு.

'இருந்தன னுலகங்க ளிரண்டு மொன்றுந்த
னருந்தவ முடைமையி னளவி லாற்றலிற்
பொருந்திய விராவணன் புருவக் கார்முகக்
கருந்தடங் கண்ணியர் கண்ணின் வெள்ளத்தே'

என்றார் கம்பரும்.

உக. 'யானை பரியா ளிரத மிவையில்லை
தானு மநங்கன் றனுக்கரும்பு—தேனின்
மலரைந்தி னல்வென் றடிப்படுத்தான் மார
னுலகமொரு மூன்று மொருங்கு'

என்றிருத்தலின்,

'வென்றி மதவேள்' என்றார். தன் வெற்றிக்குரிய காலமாகலின் 'வில்லெடுப்ப' என்றார். மன்மதனுக்கு 'வசந்தன்' என்னும் பெயரிருத்தலுங் காண்க. 'தன் வில்' என்றது கரும்பு வில்லை. மது நீர்-தேனாகிய நீர். நின்ற தளவு-(முல்லை நிலத்து) நின்ற முல்லைக்கொடிகள். ஏனல்-(குறிஞ்சி நிலத்துத்) தினைக் கதிர். 'தளவு ஏனல்மீது அலரும்' எனத் திணை மயக்கங் கூறினார்.

உஉ. வேரிப்புனல்-தேனாகிய நீர். 'நனைப்பவே' என்க. தொக்கிருந்து-கூடியிருந்து. ஆலித்து-ஒலித்து. தூங்கு இருள் - மிக்க இருள். வெய்யோற்கு-சூரியனுக்கு.

உங. நிறம் பெயர-கருமை நிறம் நீங்க. பொய்கைத்தலம்-இருபெயரொட்டு. மாண் நிறத்தான் - மாட்சிமை பொருந்திய ஒளியுடையான்; மாட்சிமை பொருந்திய மார்புடையான் என்

பது மொன்று. அம்பு உள்-நீரின்கண். மூளரித்தலை-தாமரையி னிடத்தே. புள்-பறவை.

உச. மேதிக்குலம்-எருமைக் கூட்டம். முத்து கோதி உமிழும்-(அக் கரும்பின்கண்) முத்தை நீக்கி உமிழ்கின்ற, 'நாடன் பேதை! அன்னந் தன்னைப் பிழையாமல் பிடித்துத்தா வென்றான்' என்றியைக்க.

உரு. வல்லியர்கள்-பூங்கொடி போல்வார். ஈண்டுக் 'கள்' என்பது அசை. கோ-அரசன்.

உசா. ஆய் இழையார்-அழகிய ஆபரணந் தரித்த பெண்கள். மலங்கிற்று-வருந்திற்று. கிளை-சுற்றம், இனம். 'அன்னம் தேடி மலங்கிற்று; கண்டு கலங்கிற்று' என்க.

உஎ. அஞ்சல்-அஞ்சாதே; இஃது எதிர்மறை ஏவன் முற்று. 'உன்றன்' என்புழித் 'தன்' சாரியை. வஞ்சி-வஞ்சிக் கொடி. விஞ்சியது-(ஆகிய இவ்விரண்டின்) மிக்கது. காண-(இன்னதென்று) அறிய.

உஅ. தையல்-பெண். அடும் மாற்றம்-கொல்லுதற்கேது வாகிய பகைமை.

உகூ. திசை முகந்த-திசைகளைத் தன்னுளடக்கிய. இசை-புகழ். வசை இல்-இகழ் இல்லாத. மென்றோள் அமை அந்தி-மெல்லிய தோள்கள் மூங்கிலின் அழகு வாய்ந்தாள். 'என்றோர்' என்புழி அகாரம் விகாரத்தாற் றொக்கது என்க.

௩0. 'மொழி புகாமுன் கன்னி மனக்கோயில் புக்குக் கைக்கொள்ள' என்க. கன்னி-தமயந்தி. மனக்கோயில்—தனது மனமாகிய அரண்மனை. சொன்ன மயில்-(நீ) சொல்லிய (அம்) மயில்போல்வாள். இனி, இதற்கு '(அந்தச்) சுவர்ண மயில்' என்பாரு முளர். ஆர்-'யார்' என்பதன் மருஉ. அநங்கன்-அங்கமில்லாதவன்; சிவனார் நெற்றி விழியிற் கரிந்து நீறாயின மையின், அவற்கு 'உடம்பில்லை' என்ப. பார் மடந்தை-பூமி தேவி.

௩க. எழு அடு - துணை வென்ற. 'இலங்கிழை விதிர்ப்பன் பெற்றதோர் கொம்பு' என்க. இலங்கிழை-அன்மொழித்தொகை. ஏர்தூண்ட - ஏர்களைச் செலுத்த. கொழு நுனியில் - கொழு முனையில் (கொழு - கலப்பை இரும்பு). குவளை - குவளைமலர்கள். உழுநர் - உழவர். மிதிப்ப - மடை (கட்டுமாறு) மிதிக்க. தேன் பாயும் - (அங்ஙனம் கட்டிய மடையை யுடைக்கத்) தேன் ஊறும்; சுஎ - வது பாட்டொடு ஒப்பு நோக்குக. மாடு - இடம். 'உமக்குத் தன் மகளைக் கொடுப்பன்' என்பது கொடை விதிர்ப்பன்' என்பதன் குறிப்பு.

௩உ. நாற்குணமாவன நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்பன. நாற்படையாவன ரத கச துரக பதாதி யென்பன. ஐம்புலன் ஈண்டு ஐம்பொறி யென்க; அவையாவன மெய் வாய், கண், மூக்கு, செவி யென்பன. வேலும் வாளும் கண்ணுக்கு உவமையாகலின் 'வேற்படையும் வாளுமே கண்ணு' என்றார். பெண்மை - பெண்மைத் தன்மை; அஃதாவது, அமைதித் தன்மை. 'பெண்மை அரசு ஆளும்' என்க.

'விற்பெருந் தடந்தோள் வீர வீங்குநீ ரிலங்கை வெற்பி
னற்பெருந் தவத்த ளாய நங்கையைக் கண்டே னல்லே
னிற்பிறப் பென்பதொன் றுமிரும்பொறை யென்ப தொன்றுங்
கற்பெனப் படுவ தொன்றுங் களிநடம் புரியக் கண்டேன்'

எனக் கம்பர் கூறியதூஉங் காண்க. இனி, பெண்மை ஈண்டு இனங்குறித்ததெனக் கூறி, '(தமயந்தி) பெண்ணரசு ஆளும்' எனலுமாம். இன்னும், 'பெண்மை யரசு ஆளும்' என்பதற்குப் பெண் தன்மையாகிய ராச்சியத்தை ஆளுவள்' என்பாரு முளர். இஃது துருவகவணி.

௩௩. மோடு - உயர்ச்சி. முடிய - முடிவுநாள் வரையும்; சுமந்து ஏறமாட்டாது - சுமந்து நிலைத்திருக்க மாட்டாது. நாள் தேன் - புதிய தேன். அலம்பு - ததும்பும். கோதை - கூந்தலையுடையாள் அல்லது மாலை போல்வாள். 'மா நூபுரங்கள் வீழ்ந்து புரண்டு புலம்பும்' என்க. இது தற்குறிப்பேற்றவணி; இதனை, உத்பிரேக்ஷை யென்ப வடநூலார்.

௩௪. என்றும் நடங்கும்-எப்பொழுதும் அசையும். 'உலகு என்றது தீவுகளை'. அறுகால் சிறு பறவை - சிறிய வண்டுகள். 'இடை காற்றுக்கு ஆற்ருது தேய்ந்து என்றும் நடங்கும்' என்க.

௩௫. அளகபந்தி - முன்மயிர் வரிசை. இந்து முறி-சந்திரனது துண்டம். பூவாளி வேந்தன்-பூமியை யாள்பவனுகிய வேந்தனெனவும், மலரம்புகளையுடைய வேந்தனெனவும், மலையை யாள்பவனுகிய வேந்தனெனவும் பொருள் கொள்ப. எவாளி-அம்புகள்; மீமிசைச்சொல். ஏ ஆளி எனின்-அம்பின் வரிசை. 'சார்த்தியே வாளி' எனப் பிரிப்பினுமாம். 'தீட்டு மிடம் இந்து முறி யென் றியம்புவார்' என்க. தீட்டுமிட மென்றது நெற்றியை. சிலை யென்றது புருவத்தை.

௩௬. அன்னத்தை-அன்னம்போன்ற தமயந்தியை. உன்ன-நினைக்க. 'என் ஆவி சோரும்' என்க. அடைவு என்னை-சம்பந்தம் என்ன. நடைவென்ருள் - நடையில் வென்றவளாகிய தமயந்தி.

௩௭. 'பூ வெனப்படுவது பொறிவாழ் பூவே' என்றபடி ஈண்டுப் 'பூ' என்றது தாமரைப்பூவை. 'பூமனைவாய் வாழ்கின்ற புட்குலங்கள் யாம்' எனவே, 'யாம் அன்னத் தொகுதி' யென்பதாயிற்று. 'அவள் மாமனையில் மயிற்குலங்கள் வாழும்' என்றதனுல் யாம் அங்கு இனங் கண்டு சென்ருே மில்லை என்பது குறிப்பு. மயிற்குலமாவது மயில் போலுஞ் சாயலமைந்த மகளிர் கூட்டம். முன்னும், 'நாடிமட வன்னத்தை நல்ல மயிற் குழாம், மோடி வளைக்கின்ற தொப்பவே' என்ருர். காமன் - மன்மதன். படை கற்பான் - ஆயுதம் பயில; 'நாம் பாதநடை கற்பான் வந்தடைந்தோம்' என்க. மன்மதன் தமயந்தியின்பாற் படைகற்றற்கு வந்தமை கண்டு நாம் நடை கற்றற்கு வந்தோம் என்பது கருத்து.

௩௮. இற்றது - அழிந்தது. உன் வாய் உடையது-உன்னிட முளது; உன் வாய்ச் சொல்லி னுளது என்பது மொன்று. வாமம் - அழகு.

௩௯. சேமம் - காவல். உயர்ந்து - மேற்பறந்து.

௪0. இவ்வளவில்-இந்தக்கால வெல்லையில்; அஃதாவது இந்நேரம். மீளுங்கொல் - திரும்புமோ? மும்மதம் கன்னமதம், கபோலமதம், பீஜமதம்.

௪க. 'குயில்' என்பதனைக் 'குயிற் சேவல்' என முன் னுங் கூட்டுக. குயிற்பெடைக்கு - பெட்டைக்குயிலோடு; இது வேற்றுமை மயக்கம். பூவின் இடை அன்னம் செங்கால் இள அன்னம்-தாமரை மலரின்கண் வாழ்கின்ற அன்னமாகிய சிவந்த கால்களையுடைய இளமை பொருந்திய அன்னம். நடையன்னம்-அன்ன நடை யுடையாளாகிய தமயந்தி.

௪உ. குயிலுக்கு - குயில்போன்ற இனிய குரலுடைய தம யந்திக்கு. அலசுவான்-வருந்துவானாகிய நளன். தோகை-கலா பம். இது வேற்றுப்பொருள் வைப்பணி; இதனை அர்த்தாந்தர நியாசம் என்ப வடநூலார்.

௪ங. வார்-கச்சு. பிறந்துடையீர்-பிறந்துளீர். கொடியார்-பூங்கொடிகளே! இது விளி யென்க. 'கொடுமையானவர்' எனப் பொருள்படுதலுங் காண்க. துடியா-துடித்து. நெடிதுயிரா-பெரு மூச்செறிந்து.

௪௪. விடாய் தீர்ப்பன இளநீரும், கருப்பஞ்சாறும், தாம ரைத் தடாகமும், சோலை நிழலு மாதலின், என் காமவிடாய் கொங்கையாகிய இளநீரானும், சொல்லாகிய கருப்பஞ்சாற்றா னும், உந்திச்சுழி யாகிய தடாகத்தின்கண்ணும், குழலாகிய சோலை நிழற்கண்ணும் இருந்து தணியேனோ வென்றான். நறு-நல்ல. தாமம்-மாலை. வெய்தாம் - வெப்பமுடையதாகிய. அக ரம் உலகறி சுட்டு.

௪ரு. வடிவில் - உருவத்தால். நன்னுதல் - அன்மொழித் தொகை. ஆடல்-விளையாட்டை. ஈங்கு நாடல் என்-இவ் விடத்தை நீ விரும்பி வந்த காரணம் என்ன?

௪சு. வாங்கும்-வளைக்கும், அஃதாவது கவரும். 'நளன் என்பான்' என்புழிப் 'படு' விகுதி தொக்கது. மேனிலம்-சுவர்க் கம். நால்நிலம்-குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்த லென்னும்

நான்கு பகுதியாகிய பூமி. 'நளனென்பான் வேந்தன் உனக்கு உளன் என்பான் ஈங்கு நாடல்' எனச் சொற் பொருத்துக. என்பான்-எதிர்கால வினையெச்சம். 'என்பான்' அசைநிலை யென்பாரு முளர்.

சஎ. மறம்-வீரம். திறம்-மேன்மை. அல்லனேல்-அல்லனு யின். ஏல்-எனின் என்பதன் மரூஉ. ஓகாரம் எதிர்மறை.

சஅ. புள்ளின்-(அன்னப்) பறவையின். மொழியினொடு-சொல்லொடு. பூ வாளி-(மன்மதனுடைய) மலரம்பு. உள்ளம்-மனம். வாய்ந்து-(பசலையொடு) பொருந்தி. பொதி-கூட்டம். ஓதி-கூந்தல். பொன் இலக்குமிபோன்ற தமயந்தி.

சகூ. முன்னம்-எதிரில். முயங்கினாள்போல்-தழுவின வளைப்போல. பாரா-பார்த்து. மற்று-பிறிது.

ருO. வாவி-தடாகம். ஆவி-உயிர். அளித்தாய்-முன்னிலை யொருமை இறந்தகால வினையாலணைந்த பெயர். ஆதி-ஆவாய். பதைத்து-(மனம்)பதறி.

ருக. வனம்-அழகு. என்ன-என்று சொல்லும். முயங்கு விப்பேன்-அணைவிப்பேன். ஓதி-சொல்லி. பூங்கணைகள்-(மன் மதன்) மலரம்புகள். இருந்தவன் நளனென்க.

ருஉ. கொற்றவன்-வீமன். கோமகள்-தமயந்தி. அறியா-அறிந்து. பொற்றொடிக்கு-தமயந்திக்கு. வேறுபாடு-விகாரம். பெற்ற கொடி-(தமயந்தியின்) தாய்.

ருங. 'கருங்குழலார் செங்கையினால் வெண்கவரிப் பைங் கால்' எனக் கருமை, செம்மை, வெண்மை, பசுமை யென்னும் வெவ்வேறு நிறங்களமையக் கூறுதலின் 'முரண்டொடை'. கால்-காற்று. புரிவளை-முறுக்கமைந்த சங்குகள். நல்லாள்-தமயந்தி.

ருச. கோதை-மாலை. காந்தாரம்-ஒருவகைப்பண். 'பூந்தார் அம் மெல் ஓதி' எனப் பிரிக்க. அம்மெல் ஓதி-அழகிய மென்மை யான கூந்தல்.

ருரு. நீர்-வியர்வை நீர். பேதை-மகள். 'நின்றாள் தன் பேதையை' என மாறுக. பாரா-பார்த்து. மலர் வேய்ந்து-மாலை சூட்டி. மலர் வேய்ந்து கொள்ளு மணமாவது சுயம்வரம்.

ருசு. எழ் என்று-(இற்றைக்கு) எழாநா ளென்று. அறை கென்று-(இந்நாடெங்கும்) அறைக என்று; ஈண்டு அகரந் தொக்க தென்க. கொழுந்து-நீர்த்திவலைகள். 'ஓடவிட்டு' என்றார் சுயம் வரத்திற்கு இடையில் ஐந்து நாட்களே யுளவாகலின்.

ருஎ. தாமத்து-மாலையையுடைய. நாமத்தால்-பெயரால். குழாம்-கூட்டம்.

ருஅ. செந்து-அணு; ஈண்டு மகரந்தப்பொடி யென்க. செந்து அடையும்-மகரந்தப்பொடி படியும். இனி, செந்து-'ஓசை' என்பாரு முளர். அவர் 'செந்து அடையும்' என்பதற்கு '(தேனுண்ணுதலின்). ஓசை தடைப்பட்டு நிற்கும்' என்று உரை பகர்வர். செய்யாள்-இலக்குமி. வளர் மார்பன்-திருமாலின் கூறான வீமன். 'நா விஷ்ணு: பிருதிவீபதி' எனவும், 'திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்' எனவும்,

'முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்'

எனவு மிருத்தலின், வீமனைத் திருமா லென்றார். கந்து-கட்டுத் தறி. கிளை-கூட்டம். பொன் நகரில்-அழகிய குண்டினபுரத்தில்

ருகூ. 'சோலைகள் உள்ளும் வாவிகள் புறமும்' என்க. 'உள்ளும் புறமும் இனிது உறைந்தார்' என்பதற்கு மனமும் உடம்பும் ஒன் கிருப்பத் தங்கின ரென்பாரு முளர். அரி-(சிவந்த) ரேகைகள். பூமகளை-திருமகளை. பொன்னை-பொன்போலப் போற்றத் தக்காளை.

சூ0. வழி-அன்னஞ் சென்ற வழி. விழி-பார்வை. நாமம் மொழி-பெயராகியசொல். 'தன் நெஞ்சு மோகச் சுழிமே லோட வைத்து' என்க. அயர்வான்-சோர்வான். மஞ்சோடு-அழகோடு. 'மஞ்சோடு அ அன்னம் வர' என்றது காரிய சித்தி குறித்தற்கு

என்க. இனி. 'மஞ்சு ஓட' எனப் பிரித்து, (தான் வந்த வேகத்தின் எழுந்த காற்றான்) மேகம் (குலைந்து) ஓட' என்பாருமுளர்.

சுக. செல்வர் முகம் பார்த்து அருள் நோக்கி-செல்வருடைய முகத்தைக் கண்டு அருளுண்டோ வென ஆராய்ந்து. முன் இரந்து-அவர் எதிர் நின்று யாசித்து. அகம் பார்க்கும்-(இது தருவோமென்னும்) அவரது உள்ளக் குறிப்பை எதிர் பார்க்கின்ற. அற்றோரை-வறியரை. கேளா இருந்திட்டான்-கேட்டிருந்தான். கேளாரை-பகைவரை. வாளான்-(தன்) வாளிற்கு; இது வேற்றுமை மயக்கம். விருந்திட்ட-விருந்து செய்த.

சுஉ. மீள - மறுவலும். தேன்மொழிக்கு-தேன்போலு மினிய மொழியையுடைய தமயந்திக்கு. தீது இலவே-தீமைகள் இல்லனவா? அஃதாவது, தமயந்தி க்ஷேமமா? திருந்தாரை-பகைவரை. எம் ஒழிக்கும்-களிப்பைக் கெடுக்கின்ற. 'ஏமம்' 'ஏம்' என நின்றது கடைக் குறை யென்க.

சுங. உற்றதுவும்-(தான்)சேர்ந்ததையும். அவள் உற்றதுவும்-(தன் சொல்லான்) அவள் அடைந்த காதலையும். 'அறிவு' என்புழி இழிவு சிறப்பும்மை தொக்கதென்க.

சுச. கேளாது-(தன்னைக்) கேளாது. ஓட்டை-உள்ளீடற்ற. குழியில் படு-(யானை வேட்டுவன் அகப்படுத்தற்கு வெட்டிய) குழியில் வீழ்ந்த. தழலில்-நெருப்பில். சாய்ந்து-வாடி.

சுரு. கோதை-உவமவாகுபெயர். ஏதம்-குற்றம். காட்சியர்-அறிவுடையார். அடையாத-மூடப்படாத; யாசகர் வரவை எதிர்பார்த்தலின் வாயிலடைத்த லில்லை யென்க.

சுசு. காவலன்-வீமன். கடை காவலர்-வாயில் காப்போர். வாளி-அம்பு. காதலான் மயங்கி நின்றமையானும் விரைவானும் 'தேரின் மாப்பூட்டு' என்பதொழிந்து, மாவிற் றேர்பூட்டு' என முறை பிறழச் சொற்றன னென்க.

சுஎ. கெட்ட-மறைந்த. கீழ் மகளிர்-பள்ளப் பெண்கள். இட்ட-(களைபிடுங்கி) எறிந்த. கட்டி-மண்ணாங்கட்டி. கடனுடை வென்றது வீமனை.

சுஅ. சடைச் செந்நெல்-கதிர்த்திரட்சியையுடைய செந்நெல். பொன்-பொன்போன்ற நென்மணிகளை. தன் நாடு-நிடததேயம். அடற்கு-வெற்றிக்கு. வில்லியரும்-வில்லேந்திய அரசர்களும். வாழு நகர்-குண்டினபுரம். கடற்றானை பின் தன் நாடு ஆக, கடற்றானை முன்னாக நகர் கண்டா னென்க. அஃதாவது சேனையின் பின்னணி நிடததேயத் தெல்லையி னிற்க, அதன் முன்னணி குண்டின புரத்தி னின்றது என்பதாம். சேனையின் பரப்புக் கூறியபடி இது. கம்பநும் பாலகாண்ட எழுச்சிப் படலத்துள்,

'உழுந்திட விடமிலை யுலக மெங்கணும்
அழுந்திய வுயிர்க்கெலா மருள்கொம் பாயினன்
எழுந்தில னெழுந்திடைப் படருஞ் சேனையின்
கொழுந்துபோய்க் கொடிமதின் மிதிலை கூடிற்றே'

என்றதூஉங் காண்க.

சுகூ. கருதியது செய்து முடிக்கும் ஆற்றலுடையா னென்பார் 'நெற்றித் தனிக்கண் ணெருப்பைக் குளிர்விக்கும், கொற்றத் தனியாழ்க் குலமுனிவன்' என்றார். நெற்றித் தனிக்கண்-(சிவபிரானுடைய) நெற்றியின்கண் விளங்கும் ஒப்பற்ற கண்ணாகிய. 'நெருப்பை' என்புழி உயர்வு சிறப்பும்மை தொக்க தென்க. யாழ்-'மகதி' என்னும் யாழ். முனிவன்-நாரதன். தேன்-நன் மணத்தை நாடிச்செல்லும் ஒருவகை வண்டு. தரு-சந்தானம், அரிச்சந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகமென்னும் பஞ்ச தருக்கள். திருமணி-சிந்தாமணி; இது நினைத்தவற்றை யெல்லாம் நினைத்த வளவில் தருவது. வான் நாடு-சுவர்க்கம். காத்தான்-காப்பவனாகிய இந்திரன். மருங்கு-ஏழனுருபு.

எO. விறல்-வெற்றி. விண் நாடு சேர்கின்றார்-சுவர்க்கத்திற்கு வருகின்றார். ஆரும் இலர்-ஒருவருமில்லை. ஆரும்-'யாரும்' என்பதன் மரூஉ. ஐயுற்று-சந்தேகித்து. நாகம் சிறகு அரிந்த மின்முகம் வேல் கையான்-இந்திரன்; முற்காலத்து மலைகள் சிறகுகளுடையனவாய்ப் பறந்து சென்று விழுந்து பல நகரங்களை அழித்தமையின் இந்திரன் அவற்றின் சிறகுகளை அரிந்தா

னென்பது புராண கதை. நாகம் - மலை. 'வேல்' ஈண்டு இன மாகிய வச்சிராயுதத்திற்கா மென்க. அக்காலத்து மண்ணரசரும் விண்புக்கு இந்திரனைக் கண்டு மீளலுண் டென் றுணர்க; முசுகுந்தன், தசரதன், அருச்சுனன் முதலிய மன்னர் மன்னர்கள் விண் புக்கு மீண்டமை புராணேதிகாசங்கள் கூறுதலின். போரின் மடிந்து வீரசுவர்க்கம் புகுகின்றூராகிய அரச ரில்லை யாதற் கேது வென்னென் றையுற்று னென்பாரு முளர்.

எக. விரை - வாசனை. புனைவான் - அணிய; 'வான்' விகுதி பெற்ற எதிர் கால வினையெச்சம். 'புரந்தரன்' என்பதற்குப் '(பகைவர்) நகரங்களை அழிப்பவன்' என்பது சொல்லின்படி பொரு ளென்க

எஉ. ஆகத்தாள்-தேகத்தாள். மழ-இளமை; இஃது உரிச்சொல்' களிறு - ஆண்யானை; 'வேழக் குரித்தே விதந்து களிறென்றல். (தொல்-பொருள்-ருகூ0). 'மெய்த்தீபம்' என்றது தூங்கா விளக்கை யென்ப; ரத்நதீப மென்பாரு முளர். மெய்-அழியாமை. திருவுக்கு - செல்வத்திற்கு; காமன்றிருவாவது காதல். பேரழ காதலிற் பெரும் பாரமாயிற்றென்பார் 'அழகு சுமந்திளைத்த' எனவும், வீமன் குலத்தை விளக்க வந்தவளென்பார் 'வீமன் குலத் துக்கோர் மெய்த்தீபம்' எனவும், காமன் செய்யுங் காதல் சிதை யாது காப்பவ ளென்பார் 'காமன்றிருவுக்கோர் காப்பு' எனவுங் கூறினு ரென்க.

எங. ஈர்ந்தான் - இந்திரன். கோல்வளை - அன்மொழித் தொகை; கோல்-திரட்சி; பூத்தொழி லென்பாரு முளர். சால்பு-நிறைவு.

எச. கெடுத்து - காணுது: கெடுத்தானேற் றன்மனைவி
கைப்பற்றி, வந்து மூழ்கியுந் தாரான்'
(பெரிய புராணம்—திருநீல - ௩உ.)

என்ற விடத்தும் இச்சொல் இப் பொருட்டாதல் காண்க. தேடுவான்-தேட; வருவானை-நளனை. இஃது தேதுத் தற்குறிப்பேற்றம்.

எரு. இசை - ஒருப்படு. ஏவற்கு - ஏவினது செய்தற்கு.

எசு. 'ஆக' வியங்கோண்முற்று. தோகையை - தமயந்தியை. ஆகத்தான் - ஆகத்தால், மனத்தால். கோது ஆக-(தனக்குப் பயனில் பொருளாகக் (கருதி). வென்றான்-(காதலை) அடக்கினான்.

எஎ. தலைமேற் செல்லும் - சிரமேற் கொண்டு செல்லும். திரிந்து - மாறுபட்டு. மீண்டு ஏகும் - மறுபடி செல்லும். பாவில்-நூற் பாவின்கண். குழல் - நெய்குழல். பூவின் - பூமிக்கு. நெஞ்சு உழலுங் கொள்கைத்து - (காதலை அடக்கினானாயினும்) மனஞ் சுழலுந் தன்மைத் தாயிற்று.

'அய்யனு மிளவலு மணிநிலை மகடன்
செய்தவ முடைமைக டெரிதர நதியும்
மைதவழ் பொழில்களும் வாவியு மருவி
நெய்குழ லுறுமிழை யெனநிலை திரிவார்'

என்னுங் கம்பர் கவி காண்க.

எஅ. ஆவது - (என்னாற்) செய்யலாவதோ ரேவலை. அதுவே தலைநின்றேன் - அவ் வேவலையே முதன்மையாகக் கொண்டு நின்றேன். தேவர்கோனே - இந்திரனே ! காமம் நீர் ஆழி - காமமாகிய நீர் நிறைந்த கடல், ஆறு உள்ளத்தவன் - மனம் அடங்கினவன் ; இது வடநூன் முடிபு.

எகூ. ஒழிய - வறிதிருக்க. பொற்றோளான் - இந்திரன். பாண் ஆரும் - பாடல் பொருந்திய.

அ0. இசை-புகழ். முகந்த-(மேன்மேலுங்) கொண்ட. வாயும்-வாயிலும், இயல் தெரிந்த - இலக்கணந் தெரியநின்ற ; இயல் ஈண்டுச் சிற்பநூ லிலக்கணம். நாவும் - நடுவும் ; இடைநகரும். இசை கீதமும் இயல் இலக்கணமு மாகவின் இன்னிசைப் புலவரும் நல்லியற் புலவரும் அந் நகர்க்கண் யாண்டு முண்டெனல் குறித்து, 'இசை முகந்த வாயு மியறெரிந்த நாவும்' என்றா ரென்க. திசை - எட்டுத்திசையும். முகந்தால் அன்ன - அளந்தாற் போன்ற.

அக. குவளை-தமயந்தி கண்கள். தாமரை-நளன் கண்கள். மது நோக்கும்-(வண்டுகள்) தேனை நோக்கி வரும். பொது நோக்கு-யாவர்மாட்டும் ஒரு தன்மைத்தாய நோக்கு; 'ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல், காதலார் கண்ணே யுள' என்பது காண்க. தாமரைக்கே-வேற்றுமை மயக்கம்.

அஉ. 'அல் பின் தாழ்' எனப் பிரித்து 'இருள் பின்புறத்தே தாழ்ந்தாற்போன்ற, என்றேனும், 'இருள்(தோற்ற) பின் தாழும்' என்றேனும், 'இருள் மிகத் தாழும்' என்றேனும் பொருளுரைக்க. 'பூண்டதோர் அல்' என்றுதல், 'பூண்டதோர் வேட்கை' என்றுத லியைக்க. 'பூண்டதோர் அல்' என்றியைப்பின், '(பகை) கொண்டதோர் இருள்' என்க. 'பூண்டதோர் அற்பின்' எனக்கொண்டு 'கொண்டதாகிய ஒப்பற்ற அன்பினால்' எனப் பொருள் கூறுவாரு முளர். கமலம், நீலம் இவை முறையே நளன் கண்களும், தமயந்தி கண்களு மாம். கூந்தலான் பூண்டதோர் வேட்கையகத் தடக்கிக் கற்பின் தாழ் வீழ்த்த கதவு தீண்டு மளவிற் றிறந்ததே என்பதே முடிபு. கற்பின் தாழ்-கற்பாகிய தாழ். கற்பாகிய தாழென்றவர் மனமாகிய கதவெனவும் சேமநிதியாகிய வேட்கையெனவும் உருவகஞ் செய்யாமையின் இஃது ஏகதேசவுருவகம்.

'காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு' (திருக்குறள்-கஉருக)

என்னும் பாவினைக் காண்க.

வேட்கை-ஆசைப்பெருக்கம்.

அரு. இப்பாட்டு விற்பூட்டு. நெஞ்சு-(நளனது) மனத்தை. தடவும்-(கண்ணாற் காணமுடியாததொரு பொருளின் தன்மையறியக் கையாற் றடவுதல் போல இன்னபடித் தென் றறிய) மெல்ல ஆராயும். 'ஒண்டொடியாள் நெடுங் கண்கள்' என்க. விஞ்ச-மிக. அங்ஙனமே நீண்டதோ-அவன் மனம் ஆழ்ந்திருந்தமையின் அது காணாது (அவன் அழகின் கடலாகிய) அதனுள் நெடுகச் சென்றனவோ? மலராள்-விசயலட்சுமி. ஆண்ட-ஆட்சிகொண்ட. மன்னன் அழகு உய்ஞ்சு இங்ஙனே கரை ஏற ஓட்டுங்

கொல்-நளனுடைய அழகின் கடலானது அவள் தன்னிற் பிழைத்துக் கரையேற வொட்டுமோ? 'நளனது கடல் போன்ற அழகி னகப்பட்ட தமயந்தி கண்கள் கடலகத்து முத்தைப் போன்ற அவன் உள்ளக் கருத்தை யறிய முயன்று அக் கடலின் மிக ஆழ்ந்தன; மீளுமா றுண்டோ?' என்பது திரண்ட பொருள். கண்கள் நீண்டதே-இஃது தொருமை பன்மை மயக்கம். கொல், ஓ-இவ் இடைச் சொற்கள் ஐயப்பொருளன.

அச. மன்-நளன். ஆகத்து உள்-மார்பினுள். வார்-கச்சு. நாண்-நூல். உன்னு-நினைத்து. நாணைத் தறியாக வுருவகஞ் செய்து அன்பை யானையாக வுருவகஞ் செய்யாமையின், இஃது தேகதேச வுருவகம்.

அரு. விஞ்சைக் கிறைவனே-வித்தியாதரனோ? 'உள்ளவா' என்புழி 'ஆ' 'ஆறு' என்பதன் விகார மென்க. 'வாள் (பெற்ற) நீர்' என்க. வாயில் காப்போர் காணாது கன்னிமாடம் புகுந்தமையின், விஞ்சைக் கிறைவனோ தேவனோ வென் றையுற்றாள்.

அசு. செம்மை-நடுவுநிலைமை. வாராத-(பூமிக்கு) வருதற்கரிய. எவனுடன்-எவலின்; இது வேற்றுமை மயக்கம்.

அஎ. யாது என்று இகழாது-இஃதென்ன வார்த்தை என் றிகழாது; அஃதாவது ஒவ்வாத வார்த்தையென வெறுத் தொழியாது. பரோபகாரியாதல் குறித்தற்குத் 'தொடையிற் றேன் றும்பிக்கே யூட்டுவான்' என்றார். எல்லாம்-(உரைக்கின்றன) வெல்லாம்.

அஅ. இயமரம்-வாத்தியம். இனி இயமும், மரமும் என் பாரு முளர். இனவளை-'வளையினம்' என மாறுக. மரு-'மருவு' என்பதன் விகாரம். நீள் குடையா னென்றது நளனை. 'நினை கென்றாள்' என்புழி அகரந் தொக்கது.

அகூ. போது-செந்தாமரை மலர்; நீல மலருமாம். இனி வினைத்தொகை யெனக் கொண்டு 'ஓடிய (செவ்வரியுடைய)'

எனினுமாம். தான்-அசை. ஆதரித்தார் தம்மோடு-விரும்பின (மற்றை) அரசர்களோடு.

௬0. முரலும்-ஒலிக்கும். வண் தார் எனப் பிரிக்க. போந்து-இதன்கட் 'போ' என்னும் பகுதி 'புகு' என்பதன் மரூஉ. வச்ராயுதன்-இந்திரனை. கண்டார்-(தான் திரும்பி வரக்) கண்ட தேவர்கள். கலந்து-கூடி. 'போந்து கலந்து தொழுதான்' என்க.

௬௧. ஏவலுடன்-ஏவலான். நன்கு உரைத்த-(தனக்கு) நன்மை, அஃதாவது சுபஞ் சொல்லிய; நளனும் மீண்டு சென்று அவள் தனக்கு நன்மை சொன்னது பற்றியும் அவள் வன்மொழிகளிற் சில மறையாது யாவுஞ் சொல்லினனென்பது குறிப்பு. தேவர் மனமகிழத் தானுரைத்த மென்மொழியும் (அவர்) உரைத்த பெண்ணணங்கின் வன்மொழியும் நன் குரைத்தான் என முடிப்பினுமாம். 'பெண்ணணங்கின் நன்குரைத்த வன்மொழி' எனக் கூட்டுவாரும், 'நன்குறைத்த' என்பது பாடமென்பாரு முளர். அணங்கு-தெய்வம்.

௬௨. அங்கி-நெருப்பு. அமுத நீர்—அமிர்தம் போன்ற நீர்; அமிர்தம் போன்ற உண்டியும் நீரும் எனினுமாம். அம் பூ-அழகிய பூக்கள்; அழகிய பூமி யென்பாரு முளர். அணி ஆடை-அழகிய வத்திரம். அம்பூ அணி ஆடை-அழகிய பூத்தொழிலமைந்த உடுக்கும் வத்திரம் என்பது மொன்று. வேண்டினை-வேண்டுவாய். பெற்றாய்-பெறுவாய். வேண்டினை, பெற்றாய் என்பன கால வழுவமைதி. ஆகண்டலன்-இந்திரன்; (பகைவரை) நன்கு கண்டிப்பவன் என்பது தாதுப்பொருள். மற்றோன்-அக்கினி.

௬௩. மங்கை வயம்-தமயந்தி வசம்.

௬௪. உவந்து பின்போன-மகிழ்ந்து (நளன்) பின் சென்ற. 'வல் நெஞ்சு' என்றார் இத்தனை காலம் தன்னோடு ஒன்றியிருந்து இப்போது சிறிதும் பற்றின்றி விட்டுச் செல்லுதலி னென்க.

'தனக்குறந் தமர்க்குறுந்தான் றனைக்கரந் தரிதிற் கொள்ளும்
வனக்குறும் பற்கு வாகைக குறுவனே மயிலே மானே
எனக்குறு மென்று காத்த வென்னைவிட் டுன்பால் வந்தால்
உனக்குறு மென்றோ நீயென் னுள்ளத்தைக் கொண்டா
யென்றான்'

என்னும் அரிச்சந்திரபுராணப் பாட்டினை ஈண்டு நோக்குக. அயிர்த்தாள் - சந்தேகித்தாள்.

கூரு. வெள்ளம் - நீர்ப்பெருக்கு. பிள்ளைமீன் - சிறுமீன்களை. புள் - நீர்ப்பறவைகள். அரிக்கும் - ஆராயும். அரிக்க - துளைக்க.

கூசு. வாய்ப் பூவின் வாளி என மாறுக. 'ஆவியார்' என்புழி 'ஆர்' என்பது சிறப்புப்பற்றி வந்த விகுதி.

கூள. துணை இழப்ப - இரண்டாந் தன்மை இழப்ப; அஃதாவது ஒன்றுபட. வெவ்வாய் - வெம்மை வாய்ந்த. வெற்பு - அத்தகிரி.

கூஅ. பாய் இருள் - பரந்த இருள். படாம் - திரைச்சீலை. ஆரணம் அறைந்து பாட - (மறையவர்கள்) வேதஞ் சொல்லிப் பாட. குடபால் வரை - மேற்றிசை மலை, அத்த கிரி.

கூகூ. கரும்பு வில்லி - மன்மதன். காலையந்தியு முளதாகலின் அதனி னீக்குதற்கு 'மாலை யந்தி' என்றார். 'மாலை' என்பது பிறிதினியைபு நீக்கிய விசேடணம். புன்மை - சிறுமை; அஃதாவது இருள் கூடுதலின் நுண்பொருள்கள் காணப்பெற மாட்டாமை. 'வாளற்றுப் புற்கென்ற கண்ணும்' என்றார் நாயனாரும். இனி, 'புன்மாலை' என்பதற்கு அற்பமாகிய இயல்புடைய எனப் பொருள் கூறுதலு மொன்று.

௪00. புற்கென்று ஆர் - புல்லியதாய்ப் பொருந்திய. அந்தோ புனை மலர்க்கண் நீருகுப்ப நிற்கின்றது - அந்திப்போது (பிரிந்த தலைவியரது) அழகிய மலர்போலுங் கண்கள் நீர் துளிக்க இன்று நிற்கின்றது' என்க. அந்தோ - இஃது இரக்கக் குறிப் பிடைச்சொல். நிலம் காப்பான் - பூமியைக் கைக்கொள்ள; 'பான்' எதிர்கால வினையெச்ச விகுதி. முற்கொண்டு - முற்பட்டு; விரைந்து. அடை

கின்ற-வருகின்ற. ஆண்டு அஞ்சினேர்க்கும்-அப்போது (அவரை எதிர்த்து நிற்றற்கு வலியின்மையின்) அஞ்சினுர்க்கும். இடை நின்ற காலம் போல்-இடைப்பட்ட (அஞ்சினுர் கலங்கிக் கண்ணீர் விடும்) காலம்போல, வலியுடை அரசர் போர்க்கு வரின் வலியில் அரசர் கலங்கிக் கண்ணீர் விடுதல்போல அவ்வந்திப்போதின்கண் மன்மதனுர் போர்க்கு வருதலின் தலைவரைப் பிரிந்த மெல்லிய லார் கலங்கிக் கண்ணீர் விட்டன ரென்பது கருத்தென்க. முடிபுகள் வெவ்வேறு காட்டி இப் பாவிற்குப் பலவாறு பொருள் கூறுவர்.

கoக. முறுவலித்ததாம்-புன்னகை செய்ததாம். 'வந்தால்' என்புழி 'ஆல்' அசை. 'பிறை வந்தது' என முடிவுசெய்க.

கoஉ. மை-அஞ்சனம். கோட்டு மண் கொண்ட-தலையிலே கொண்ட. சிந்தாமணியுடையாரும் கோட்டு மண் கொண்ட மார்பம்' [மண்மகள்-கசுஙு.]என்றமை காண்க. களங்கமுண்மையின், 'இருளைக் கோட்டு மண் கொண்ட குளிர் திங்கள்' என்ருர். நிலாம்-நிலவும், பொருந்தும். போத - மிக.

கoங. தான்-அசை. மன்னும்படி-மீண்டு வருமாறு. மழைத்தாரை-மழைத் தாரை போன்ற; மழைத் தாரையோடு கூடிய வென விரிப்பாரு முளர். வாடை-வடக்கினின்றும் வரும் காற்று. நாங்கள்-ஈண்டுக் 'கள்' பகுதிப்பொருள் விகுதி. பேர் வந்தேன் என்னும்-(எமக்குப்) புகழ் வரும்: இறப்பின், இகழ் வருமென் றேங்கியபடி. இதனைக் 'காரன்ன மேனிநங் கண்ணனும் வாராஞல், பேரென்னை மாயாதால் வல்வினையேன் பின்னின்றே' (திருவாய்மொழி-டு-பத்து ச திரு-டு-பாசுரம்.) என்பதனேடு ஒப்பிடுக. அன்றி, வந்தே னென்னும் பேர்' என சேர் நிறுத்து' (மீண்டும்) பிறந்தே னென்னும் பேர் (உண்டு) எனப் பொருள் கூறுவாரு முளர்.

கoச. மீன்-நட்சத்திரம். இது தற்குறிப்பேற்றம்.

கoடு. கானும்-காடும். காவும்-சோலையும், படைவீடு-பாசறை; போர்மேற் சென்ருே ருறைவிடம். வானும் தேர் வீதி-

ஆகாயமும் (தென்றலாகிய) தேர் ஓடும் வீதி. கொடியாடை-கொடிச்சீலை. கோதண்டசாலை-விற்சாலை. எங்கும் கரும்பு விளைதலின் 'வையமெலாம்' கோதண்டசாலை என்றார். பொடியாடி-சிவன். எயிறோ-பல்லோ?

கO௬. மூரி-வலிமையுடைய. இரா உள்ளம் கொடிது என்னும்-இரவு கொடிய மனமுடைய தென்பள். இரா-இருந்து. புலரா நின்று-உலர்ந்து.

கOஎ விழுங்கி-விழுங்குதலின். ஓகாரம் ஐயவினா.

கOஅ. ஆழி-கடல். துயிலாதோ-சத்தமின்றி யிராதோ?

கOகூ. வரி-வண்டு. ஆடி-பாட்டையுடைய வண்டுகள் ஆடி. பொறையாக-பாரமாகலின். 'மோகத்துறை' என்றார் பலரதன்கண் துறுத்தலின் (நெருங்குதலின்).

ககO. இங்ஙனே-இப்படி. அஃதாவது இத்துணை வெப்பமாக; சோர்குழல்-சோர்கின்ற கூந்தலையுடைய பெண்; இஃது அன்மொழித்தொகை. 'சோர்குழல்' என்றது அபலை (மெல்லியல்) யென்பது குறித்தற் கென்க. எவன்-என்? மாரன்-மன்மதன். பொர-(நீ அபலையொடு) போர் செய்தலின். உனக்குக் கண்ணி அளித்தான்-உனக்கு வெற்றிமாலை தந்தானோ? இதனை வடநூலார் காகுவென்ப. காகு வாவது முகவிகாரத்தானதல் ஸ்வர விகாரத்தானதல் தோன்ற நிற்பது. 'தும்முச் செறுப்ப வழுதாளுமருள்ள லெம்மை மறைத்திரோ வென்று' என்னுந் திருக்குறளிற்குப் பரிமேலழக ருரை காண்க. இன்று புலரா இரவு அளித்தான் அல்லனோ-உனக்கு இன்று (நீங்காத) யாசகத்தைத் தந்தானல்லனோ? இரவு-இராப்போது, யாசகம். ஈண்டுச் சிலேடையாகச் சந்திரனைப் பழித்தல் காண்க. இனி, உனக்கு இன்று பொர கண்ணி அளித்தான் (ஆகிய) மாரன் (நல்லனோ) புலரா இரவு அளித்தான் (நல்லனோ) என் றநுவயித்து 'உனக்கு இன்று அபலையொடு போர்புரிவதற்கு வெற்றிமாலையைத் துணிவுபற்றி முன்னரே தந்தானாகிய மன்மதனுங் கொடியன். உனக்கு இன்று

விடியா இராப்போதைத் தந்து தான் வாராது நிற்குஞ் சூரியனும் கொடியன்' எனப் பொருளுரைத்தற்கும் இடமுண்டெனக.

கககூ. நிலவின் தழல்-நிலவாகிய நெருப்பு. சிறை-சிறகுகள். தாமம்-மாலை. கரியா-கரித்து. கரியாக-சான்றாக. தனிமையை வற்புறுத்திக் கூறுவான் 'யாமங் கரியாக' என்றார். யாமம்-நான்கு யாமமும்.

ககஉ. கபோலம்-கன்னம். 'பூங்கணை' என்றது மன்மதன் மலரம்புகளை. பஞ்சாக்கி நடுநின்று தவம் புரிதலுண்மையின் பஞ்சாக்கி போன்ற பஞ்சபாணங்களின் நடுநின்றாளைச் 'செய்தாள் தவம்' என்றார்.

ககூ. அடைய-முழுவதும். விள்ளாத-நீங்காத. புதைய-மறைய. இதையம்-இதயம்; இது மொழியிடைப் போலி.

ககச. ஊக்கிய சொல்லர், ஒலிக்குந் துடிக்குரலர், வீக்கிய கச்சையரென்பன வடநூன் முடிபுகள். ஊக்கிய-மேற்கிளர்ந்த; அஃதாவது உரத்த. துடி-பறைபோலும். வீக்கிய-கட்டிய. இடையாமம்-நள்ளிரவு. இருளின் புடைவாய்-ஓரிருளின் பக்கத்தில், நங்கள்-'கள்' அசை. இருள் புடைத்தாற்போன்று-வேறோரிருள் பருத்தாற்போல. ஊர்காவலர் கருநிறத்தராகலின், 'இருள் புடைத்தாற் போன்று' என்றார்.

ககரு. 'களிறு சேமம்புக' என்க. சேமம்-காவலிடம். செவ்வழி-இஃதொரு சிறந்த பண். செவ்வழி யாழ்-செவ்வழிப் பண்ணிற் குரிய யாழ்; சிறந்தயாழென்னும் பொருட்டு. ஓவாது-நீங்காது. 'உலகு துயில் புக்கது' என்க.

ககசு. உயிர்-உயிர்ப்பு. உரைசோரச் சோர-சொல் மேன்மேலுஞ் சோர. கழுதும்-பேயும். வாயின் இரை-வாயிலுள்ள உணவு. 'இரை' யெனப் பிரிப்பின் மோனையின்றாமாகலின் 'நிரை' எனப் பிரித்து, வாயிலுள்ள (தசை) வரிசை எனினுமாம். 'எயிற்றினுக் கிடையிடை யானை யாளிபேய், துயிற்கொள்வெம் பிலனெனத் தொட்ட வாயினர்' (சுந்தர-காட்சி-கூசு.) என்றார் கம்பநம். 'கழுதும் சோரநின்று துயின்றதே' என்க.

கசஎ. துயின்று-மூடி. துணை-பெடையன்றில். என்னுஞ் சொல்-என்கிற (உலகர்) சொல். இன்று தவிர்ந்ததுபோல்-இது போது பொய்த்ததுபோல. (துணை) அரற்றி-(பேடையன்றில்) மிக்கொலித்து. சாம்புகின்றபோதே - அழிகின்றபோதே. அவிழ்ந்தது-ஒழுகிற்று. காதலர்க்குப் பிரிவுநேரின் அன்றி லோசை பகை யென்க.

'பெண்ணைமேற், பின்னுமவ் வன்றிற் பேடைவாய்ச் சிறு குரலுக், குன்னி யுடலுருகி நையாதார் [பெரிய திருமொழி] என்றார் திருமங்கை யாழ்வாரும்.

கசஅ. எழ் உலகு-சத்ததீவுகள். 'வேகின்ற ஆழ் துயரம் என்புழி, வேகின்ற என்பது காரணத்தின்கண் வந்த பெய ரெச்சம். பாழி-வலிமை. வரையோ-மலையோ. எனும்-என்று (யாவரும் ஐயுற்றுச்) சொல்லும். 'யான் இரவுக்குத் தின்னும் இரையோ' என்க.

கசகூ. கருவிக்கும்-வாள் ஆதிய படைகளுக்கும்.

'ஆண்டப் பிறைநீங்கலு மெய்திய தந்தகாரந்
தீண்டற் கெளிதாய்ப் பலதேய்ப்பன தேய்க்கலாகி
வேண்டிற் கரபத்திரத் தீர்த்து விழுத்தலாகிக்
காண்டற் கினிதாய்ப் பலகந்துதிரட்டலாகி'

[மாரீசன் வதை-கஙஅ.]

என்னுங் கம்பர் கற்பனைக்கு இது மாறாய தென்க.

இனி, 'கருவி' என்றது ஈண்டுச் 'சுடரை' யெனினுமாம். கம்பர் 'சுடர்புக்கு வழங்கலின்றி' (மாரீசன்வதை-கஙக.) என் றமையும், இந்நூலுடையார் 'கொள்ளிக்கும் விள்ளாத கூரிரு ளாய்' என்றமையுங் காண்க. கார் இருள் வாய் கங்குல்-கரிய இருளைத் தன் இடத்துடைய இராத்திரியை. உருவி-ஊடுருவி. ஊதை-குளிர் காற்று. கார் வண்டு பருகி-கரிய வண்டுகள் (தேனைக்) குடித்து. மருள் மாலை-(பொருள்கள் விளங்காது யாவரும்) மயங்கும் மாலை. உண்டு-(சாரத்தை) யுண்டு. 'உயி ருக்கு' என்புழி நான்கனுருபு பொருட்டென்னும் பொருளது.

கஉ0. ஏமாந்து-ஆசைப்பட்டு. 'ஏமாந்து எழுந்திருக்கும்' என்க. பூ மா தவிசின்-பூக்களும் மாந்தளிரும் பரப்பிய இருக்கையின். தரளம்-முத்து.

கஉக அமளி-படுக்கை; 'அமளியாகிய வெண்ணிலவின் மீதே' என விரிக்க. புரிகுழலை-முறுக்கிய, அஃதாவது சுருண்ட கூந்தலை. 'கொடிது தழலே உயிர்க்கும்' என்க. ஏகாரம் பிரிநிலை.

கஉஉ. மிடுக்கு-வலிமை. ஓச்சி-செலுத்தி. விடிய-விடிதற்கு. கொடியன்மேல்-பாவியாகிய என்மீது; ஈண்டு 'அன்' தன்மை ஒருமை வினை முற்று விகுதி யென்க. மா காதல்-மிக்க ஆசை. 'காதலனை எய்தப் பெறாத பாவியாகிய என்மீது அரசர்களும் தேவர்களும் காதல் வைத்ததுபோல இவ்விரவுங் காதல் வைத்ததோ' என்றுமென்க. இனி, 'கொடியனாகிய மன்மதன்மீது மிக்க காதல் வைத்ததோ' என்பாருமுளர். மன்னவர்-நள சக்கரவர்த்தியாருடைய. 'மன்னவர் அருளாயின் நீங்காது; இவ்விரவும் அஃதொப்பதோ? இது நீங்காதிருப்பதேன்?' என்பது கருத்து.

கஉ௩. வெய்துற்று-வருந்தி. உயங்கும்-வாடும். வறிதே-ஒரு பயனுமின்றி. வயங்கிழை-அன்மொழித்தொகை.

கஉச. விழுதுபட-விழுதின் றன்மை பொருந்த; விழுது-ஆலமர முதலியவற்றின் வீழ். திணிந்த-செறிந்த. வீங்கு இருள்-மிக்க இருள். அரண்-காவல். 'அரண் உண்டோ' என்க; இல்லை யென்றபடி.

கஉரு. முகிழ்ப்ப-குவிய. காசினி-காசினியோர்; இஃதாகுபெயர். கண் விழிப்ப-நித்திரை தெளிந்து கண் திறக்க, மலர. புலர்ந்தது-விடிந்தது.

கஉசு. வில்லி-மன்மதன். வல்லி-பூங்கொடிபோன்ற தமயந்தி. குணவாயிற் குன்று-கீழ்த்திசைமலை. அஃதாவது உதயகிரி.

கஉஎ. எறிந்த-அடித்த. வரை செறிந்த-மலையொத்த. துவள-அசைய. தயங்க-விளங்க. காலை முரசு-காலையிலடிக்கும் முரசவாத்தியம். கலந்து-கலந்தொலிப்ப; இஃதெச்சத் திரிபு.

௧௨அ. நீலம்-நீலமலர். 'நீலம் முன்றிலினது சிறிய கண்ணை நிகர்க்கும்' என விரிக்க. நீலமலர் இல்லினது முன்னிடத்தே அதன்கண்போல விளங்கிற் றென்பது கருத்து. விழிக்கு-பார் வைக்கு; அஃதாவது பார்வை தன்மேல் வீழ்தற்கு. நோற் றிருந்த-தவங்கிடந்த. சேய்-முருகனை யொப்பான்; ஈண்டு நளன்.

௧௨௯. நித்திலத்தின்-முத்துக்களையுடைய; அஃதாவது முத்துக்கள் பதித்த. பொன் தோடு-பொற்குழை. நீலமணித் தோடு ஆக-நீலரத்நக்குழையாகத் தோன்ற; 'ஆக' வென்பது காரியப் பொருட்டில் வந்த செயவெ னெச்சம். 'கண்களின் கருமையொளி பரத்தலின், முத்துத்தோடு நீலத்தோடு போலத் தோன்றின' என்பது கருத்து. வண்டின் மருங்கே வர-வண்டி னைப்போல அருகில் வர. கேழ்-நிறம்.

௧௩0. பிணைமான்-பெண் மான்களைப் போல. மாதர்-ஈண்டுத் 'தோழிமார்'. மாதர் மருங்கின் வெளிவழி-தோழிமா ருடைய இடைகளுக் கிடையிற் றோன்றும் வெளிவழியாக.

௧௩௧. மின் நிறத்து-மின்னல் போன்ற நிறத்தினை யுடைய. மன்னர் விழித்தாமரை பூத்தமையின் மண்டபந் தாமரைப் பொய்கையை யொத்திருந்த தென்றபடி. தமயந்தி அன்னநடை யுடைமையின், 'சிறை யன்னம் போவதே போன்று' என்றார்.

௧௩௨. இடம் கண்டு-சமயமறிந்து. ஆவம்-அம்புப்புட்டில். 'பூவாளி ஏவாளி' என்பவற்றின் பொருளை ௩௫-வது பாட் டுரையிற் காண்க.

௧௩௩. பரிசு என்று-தன்மைய வென்று. இயல் அணங்கு-இலக்கணத்தாற் றெய்வமகள் போன்றா ளொரு தோழி. கொடிக்கு-பூங்கொடி போன்ற தமயந்திக்கு.

௧௩௪. அமுதம்-நீர். புது கொழுந்து-புது நீர்த்திவலை. சுணங்கு-தேமல். துன்னார் கணம்-பகைவர் கூட்டம். கவிழ்ந்த-வீழ்தற் கேதுவான; இது காரியத்தின்கண் வந்த பெயரெச்சம். இது சோழனைக் குறித்த தென்க.

கூரு. 'வாய்' எழனுருபு. போழப்படாதோரும்-பிளக்கப் படாத மாவீரரும். சூர்வாய்-அச்சத்தை யடைகின்றதற் கேது வான. கண்ணேயும் வாளென்றல் கவிமரபாகலின் ஈண்டுக் கூறினரென்க. தோகாய்-மயில்போன்றவளே! மால்வரையை-இமயமலையை. 'செண்டால் திரித்த கோ' வென்றது கரிகாற் சோழன் செய்த வீரச்செயலை அவன் பின்னேன்மே லேற்றிக் கூறியபடி. இஃது இயன்மொழி. வடதேயத் தரசர்களை வெல் லப்போந்த கரிகாற் பெருவளத்தா னென்னுஞ் சோழற் கெதிர் இமயமலை குறுக்கிடச் சினந்து சாத்த னருளாற் பெற்றதொரு செண்டா னதனைத் திரித்து அதன்கட் டன் புலிக்குறி பொறித்தா னென்பது கதை.

இதனைச்

'செண்டுகொண்டுகரி-காலனொரு காலினிமயச்
சிமயமால்வரை திரித்தருளி மீளவதனைப்
பண்டுநின்றபடி நிற்கவிது வென்றுமுதுகிற்
பாய்புலிக்குறி பொறித்தது மறித்தபொழுதே'

[கலிங்கத்துப்பரணி-இராசபாரம்பரியம்-௧.]

என்றிருத்தலி னறிக. இதுவுஞ் சோழனைக் குறித்ததென்க. சோழற்கு இரண்டு கவிகள் கூறிய தென்னையெனில், நன்றி குறித்தற்கென் றொழிக.

கூசு. துகில்-சேலை. குன்று அருவி-மலையின்கண் அருவி. மலை முலையும் அருவி அதன்மேற் சேலையு மாம். குடநாடன்-சேரன். நின்ற புகழ்-புகழ் நின்று; இது வடநூன் முடிபு. மானம்-பெருமை. சிலை-வில். சேரற்கு விற்கொடி யென்பது தெரிந்துகொள்க.

கூஎ. ஆழி-கடல். விளிம்பு-தன் பாதத்தின் ஓரத்தை; அஃதாவது நுனியை. அலம்ப-கழுவ. இஃது உக்கிரகுமார பாண்டியன் கடல் சுவற வேல்விட்டபோ தென்க.

'எடுத்த வேல்வ லந்திரித் தெரிந்த வேலை வென்றனை
மடுத்த வேலை சுஃறென வறந்து மான வலிகெட

வடுத்து வேரி வாகையின்றி யடிவ ணங்கு தெவ்வரைக்
கடுத்த வேல்வ லான்கணைக் காலின் மட்ட தானதே'
(கடல் சுவற வேல்விட்ட படலம்-கச.)

என்னும் பாவினைக் காண்க.

மதுரைக் காஞ்சி உரைக் கண் 'வடிம்பலம்ப நின்ற பாண்டியன் வழியில் வந்தோனே, என்றதூஉம், இந் நூலுடையார் 'பரவை பணிந்ததுஞ் சோழன் பதந்தனையோ வம்மானே' பாண்டியனார் பராக்கிரமம் பகர்வரிதே யம்மானே' என்றதூஉம் அதனை வலியுறுத்து மென்க.

ஏழ் இசைநூல்-சத்த ஸ்வரங்களையுடைய சங்கீத சாத்திரம். மதுரையின்கண் இசைச்சங்கமொன் றிருந்த தென்பதனை,

........'உயர்மதிற் கூடலி னாய்ந்த வொண் டீந்தமிழின்
றுறைவாய் நுழைந்தனை யோவன்றி யேழிசைச் சூழல்புக்கோ'
(திருக்கோவையார்-உ௰.)

என்னும் பாவாற் கண்டுகொள்க. நீள்விசும்பி னற்றேவர் தூது நடந்தானும்' என்றது தேவரும் அசுரரும் போர்செய்த காலத்துப் பாண்டியன் மாகீர்த்தி யென்பான் சந்து செய்வித்தமையி னென்க. இதனை, இறையனாரகப்பொருள்—களவியல் ௩ரு-வது சூத்திரவுரையிற் கண்டு தெளிக. 'பாரதப்போர் செற்றானும்' என்றது பாண்டியனும் பாரதப்போர் செய்தமையா னென்க. எனவே, இக் கவி பாண்டியனைக் குறித்தமை துணிக. இக் கவிக்கு வெவ்வேறு பொருள் கூறி இடர்ப்படுவாரு முளர்.

கரு௮. தெரியில்-ஆராயின். மொட்டை-அரும்பை. பிள்ளைக் குருகு - பறவைக்குஞ்சு. பேதைப்புள் - அந்த அறியாத பறவைக்கு. தால்ஆட்டும் - நாவசைக்கும்; ஈண்டு, 'கண்வளரச் செய்யும்' என்பது பொருள். வள்ளை - வள்ளைப்பாட்டையுடைய; இதனை, உலக்கைப் பாட்டென்றுங் கூறுப. கம்பரும் 'கொன்றைத் தீங்குழற் கோவலர் முன்றிலிற், கன்று றக்குங் குரவைக் கடைசியர்' என்றமை காண்க.

கருகூ. தேமரு - தேன்பொருந்திய. கதிர்-ஒளியையுடைய. பத்திரத்தால் - இலையால். படுகர் - பள்ளமாகிய. பழனஞ் சூழ்-வயல் சூழ்ந்த. மத்திரத்தார் கோமான் - மத்திரதேசாதிபதி.

கசO. சாயல்-மென்மை. வெம் சாறு-விரும்பத்தக்க கருப்பஞ் சாறு. சாலி-செந்நெற் பயிரினது. தாள்பால் - தாளினின்று வரும் பால். 'மேதி கடைவாயில் ஒழுகும்' என்க.

கசக. வண்ணம் - அழகு. உண்ணாது - உண்ணாமல். கடா-எருமைக் கடா. இரும் கடா யானை இவன் - பெரிய மதநீரைச் சொரியும் யானைகளையுடைய இவன்.

கசஉ. விடம் - விடநெய் பூசிய. பீறி - பீற; இஃது தெச்சத் திரிபு. தோட்டில் - இதழில். 'வந்து ஒடு' எனப் பிரிக்க.

கசங. கூன் இரும்பு-அரிவாள். இருந்த-இஃது துவமவாசகமுமாம்.

கசச. புண்டரிகம் - தாமரை. விரிய-மலர. இரியும்-பறந்தோடுகின்ற: ஆவம் - அம்புப்புட்டில்.

கச௫. இடறி - தட்டுதலான். 'வான், கடல் வந்து திரைக்கரத்தால் எடுக்கும்' என்க. திரைக்கரத்தால்-அலையாகிய கையால்.

கசசு. காளைமீன்-பருவமீன். மேதி-எருமை. குலம்-கூட்டம். உழக்கி-கலக்கி. புள்ளோடு - பறவைகளோடு. இரிய-ஓட. தெரியல் - மாலை.

கசஎ. வரி - கீற்றமைந்த. ஆழித்திரை - கடலி னலை. மகரத்தை - சுறாமீனை. சேல் - சேற்கெண்டைமீன். ஆடல்-வெற்றி. கைவரை - துதிக்கையுடைய மலைபோன்ற யானை. குளிக்க - மூழ்க ; உட்புக

கசஅ. கயத்து - குளத்து. கழைக்கோதையார் - கழைக் கூத்தாடும் பெண்கள். எய்க்கும்-ஒக்கும். மழை-குளிர்ச்சியுடைய.

கசகூ. அங்கை நெடுவேற்கண் - உள்ளங்கையி னகன்ற நீண்ட வேல்போலுங் கண்களையுடைய. வாவி-தடாகம். சிந்து-துளிக்கும். நாள் தேறல் - புதிய தேன். பொன் விளக்கும்-

பொன்போலும் நெற்கதிர்களை (பாய்ந்து) விளக்கின்ற. பணை—வயல். 'சிந்துமாநாட்டான்' என்க.

கரு௦. ஈரிருவர் - நால்வர். நளன் உருவா - நளன் வடிவமாக. வரைந்த - கொண்ட. 'உளம் ஊசலாடுற்றாள்' என்க. ஊசலாடுற்றாள்-அலைந்தாள்.

கருக. பூணுக்கு - ஆபரணத்திற்கு; 'அழகெனு மணியுமோரழகு பெற்றதே' என்றார் கம்பரும். 'வானவரும் வந்திருந்தார் (எனின்), வேந்தர் வாராதார் எவர்' என்க. நாண்-நாணத்தை. உக்கு - சிந்தி. நெஞ்சு உடைய - மனம் (மத்தலை தயிர்போல) உடையுமாறு. உடைய-இஃது எதிர்காலச் செயவெனெச்சம். 'கண்டக்கால் உக்கு உடைய' எனக் கூட்டுக. பொற்றேர்-'பொன்தேர்' என்றேனும், 'பொற்ற ஏர்' என்றேனும் பிரிக்க. 'பொற்ற ஏர்' எனின், 'விளங்கிய அழகினையுடைய' என்க;அகரம் விகாரத்தாற் றொக்கது.

கருஉ. 'தார்' ஈண்டு அரதனமாலை முதலியன. கடி-மணம். அன்னந்தான் சொன்னவன் நளனென்க. சூழ்விதியின் மன்னவனை - (உயிர்களைச்) சூழும் ஊழ்வினைக்குத் தலைவனாகிய கடவுளை. கடவுளை விதியின் மன்னவனென்றது அவன் எல்லா வுயிர்களையுஞ் சூழ்கின்ற வினையைத் தான் கடந்து நிற்றலினென்பர் ஒரு சாரார்.

கருங. காசினியில் - பூமியில். தோய்தலால் - படிதலால்; நறுந்தாமரை - நல்ல தாமரை. நன்னுதலே - திருமகளையே. ஏகாரம் பிரிநிலை.

கருச. மனஞ் சுளிக்க-மனத்திற் சினங்கொள்ள. ஞாலம்-பூமியிலுள்ளார்; இஃ தாகு பெயர். வன்மாலை - வலிமையுடைய மயக்கத்தை. வயம்-வெற்றி. பொன்மாலை-அழகிய (மண) மாலை. பொன் - உவம வாகுபெயர்.

சருரு. ஒள் தாரை - ஒளியும் கூர்மையும் பொருந்திய. கோமாலை-சிறந்த இயல்பினையுடைய. வேலான் - வேலை ஏந்திய

னளன். குலமாலை - தன் குலத்திற்கு (அலங்கரிக்கின்ற) மாலை போன்ற.

கடுசு. மல்லல் - வளப்பத்தினையுடைய. மறுகில் - வீதியில். மடமை நாகு-இளமை பொருந்திய பசு. உடன் ஆக-உடன் வர. மழவிடை - இளமை பொருந்திய காளை. செம்மாந்து - களித்து. நல் மாலை-நல்ல இயல்பினையுடைய; 'நல்ல வெற்றிமாலை யுடைய' எனினு மமையும். உவமையின் 'மடநா குடனாக' என்றிருத்தலின் தமயந்தி தன்னுடன் வர நளன் புறப்பட்டானென்க.

கடுஎ. வேலை-கடல். 'அலையிடைப் பிறவா வமுதே யென்கோ' என்றார் சிலப்பதிகாரமுடையாரும். வானாடர்-தேவர்கள். வேலை - கரையை. கலி-ஒலி. புன்னெறி - இழிவாகிய வழி. கலியை-கலிபுருடனை. 'எதிர் கண்டார்' என மாறுக.

கடுஅ. வரவு - வருதல்; ஈண்டு-வருதற்கேது, இருப்பான் - இருக்க.

கடுகூ. வைவேல் - கூர்மையுடைய வேல். மதி - சந்திரன்: வதனம்-முகம். 'ஒழித்து ஏகுதி' என்க. வெள்ளைத்தனியானை- ஐராவதம்.

கசூ0. வெறி - மணம். கேள்வனுக்கும் - நாயகனாகிய நளனுக்கும். கீழ்மை - தாழ்வு.

கசூக. பூமான்-தாமரையின்கண் வாழும் மான்போன்ற பார்வையுடைய திருமகளைப் போன்ற தமயந்தி. கொற்றம் வச்சிரத்தான்-வெற்றியையுடைய வச்சிராயுதத்தை ஏந்திய இந்திரன்.

கசூஉ. செரு - போர். 'செருவேல்,' கதிர்வேல் என்றியைக்க. தரியேன் - பொறேன். உடனாக - உடன்படுக. உடன் பிறந்த விடநாகம்-தான்பிறக்கையில் தன்னுடன் பிறந்த விடத்தையுடைய பாம்பு. அன்னான் - (அப்பாம்பினை) ஒத்த கலிபுருடன்.

கசூங. மங்கலநாள் காண-'கலியாண தினத்தைக் காண' வென்றேனும், 'கலியாண தினத்தைச் செய்ய' வென்றேனும், 'கலியாணத்தை அன்று காண வென்றேனுங் கொள்க. வஞ்சிக்

கும் - வஞ்சிக்கொடிபோன்ற தமயந்திக்கும். 'தீ' என்றது காமத் தீயை.

௧௬௪. இளமுறுவலே இன் உயிர்க்கு நேர் என்கின்ற-சிறு நகையே (தம்) இனிய உயிர்க்கு நிகராமென்று (தோழியர்) சொல்லுகின்ற. இனி, 'சிறு நகையே (எமது) இனிய உயிர்க்கு நிகரென்று (ஆண்மக்கள்) சொல்லுகின்ற' எனவும், 'சிறு நகையே (எமது) இனிய உயிர்க்குப் பகையென்று (ஆண்மக்கள்) சொல்லுகின்ற' எனவுங் கூறுப. 'நேர்' என்பதற்குப் 'பகை' என்னும் பொருள் கூறுவார், 'முந்தியென் னுயிரையும் முறுவ லுண்டதே' (கம்பர்) என்பதை மேற்கோள் காட்டுப. ஏகாரம் பிரித்துக் கூட்டுக. பொன்-பொன்போன்ற தமயந்தியினது. தாமே-(அத்) தோழியரே. புதைப்பார்-மறைப்பார்.

'அமிழிமைத் துணைகள் கண்ணுக்
கணியென வமைக்கு மாபோ
லுமிழ்சுடர்க் கலன்க ணங்கை
யுருவினை மறைப்ப தோரார்'

(பால - கோலங் - ௩.) என்னுங் கம்பர் கவியை ஈண்டுக் குறிக்க. துடிசேர்-உடுக்கையொத்த. மலரும்-உம்மை எச்சவும்மையாம்.

௧௬௫. கணி-சோதிடன். கடி-புதுமை; இஃது உரிச்சொல். அணி-அழகு. பணி-வணங்கிய; இது வினைத்தொகை. மற்று எவரும் ஒவ்வார்-வேறு எவரும் (தமக்கு) ஈடாகாதார். 'ஒவ்வார் செய்ய புக்கார்' என வினை முடிவு செய்க.

௧௬௬. செந்திரு-'செம்மை திரு' எனப் பிரிக்க. ஆகத்தும்-மார்பினும். உருவ-ஊடுருவ. 'கால்வளைத்து' என்பது 'கால் சீத்து,' 'தலைப்பிரிந்து' என்றாற்போல்வதொரு சொல்; 'கால்' என்பது தமிழுபசர்க்க மென்பது மொன்று. நாமம்-அச்சம்; இது 'நாம்' என்னும் உரிச்சொற் றிரிபு. வாளி ஐந்தாவன தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலம். 'தொடுத்தான்' என்றது

எய்தற்கு வேண்டிய செய்தான்; எய்தானில்லை என்னும் பொருள் தோன்ற நின்றதென்க; என்னை?

'முல்லை கிடைகாட்டு மாதே முழுநிலங்
கொல்லுமத னம்பின் குணம்' என்றிருத்தலின்.

கசுஎ. கனற்கு எயும்-தீயை ஒக்கும். புனற்கு-நீரோடு. 'கனற்கு,' 'புனற்கு' என்பன வேற்றுமை மயக்கம்.

கசுஅ. குழைமேலும்-(காதணியாகிய) தோட்டின் மீதும். கோமான்-நளன். கூந்தல் மழை மேலும்-கூந்தலாகிய மேகத்தின் மீதும். இழை-ஆபரணம். 'வாள் ஓடி இழைமேலே மீள' என்க. அன்றி, 'விழைமேலே அகலத்தொடும் பொருதாள், என்றது வயித்து, 'ஆசையால் மார்புடன் போர் செய்தாள்' எனப் பொருளுரைக்க; விழை-முதனிலைத் தொழிற் பெயர். 'மேல்' என்பது மூன்ருவதன்கண் வந்த சொல்லுருபு. அல்-இருள். ஓடும்-காரியத்தின்கண் வந்த பெயரெச்சம். வல்-சூதாடுகிற கருவி. ஓடும்-தோற்ருேடிய. மடுத்து-சேர்த்து; ஈண்டு 'மோதுவித்து.'

கசுகூ. அகலம் செறு-மார்பாகிய வயல். வண்டல்-சேறு இட்டது-உண்டாயிற்று. ஓதி-கூந்தல். உடைந்து-(மடை) உடைய; இஃது எச்சத் திரிபு.

கஎ0. முகம்-எழனுருபு; நுனி யெனினுமாம். மழை-மேகம். 'செங்கயற்கண்' என்ருர் கண்கள் கலவியிற் சிவத்தலின்.

'வாயிற் சிவப்பை விழிவாங்க
மலர்க்கண் வெளுப்பை வாய் வாங்கத்
தோயக் கலவி யமுதளிப்பீர்
துங்கக் கபாடந் திறமினோ'

[கலிங்கத்துப்பரணி-சுக.]

என்றிருத்தல் காண்க.

பூசல்ஆட-பேரொலி செய்ய. விளை பூசல் கொல் யானை-விளையும் போரிற் (பகைவரைக்) கொல்கின்ற யானைச் சேனையுடைய.

'நாதக் குழல்சரிய நாணெனுஞ்சார் தங்கரையப்
போதக் கலையவிழப் புந்தி வளைதெறிப்பப்
பேதப் படாதிறுகப் பெற்றணைய வாசைகொண்டேன்
சீதப் புனற்சென்னைச் சென்னமல்லி யீச்சுரனே'

என்னும் பாவினை ஈண்டு நோக்குக.

௧௭௪. துய்ய-குற்றமற்ற. 'தான் பற்றி மணம் முடித்ததற் பின்' என்க. மகிழ் தாங்க-மகிழ்ச்சி தங்க.

சுயம்வர காண்டம் முற்றிற்று.



## உ. கலிதொடர் காண்டம்

க. முந்தை-பழைமை. குருகூர் செந்தமிழ்-குருகூரனாகிய சடகோபன் அருளிய செந்தமிழ் ; அஃதாவது திருவாய்மொழி. குருகூரன் கிழமை அவன் அவதரித்த இடத்தின்மேலேற்றப் படுதலின், இஃது உபசாரவழக்கு. சிரம் - முடி. நந்தும்-(முதலை யான் வலி) அழிந்த. புழை - துளை. புழைக்கை - யானை. பொதுவர் - இடையர். அழைக்கைக்கு முன்-அழைத்தற்கு முன். அடி-திருவடி; இரண்டனுருபு விரிப்பினுமாம்.

உ. செக்கர் வான் - செவ்வானம். உக்கதென-ஒழுகினாற் போல. உம்பர் நீர் - கங்கை. உளன்-(காப்பாக) இருக்கின்றான்.

ந. தவளம் - வெண்மை. குவளை - குவளைமலர் போலுங் கண்களினது. 'கொள்ள ஏறினான்' என்க.

ச. கொய்வான் - பறிக்க. கொங்கு-தேன். எங்குவன-ஒலிப்பன. 'எங்குவன காண்' என்க.

ரு. 'விரைந்து காண் என்றான்' என்க.

'நஞ்சினுங் கொடிய நாட்ட மமுதினு நயந்து நோக்கிச்
செஞ்சவே கமலக் கையாற் றீண்டலு நீண்ட கொம்பர்
தஞ்சிலம் படியின் மென்பூச் சொரிந்துடன் றாழ்ந்த தென்றால்
வஞ்சிபோன் மருங்கு லார்மாட் டியாவரே வணங்க லாதார்'

(பால-பூக்கொய்)

என்றார் கம்பரும்.

சு. வாள் - ஒளி. பங்கயம் - தாமரை மலர். காத்தாள்-(படியாது) தடுத்தாள். வேர்த்தாளை-வினையாலணைந்த பெயர்.

எ. புல்லும்-புணர்கின்ற. வரி-ரேகை. புனம்-காடு. சிலம்பு அவித்து - சிலம்பின் ஓசையை அடக்கி ; சிலம்பு - ஆகுபெயர். தேனே-தேன்போன்ற தமயந்தியே! புணர்ச்சிக்கு ஊறு செய்

தல் குற்றமெனச் சிலம்பவித்து அம்மலரைக் கொய்யாது தளி ரைக் கொய்தாளென்பது குறிப்பு.

அ. கொடுங்கையினுல்-வளைவாகிய கையால். சூட்டுவான்-சூட்ட. பாத அரவிந்தத்தே-அடித்தாமரையில்; பாதாரவிந்தம் என்பது வடமொழித் தீர்க்கசந்தி. ஆதாரம்-பற்றுக்கோடு. குழலிற் சூட்டின் இடையொடியு மென்றறிந்து அடியிற் சூட்டினுனென்பது கருத்து.

௯. ஏற்ற-தாங்கிய; (தமக்குத், தக்க வெனினுமாம். இனி, 'ஏற்றம்' எனப் பிரித்து 'உயர்ச்சியுடைய, வளர்ச்சியுடைய' வென்பாரு முளர்.) 'இடும் அமளி' 'தோற்ற அமளி' என் றெட்டுக. புலவித் தோற்றம்-ஊடலின் ஆக்கத்தையுடைய; 'ஊடலின் காட்சியை யுடைய' வென்பது மொன்று. அமளி-சயனம். காற்று அசைப்ப-காற்றுஅடித்ததால். வளை-சங்குகள். இசைந்து-பொருந்தி. எக்கர்-குவியல். மலரும் முத்தும் மணன்மேட்டின் மீது பொருந்திப் புலவித் தோற்றத்தை யுடைய சயனத்தைப் போல விளங்கும் என்றது, புலவி நிகழ்வுழி மகளிர் வெறுத் தெறியும் மலரும் முத்தும் சயனத்தி னிருத்தலி னென்றுணர்க.

௧௦. கொம்பு-இளங்கிளை. புலர்ந்து-வாடி. அசைந்து-அசைதலின். பூவணைமேல்-புட்ப சயனத்தின் மீது. புல்லி-அணைத்து. கலந்து-புணர்ந்து. ஒசிந்த-அசைந்த. வில்லென்ற-ஒளி மழுங்கின. கோலத்து-அழகினையுடைய. அல் என்ற-இருளென்று(யாவருஞ்) சொல்லிய.

௧௧. ஆம்பல் பூ-செவ்வல்லி மலர்.கொங்கு-மணம். கூந்தல் கூந்தலையுடைய பெண்; இஃ தாகுபெயர். மதி-சந்திரன். சந்திரனைக் காணிற் குமுதம் மலர்த லியல்பு.

௧௨. குறு நுதல்-சிறிய நெற்றி. எய்த-பொருந்த. தனி வைத்த-தனியாக வைத்த. கடுவிடத்தை-கடுமையான நஞ்சினை. மூன்று கண்ணனை-சிவனை.

௧௩. கொழுநன் - கணவன். தாரைநீர் - தாரையாகிய நீர். கெழுமிய - (அன்பு) மிக்க. அ கோமகற்கு-சிறந்த அப் புருட

னிடத்தில். பூமகட்கு - இலக்குமிக்கு. 'சொல்லுவாள் போல் முகத்தைத் தாமரைக்கே சேர்த்தாள்' என்க. தாமரைக்கு- வேற்றுமை மயக்கம்.

கச. பொய்தல் விளையாட்டிற் குரிய. கமலத்தின் போது- தாமரை மலர்கள். எய்த - அருகாக. மாற்றுரை - பகைவரை. செருவாளை-போர் வாளை.

கரு. பொன்னுடைய - பொன் போன்ற மகரந்தத்தினை யுடைய. பொகுட்டு - கொட்டை. புண்டரிகம்-தாமரை மலர். அயிர்த்து - சந்தேகித்து. காணுது- (அவனைக்) காணுமல். அயர் வாளை - வருந்துகின்றளை.

கசா. சிறுக்கின்ற-சுருங்குகின்ற. முறுக்கும் - (நீர் பிழி தற்கு) முறுக்கப்படும். மூரி-பெருமை ; வளையுமாம். குறிக்கின்- ஆராயின். கரும்பாம்பு - இஃது இராகு என்பது. கைக் கொண்ட - பற்றிய. இங்ஙனம் கைக்கொள்ளுதலைக் 'கிரஹணம்' என்ப. அரும்பு ஆம் - தாமரை யரும்பை யொக்கும். பணை- பருத்த 'கரும்பாம்பு, வெண்மதி' என்றது தொடை முரண்.

கஎ. சோர் - ஒடுகின்ற. சுடர்-ஒளி. விரை-விரைதல்; இது முதனிலைத் தொழிற் பெயர். புரைகின்றது - வெளிப்படுகின்றது. பொற்பு-அழகினை. 'பொற்பு பாராய்' என்க.

கஅ. நோக்கு - கண்கள். எறிப்ப - வீச. கோல்-திரட்சி. கோல்வளை - அன்மொழித்தொகை. வை-கூர்மை.

கக. காவி - நீலமலர். வாவியும் - குளங்களினும். தேவின்- தெய்வத்தினின்றும். ஒழியாது - பிரியாது.

உ0. நறை - தேன். கா - சோலை. இறை-மேன்மை. 'வளை இறைக்கை' என்றியைத்து 'வளை யணிந்த முன் கை' யெனினு மாம்.

உக. கன்னியர்தம் வேட்கையே போலும்—(நீர் இங்ஙனம் கூறியதற்கு ஏது) கன்னியர்பால் வைத்த ஆசையே போலும்; இனி, 'கன்னியருடைய ஆசையை ஒக்கும்' எனப் பொருள் கூறி 'கனிமழலை' என்பதனோ டியைத்து 'ஒத்தல்; ஈண்டு உள்

ளடக்கப்படுதல் என்பாருமுளர். தடுமாற-சுழற. கடி கா-மணமுள்ள சோலை. இது தமயந்தி புலந்து கூறியது.

௨௨. தொண்டைக் கனி-கொவ்வைப் பழம். வாய் துடித்தமை கோபத்தா லென்க. தாளம் என்ன-முத்துப்போல். கெண்டை-சேற்கெண்டை போலும் விழி; இஃ தாகுபெயர். 'சேல்போற் பிறழுந் திருநெடுங்கண்' என்றார் பிறரும். கழல் மன்னர் - வீரக்கழலையுடைய (பகை) மன்னர்கள். வெள்ளைக் குடை-சந்திரவட்டக்குடை. சிவப்ப - போர்க்களத்தில் உதிரந் தோய்ந்து சிவக்க. நின்றான்-வீமன். மென்மை யுடையவளேனும் மகா வீரன் மகளாகலிற் புலந்துழி வன்மை யுற்றனளென்பார் 'வெள்ளைக்குடை சிவப்ப நின்றான் கொடி நின்றாள்" என்றார்.

௨௩. புலவித்தலையில் - ஊடலின்கண். தனித்திருந்த - (நளனைவிட்டு விலகித்) தனியாய் நின்ற, வதன மணி யரங்கில்-முகமாகிய அழகிய சபையில். அங்கண்-அழகிய கண்களாகிய. கால்வளைத்து - சூழ்ந்து; காலை வளைத்து. கொடி-பூங்கொடி, பெண். 'ஓர் கூத்து ஆடக் கண்டான்' என்க. கோபத்தாற் புருவந் துடித்தமை கூறியபடி.

௨௪. சில் அரி-சிலவாகிய பருக்கைக் கற்களையுடைய; 'சில்' ஒலி யென்பாருமுளர். தொல்லை-பழமையாகிய. முடி-கிரீடம். வல்லை - விரைவில். முழுநீலக்கோதை - முழுதுங் கருமையான நிறம் வாய்ந்த கூந்தலையுடைய தமயந்தியின். செழுநீலம் - செழுமையான கண்கள். சிவப்பு மாறா - (கோபத்தாற் கொண்ட) செந்நிறம் மாறி. மலர்ந்த - மலர்ந்தன. நளன் புல்லி யொழித்தற்குத் தமயந்தி அடிகளின் வீழ, அவள் கோபந் தணிந்தன ளென்பது கருத்து.

௨௫. அகலம்-மார்பாகிய. செறுவில்-வயலில். அடைத்து-பாய்ச்சி. காதல் வரம்பு ஒழுக்கி - ஆசையாகிய வரப்பினை யொழுங்கு படுத்தி. காமப்பயிர் - காமமாகிய பயிரை. கோதையரின் - பெண்களுக்குள். கொப்பு - ஆகுபெயர். தமயந்தி புலவி தவிர்ந்து நளனைத் தழுவினா ளென்பது கருத்தென்க.

உக. வேரி-தேன். காரிகை-பெண்; ஈண்டுத் 'தமயந்தி' மூரி-வலிமை. கிடங்கு-அகழி. சேல்-ஒருவகை மீன். வாளை-ஒரு வகை மீன். 'கரை கண்ணுற்றான்' என்க.

உஎ. சூதக்கனி யூறல் - மாம்பழத்தின் சாற்றை. 'வாழைச் சுருள்' என மாறுக. கோது இல் - குற்றமற்ற. நறவு-தேனை. குப்பி-இஃதொரு வகை வட்டில். ஐயுற்று-சந்தேகித்து. வை-கூர்மை. வேல்தானை - வேற்படை.

உஅ. வான் தோய - ஆகாசத்திற் பட. நுடங்க-அசைய. 'தான், மற்று' அசைகள். வான் தோன்றி-பெரிய செங்காந்தள். வில் விளக்கே பூக்கும் - ஒளிபொருந்திய விளக்கைப் போலவே பூக்கின்ற. விதர்ப்பநாடு ஆளுடையான்-வீமன். நல் விளக்கே-(பெற்ற) நல்ல விளக்குப்போன்ற மகளே! 'இத்தடம்பதிதான் எங்கள் நகர் என்க.

உகூ. செய் குன்றம் - கட்டு மலைகளும். ஆறு இரண்டு ஆண்டு-கஉ வருடம். அடையலரை-பகைவரை. 'இரண்டு கூறாக் கொல்' என மாறுக.

௩0. கோலம்-அழகு. விளர்ப்ப-வெளுக்க. கருக-கறுக்க. எறிப்ப-வீச. 'மயிர்க்கால் நின்று நீலநிறம் எறிப்ப' என் றெட்டுக. நூல் என்ன - பஞ்சுநூல் போல சுரி-வளைந்த. 'இரண்டு குழவி ஈன்றாள்' என்க.

௩க. திரிந்தேயும் - திரிந்து கொண்டிருந்தும். ஏகாரம்-அசை. காண் தகைய - எளிதிற் குற்றம் காணுந் தன்மையுடைய. கலியும் - உம்மை உயர்வு சிறப்பு. செந்நெறியால்-அறவழியால். நெறியால் - ஒழுக்கத்தில். வேறு ஓர் தவறு(ம்)-பின்னர்க் கூறப்படுங் குற்றத்தின் வேறாயதொரு குற்றத்தையும்; இழிவு சிறப்பும்மை தொக்கமை காண்க. 'கலியும் வேறோர் தவறு காண்கிலான்' என முடிக்க.

௩உ. சந்தி - சந்தியாவந்தனம். விளக்க - சுத்தி செய்ய. மறு-அழுக்கு. புகுந்து-(களனைச்) சேர்ந்து. வயம்-வசம். பொன்

அசலமார்பன் - பொன் மலைபோலும் மார்பினையுடைய நளனை. புகைந்து - கோபித்து. தமையனுடன் - (நளன்) தமையனாகிய புஷ்கரன் பக்கலில்.

ருரு. நாராயணாய நம வென்று - 'நாராயணாய நம' என்னும் மந்திரத்தைச் சொல்லி. அவன் அடியில் - அந்த நாராயணன் ஸ்ரீ பாதங்களில். சேராரை-சரணடையாதவரை. 'நாராயணாய நம என்றவன்' எனப் பிரித்து, 'நாராயணாய நம' என்னும் மந்திரத்தைச் சொன்ன பாகவதன் எனப் பொருளுரைப்பது மொன்று. கொற்றவனை - அரசனை. கோமானை - தலைவனை. 'கொற்றவனை, கோமானை, கற்றவனை' என ஒரு பொருண் மேற் பல வந்தன.

ருச. நல்நெறி இல்-நல்வழியிற்(சேர்தல்) இல்லாத. களவு இயற்றி - வஞ்சனை செய்து. போதுவாய் -வருவாய். எடுத்தான்- எடுத்துச் சொல்லினன். அஃதாவது உறுதியாய்ச் சொல்லினன். புலை நரகுக்கு-(உயிர்கள்) இழிவாகிய நரகம் புகுதற்கு, ஏதுவாய் நின்றான் - காரணமாய் நின்ற கலி. 'தருகின்றேன்' என்பது துணிபுபற்றி வந்த காலவழுவமைதி.

ருரு. பூந்தாது-மகரந்தப்பொடி. கன்னி-இளமை. கன்னி இளமேதி-மிக்க இளமை வாய்ந்த எருமைகள். பொன் உரைத்த- உரைகல்லை யொக்கும். நாடன் - நாட்டையுடைய புஷ்கரன் கொல் - (யாவரையும்) வருத்துகின்ற. ஏற்றின்மேல்-எருதின் மேல். கலியே எருதானா னெனப் பாரதங் கூறும்.

ருசு. வெம்கண் - வெம்மையான கண்களையும், சினம் - கோபத்தையும் (உடைய), கரை ஏறி-கரை கடந்து, செம் கதிர் பைம்பொன் ஒழிய - சிவந்த ஒளியினையுடைய பசும்பொன் (தன் கரையில்) தங்கி நிற்க. கால் ஏறி போதும் - வாய்க்காலின் ஏறிப் புகுகின்ற. பணை-வயல். பின் ஒழிய-(நிடதநாட் டெல்லை) பிற்பட. போந்தான் - (மாவிந்த நகரம்) புகுந்தான்.

'நன்னாடு பின்னொழிய' என்பதற்குத் 'தனது நல்ல நாடும் (தன்னைவிட்டுப்) பின் நீங்க' என்பதாம்; முடிவில் அப்புஷ்கரன்

நாட்டையும் நளன் வெல்வதாகு னென்பாரும்; 'நல்ல நிடத நாட்டைத் (தன்) பின் அஃதாவது தம்பியாகிய நளன் ஒழிய,' வென்பாரு முளர்.

நஎ. அடல்-வெற்றி. மன்னன்-நளன். ஏற்றின்முன்-எருதின் முன். எடுத்த கொடி - (புஷ்கரனே! நீ) உயரப் பிடித்த கொடி. மிடல்-வலிமை. கொடியோன் - கொடுமையுடைய புஷ்கரன்.

நஅ. 'இது மெய்ம்மையே ஆயின்' என மாற்றி 'நீ சொன்ன இம் மொழி உண்மையேயானல்' எனப் பொருள் கொள்க, அன்றி, 'இதுவாயின் மெய்ம்மையே' யெனப் பிரித்து 'இது வாக்கின் உண்மையானதே; அஃதாவது உண்மையான வாக்கே என்றுரைப்பினுமாம். 'என்ரேம், எம்மோடு சூதாட' என்ருன்' எனக் கொண்டு, 'ஏற்றுக்கொண்டோம், எம்முடன் சூதாடுக வெனச் சொல்லினன்' எனப் பொருள் கொள்க. ஈண்டு 'ஆட' வென்பது அகரவீற்று வியங்கோளென்க. வான் தேறல்-மிக்க கள்ளை. தேக்கு-தேங்குவித்து, மீது ஆடி அதன்மேல் வீழ்ந்து குளித்து. இனி, தேக்கிமீது ஆடி என்பதற்கு 'நிரம்பக் குடித்து அதன்மேல் தள்ளாடி' எனச் சிலேடைப் பொருளுமிருத்தல் காண்க. வாளை-வாளைமீன்கள்; இது சாதியொருமை. உழக்கும் - (பயிரை) அலைக்கும்.

நகூ. காதல் - (அயன் மாதர்மேல்) மோகங் கொள்ளுதல். கவறு ஆடல்-சூதாடுதல். மறுத்தல்-விளக்குதல். போதில்-தாமரைப் பூக்களில். சினையாமை - கருக் கொண்ட ஆமைகள். செம்மை நினையாமை பூண்டார் - அறத்தை நினையாதிருத்தலைக் கைக்கொண்டார். நெறி-ஒழுக்கம். 'நெறி இவை கண்டாய்' என்க.

சO. வேர் கல்லும்-வேரின்கண் பெயர்க்கும். அரு நரகு-இருத்தற்கரிய (கொடிய) நரகு. திறத்தையே கொண்டு-சாமர்த்தியத்தையே (பெரிதாகக்) கொண்டு. அருளை - இரக்கத்தை. மறத்தையே பூண்டு - கோபத்தையே (மேலாகக்) கொண்டு.

பொய் சூதை - பொய் விளங்குதற் கிடமாகிய சூதாட்டக் கருவி களையும். மிக்கோர்கள் - பெரியோர்கள்.

௪௧. உரு - அழகு. உண்மை உயர்வு - சத்தியத்தையும் மேன்மையையும்; அன்றி, சத்தியத்தின் மேன்மையை யெனினு மாம்: வண்மை திரு-ஈகைச் செல்வம்: செழுமையாகிய செல்வ முமாம். மானம் - கவுரவம். மருவும் - நட்புக்கொள்ளும். ஒன்று அல்ல-அதனால் வரும் கேடு ஒன்றே யன்று; பலவாம். தக்கோர்-பெரியோர். புரிந்து-விரும்பி. சூது பொருவரோ-சூதாடுவரோ? ஆடார்; ஓகாரம் எதிர்மறை.

௪௨. ஆயம்-சூதாடு கருவி. பிடித்தாரும்-கைப்பற்றினோரும். அல்லல் - துன்பத்திற் கேதுவாகிய. பொதுமகளிர்-வேசையர். நேயம்-சிநேகம். மாயம்-வஞ்சனை. பிடித்தாரின் - 'இன்' ஐந்த னுருபு. 'இன் நூல் வடித்தார்' என மாறுக; 'இனிய நூல்களை ஆராய்ந்து அவற்றின் சாரத்தைக் கொண்டார்' என்பது பொருள். வழக்கு - ஒழுக்கம்.

௪௩. சிந்தையால் - மனத்தோடு; மனப்பூர்வமாக; இஃது உருபு மயக்கம். விலக்கலிர் - தடுத்தல் வேண்டா. வரால்-ஒரு வகை மீன். மேதி-எருமை. அலை நீர்-அலைகளையுடைய நீர்; அலை கின்ற நீர் எனினுமாம். கனன்று-கோபித்து.

௪௪. நிறை - நிறுத்தல். கவறுடல் - சூதாடல். திறையின் (பகைவர் செலுத்துகின்ற) பகுதியைப்போல. கருப்பு ஒடியா - கரும்பை ஒடித்து. மள்ளர் - உழவர்கள். கடா - (உழுகிற) எரு மைக் கடாக்களை. பொரும் படி யாது - ஆடும் விதம் யாது? அஃதாவது ஆடுவது எப்படி?

௪௫. விட்டு - இடைவிட்டு. வில்-ஒளி. மணி-ஆரம். பூண்-இரத்தின மாலையாகிய ஆபரணத்தை. ஒட்டினேன்-பந்தயமாக வைத்தேன். பணயம்-பந்தயப் பொருள். மட்டு-தேன். மல்-மற்

போர் கொல் ஏற்றை - (உயிர்களை வருத்துகின்ற) எருதை. வான் - உயர்வாகிய. குறித்து - சொல்லி.

௫௬. கார் எயும்-மேகத்தை யொத்த. கூந்தல் ஆர்-கூந்தல் செறிந்த. காரிகை-தமயந்தி. தார் எயும் - மாலை பொருந்திய. தோளான்-புட்கரன்; கலியென்பாரு முளர். தனி மனம்போல்-(தீமையில்) ஒப்பற்ற மனம்போல். தவறாய்-தப்பாக. புரண்ட-மாறிய. தமையனொடும் - தமையனாகிய புட்கரனொடும். 'கலி தோளான் தனி மனம்போல் தவறாய்ப் புரண்டான்' என்க.

௫௭. பலகைக்கு - ஆட்டத்திற்கு; 'பலகை' ஈண்டு ஆகு பெயர். நூறாயிரத்து இரட்டி நூறு நூறாயிரமும் - இரண்டு லக்ககோடியும்; இதற்குப் பிற கூறுவாரு முளர். வேறாக-வெவ் வேறாக.

௫௮. பரியும்-குதிரையும். சொல் ஆர்-(கண்டார் வியப்புச்) சொல்லொடு பொருந்தின. மணி-மணிகள் கட்டிய. வில் ஆட்கள்-விற்போர் வல்ல படை வீரர்களை. முகில்-மேகம். மால் யானை-பெரிய யானைகளை. பிடி-பெண் யானைகளையும்; 'பிடி யென் பெண் பெயர் யானை மேற்றே' [தொல்-மரபு] என்னுஞ் சூத்திரங் காண்க.

௫௯. சாதுரங்கம் - 'ரத கச துரக பதாதி' என்னும் நால் வகைச் சேனைகள்; 'சதுரங்கம் என்பது' முதல் நீண்டதென்க. மா துரங்கம்-பெரிய குதிரைகள். அரங்கில்-சபையில். பொருது-சூதாடி. பாவையரை - பதுமை போல்வாரை. செவ்வழியாழ் பண்ணின - செவ்வழிக்குரிய யாழின் இசைபோன்ற. பூவையரை - நாகணவாய்ப் புள் ஒப்பாரை.

௬௦. கற்பின் மகளிர் - கற்புடை மகளிர். பானின்றும் - இடத்தினின்றும் நீங்கி. தமை - தம்மை. கவட்டின்-கபடத்தால். 'தம்மை விற்கு மகளிர்' என்றது வேசையரை. நெறி நிற்பானை-நல்வழியின்கண் நிற்கின்றவனை. மெய்ம்மை வாய் நின்றானை-சத்தியத்தில் இருந்தானை. திரு-இலக்குமி. சிறியான்-புட்கரன்.

ருக. மனைக்கு உரியார் - மனைவிமார். சினை - கரு. பணைபைர்தாள் - பருத்த பசிய தாட்களை யுடைய. குண்டு - ஆழம். இவளை - இந்தத் தமயந்தியை. தா-தருக.

ருஉ. கிண்டி - குடைந்து. சூதம் - மாமரம். பனிச்சு ஊத-அசைந்து ஊதுதலின். 'பனிச்சு' என்புழித் தகரத்திற்குச் சகரம் போலி. போதும்-போவோம்.

ருங. பொடியாட - புழுதி படிய. கொடியானுக்கு-புட்கரனுக்கு.

ருச. கடுவினை - விரைந்து வரும் வினைப்பயனை. 'கடு-வென்பது 'கடி' என்னும் உரிச்சொற் றிரிபென்க. எவரே-ஒருவருமில்லை யென்றபடி. நடப்பான்-நடக்க. பணித்து-ஏவி மாயத்தால் - வஞ்சனையோடு. சூழ்ந்தது அனைத்து - சுற்றிக் கொண்ட தொத்தது. விதியின் வலி - ஊழ்வினையின் வன்மை. இது வேற்றுப் பொருள்வைப் பணியா மென்க.

ருரு. ஆர் உயிரின்-அருமையாகிய உயிர்களின்; நிறைந்த உயிர்களின் எனினுமாம். கால் கழுவா நின்று-தங்கள் பாதங்களைக் கழுவி. தலை குனிந்து நின்றமையில் தங்கள் கண்ணீர் காலின்மேல் ஒழுகிற்றென்பதாம். இனி, 'நளனது பாதங்களின் வீழ்ந்து அழுது அவற்றைத் தங் கண்ணீராற் கழுவி' என்பதுமொன்று. உயிர்களைப் புரந்தருதலின் 'தாயே' எனவும், 'தவத்தளவே யாகுமாந் தான்பெற்ற செல்வம்' என்றபடி அறத்திற்குச் செல்வ முதவுதலின், 'தவமே,' எனவும், 'கண்ணீர்மை மாறாக் கருணையால்' என்றபடி, அருட்கு இடந் தருதலின் 'கண்ணே' எனவுங் கூறினரென்க.

ருசா. வேலை - கடல். இழந்தால்-கடந்தால். நெறி-ஒழுக்கம். பிறழ்ந்தால் - தவறினல். நடு - நடுவுநிலைமை. சீலம்-நல்லொழுக்கம்.. செம்மை - நடுவுநிலைமையும். உரை - சொல்லும். திறம்பா - தவறாத.

ருஎ. வடி-வடித்தல். ஆதரவு - ஆசை. வென்று-வெற்றி. 'நன்று' என்னும் பண்புப்பெயர் போல வந்த தென்க.

ருஅ. 'வாய்' ஏழனுருபு. இருத்துமோ-இருப்போமோ! வெளிக் காட்டா தென்பார' தன் மனத்தே வைத்து என்றார். 'வருத்தமோ' என்புழி 'ஓகாரம்' உயர்வு சிறப்பு.

ருகூ. யாரேனும்-யாரா யிருப்பினும். கொண்டாடினர்-மெச்சிப் புகழ்ந்தார. கொல் - (அதிகாரிகள்) கொல்லுக, 'கொல்' என்புழி வியங்கோள் வினைமுற்று விகுதி புணர்ந்து கெட்டதென்க. 'கொண்டாடினர் தம்மைக் கொல்வமென' என்பதூஉம் பாடம். தண்டா-ஓயாத; எதிர்மறை வினையெச்ச மெனக் கொண்டு நீங்காமல், எனப் பொருள் பகர்தலு மொன்று.

சுO. பேதமையை - அறியாமையானாகிய அச்சத்தை. 'கேட்டழிந்து நையும்' என்பதூஉம் பாடம். முறுவலியா-புன்னகை செய்து. 'ஆக' என்பது 'ஆ, வெனக் கடைக்குறையாய் நின்றதென்க மன்- (பகை) அரசரை.

சுக. 'வாயின்' என வேண்டாது கூறினார் அதன் சிறப்பு முடித்தற்கு; இனி, 'வாய்மையின்' எனப் பொருளுரைத்தலு மாம். பூமகளை-இலக்குமியை. பாரினொடும்-பூமிதேவியினுடன். புல்லினன்-தழுவினவன். கோமகளை- (தன் மகளாகிய) அரச கன்னிகையை.

சுஉ. கொல்வான் -கொல்ல. இழவு படுமாபோல-இழவு விளைந்தவாறு போல. குழவி-குழந்தைகளும்; சிறப்பும்மை தொக்கதென்க. கொண்டு-(மனங்) கொண்டு. ஏகாரந் தேற்றம்.

சுங. சந்தம்-அழகு; இனிய ஒலியுமாம். தாமரையும்-(நளனது புத்திரனாகிய இந்திரசேனனது) தாமரை மலர்போன்ற பாதங்களும். சதங்கை-பாதசரம். பைந்தளிரும்-(இந்திர சேனை யென்னும் புத்திரியினது) பசுமையாகிய மாந்தளிர்போன்ற பாதங்களும், எந்தாய்-எமது தந்தையே! எமது தாயே எனினுமாம். வடம்-(புரோசை யென்னுங் கழுத்துக்) கயிறு. கலுழ்ந்து-அழுது.

சுச. சூழ்கின்ற-சுற்றுகின்ற. யாதும் தெரியாது-ஒன்றும் (சொல்லத்) தெரியாது. புலர்ந்து-வாடி.

சுரு. காதல் இருவரையும்-நமது காதற்குரிய மக்க ளிரு வரையும், கொண்டு-உடன் கொண்டு, கொடுஞ் சுரம் போக்கு-கடுமையாகிய பாலைவனத்திற் போதல், ஏதம் உடைத்து-குற்றமுடைத்தாம்; 'துன்பத்திற் கேதுவாத லுடைத்தாம்' எனினுமாம். மீள்-திரும்பிச் செல்க. விண்ணவர்-இந்திரன் முதலிய தேவர்கள். தாமம்-மணமாலை.

சுசு. காட்சி-அறிவு; அழகுமாம். கோக் காதலனை-சிறந்த கணவனை' 'குலமகளுக்குக் கோக் காதலனைப் பெறல் ஆமோ?' என்க. நோக்கான்-கண்களான். பொழியா-பொழிந்து.

சுஎ. கைதவம்-வஞ்சனை, கருத்தில்-மனத்தில், கறை-குற்றம், மைதீர்-குற்றத்தின் நீங்கிய, வானவர் தம் ஊர்க்கு-சுவர்க்கத்தில். போந்து-வழிச்சென்று.

சுஅ. ஏனும்-'எனினும்'என்பதன் மரூஉ. மற்று-பிறிது. புக்கு-(அருகு) வந்து, இன் அடிசில்-இனிமையாகிய சோற்றை, செய்ய வாய்-சிவந்த வாயையுடைய. இங்கு-இவ்வுலகின் கண். 'அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள், சிறுகை யளாவிய கூழ்' [திருக்குறள்] என்றார் பெரியாரும்.

சுகூ. சொன்ன-(ஆன்றோர்) சொல்லிய, கலையின் துறை அனைத்தும் தோய்ந்தாலும்-சாத்திர விகற்பங்க ளெல்லாவற்றினும் மூழ்கினும். அஃதாவது சகல சாத்திரங்களையும் நன்கு கேட்டு அவற்றின் சுவை கண்டு மகிழினும். என்ன பயனுடைத் தாம்-'ஒரு பயனும் பெற்றதாகாது' என்றபடி. இன் முகத்து-இனிய முகத்தையும், தலை முன்னம் குறுகு-தலை முன்பக்கம் குறுகிய, கிண்கிணிக்கால்-கிண்கிணி யணிந்த அடிகளையும் (உடைய) கோமக்கள்-சிறந்த பிள்ளைகளின், சிறு குதலை-(நிரம்பாத) மழலைச் சொற்களை. நூற்கேள்வியினும் மக்கள் குதலைச் சொற்கள் மிகவும் இனிய' வென்பது கருத்து.

'குழலினி தியாழினி தென்பதம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர்' [திருக்குறள்]

என்றார்' நாயனாரும்.

இத் திருக்குறளின் பொருள் நோக்கி, 'சொன்ன கலை' என்பதற்குச் 'செவிக்கினிமை தரற்கே சொன்ன கலை' 'அஃதாவது 'காந்தருவவேதம்' என்பாரு முளர்.

எ௰. புனல் நாடு - நீர்வள மிக்க நிடத நாடு, தோற்றமையும் - இழந்ததும், தோற்றுது - தெரியாது, எம் பதிக்கு - குண்டின புரத்திற்கு. போந்தருளுக-கிருபை செய்து வருவாய்; அகரந் தொக்கமை காண்க. செம் பதிக்கு - செம்மையாகிய இடத்தில்; ஈண்டு, நான்காவது இடப்பொருளின் வந்த தென்க. தேன் - ஆகுபெயர்.

எக. எனக்கு ஈ என்னும் இம்மாற்றம்-எனக்கு (ஒன்றை) ஈவாய் என்றிரக்கின்ற இந்தச் சொல். தானம்-(உயர்) நிலை; லோகத்தை என்பாரு முளர். துடைத்து - அழித்து. மானம்-உயர் நிலையிற் றாழ்வு பொறாமையாகிய மானத்தையும்; சிறப்பும்மை அல்லது எச்சவும்மை தொக்க தென்க. ஓர் வாள்-ஒற்றை வாளாம், 'கண்டாய்', அசை.

எஉ. மன்னராய்-(தாம்) அரசராயிருந்து, மன்னர் தமை-வேற்றரசரை. எய்தி-பொருந்தி. அமுதம்-அமுதம்போன்ற உண்டியை. தேக்கி-நிரம்ப வுண்டு. அலரேல்-அல்லராயின். பேடைமானே - பெண்மான் போன்றவளே!

எ௩. திருவுள்ளம்-கருத்து. கோலம்-அழகு. காதலர்-மக்கள். ஏதிலர் - அன்னியர்; ஏதும் இலர், அஃதாவது யாதொரு சம்பந்தமு மில்லாதவ ரென்ப. இனி, 'பகைவ' ரென்றுரை கூறுவாரு முளர். ஏகாரம், பிரிநிலை.

எ௪. பேதை-பேதமையுடைய தமயந்தி. பிரிய - (அன்பின்) நீங்கவும். பிரியாத பேர் அன்பின் - நீங்காத மிக்க அன்பினையுடைய. காதலி-தமயந்தி. நீ காட்டு-இஃதோ ரந்தணனை நோக்கிக் கூறியதென்க. கலங்காத உள்ளத்தை வாட்டும் நீர்-(ஒன்றிற்குங்) கலங்காத மனத்தையுங் கலங்குதற் கேதுவாகிய நீரை. சிறப்பும்மை தொக்க தென்க.

அ

எரு. பயந்தாள்-பெற்றவள். இந்து-சந்திரனைப்போன்ற, 'கண் நீர் ஆறு ஆக அழுது' என்க.

எசு. அஞ்சனம் - மை. மஞ்சன நீர் ஆக-குளிக்கு நீராக. வல்லி விடா-கொடியின் றன்மையை விடாத. புல்லி விடா நின்றாள் - அணைத்துக்கொண்டாள்; புல்லிவிடு - பகுதி, ஆநின்று- இடைநிலை, ஆள் - விகுதி. இனி - 'புல்லி விடா நின்றாள்' என, இரண்டு தொடராக்கி 'புல்லி (அதன் பின்) விட்டு நின்றாள் எனவும், 'புல்லி (மக்களை) விடாமல் (அங்ஙனமே) நின்றாள்' எனவும் பொருள் கூறுதலு முண்டு.

எஎ. இருவர்-நளனும் தமயந்தியும். வரும்-(அங்கு) வந்த. கொண்டு - உடன் கொண்டும்.

எஅ. காதலர் - மக்கள். ஓட - போய்க்கொண்டிருக்க. வாதையென - காற்றுப்போல. உயிர்ப்பு - பெருமூச்சு. நின்று ஓட - இடைவிட்டு இடைவிட்டு ஓடவும். உளையாடாது-பேசாது. ஒடுங்கினான் - அழிந்தான். விரை ஆடும் - மணமுள்ள தேனில் மூழ்குகின்ற. விரை, ஆகுபெயர்.

எகூ. சேல்-சேல்மீன். வாவி-தடாகங்களையுடைய. காலிற் போய் - காலினால் நடந்துபோய். கள்ளி - கள்ளிச்செடியும், வேகத்து அரவின் கண்மணிகள் - (வெம்மை பொறாது ஓடுகின்ற) வேகத்தை யுடைய பாம்புகளிடத்துள்ள ரத்திநங்களும், அன்றி 'கள்ளி வேகத்து' எனக் கூட்டிக் 'கள்ளிச்செடியின் கடுமையால்' என்பது மொன்று, துள்ளி - பொரிந்தெழுந்து. பொடியாய் வேகின்ற - சாம்பராய் எரிகின்ற. சுரம் - பாலை நிலத்தை. 'பொன்போலுங் கள்ளிப் பொறி பறக்குங் கானவிலே' என்றார் பிறரும்.

அo. கல் நிறத்த - கல்லின் தன்மை வாய்ந்த. பொன் நிறத்த-பொன்னிறமுடைய. புள்-பறவை. பார்-பூமியை. ஈந்த- (புஷ்கரனுக்குத்) தந்த, வஞ்சிப்பான் வேண்டி - வஞ்சிக்க விரும்பி, 'கலியும் வஞ்சிப்பான் வேண்டி வனத்துப் போந்திருந்தான்' என்றியைக்க.

அக. தேன் பிடிக்கும் - வண்டுகள் பற்றுகின்ற. துழாய்

துளசிமாலை யணிந்த, கருமுகிலென்றது இராமபிரானை. மான்-மாரீசனாகிய பொன்மானை, மயில்-ஈண்டுச் சீதை யென்க, மழலைக்குப் புதுமையாவது செவிக்கு விருந்து செய்தல், கிள்ளை வாயாள்-கிளிமொழி போன்ற வாய்மொழியுடைய தமயந்தி, 'வாயாள் தொழுது பற்றித்தா என்றாள்' எனமுடிக்க.

அஉ. பிடிப்பான்-பிடிக்க, வருமாபோல்-வருமாறுபோல, கழன்று ஓடி-நீங்கி விரைவொடு சென்று. எய்க்கும்-இளைக்கும். இளைக்குமாபோல (அங்ஙனம்) இளைக்கும் விதம் போல. இருந்தது-(பறவாமல்) இருந்தமை. மன்-அரசன், அன்று, ஏ, அசைகள்.

அங. கொற்றம்-வெற்றி; 'கொற்றக் கண்' என்றொட்டுக, கயற் கண்-கயல்மீன் போலுங் கண்களையுடைய, கொடி, ஆகுபெயர். இருவோரும்-(நாம்) இருவேமும், இஃது இடவழுவமைதி. துகில்-ஆடை, இந்தப் பொன் துகிலால்-என்னுடைய இந்த அழகிய ஆடையால், புள் வளைக்க-பறவையை வளைத்துக்கொள்ள. போதுவோம்-புகுவோம், 'மற்றை' என்பது 'மற்று' என நின்றது.

அச. 'திரை எற்றிப் பொர' என்க, எற்றி-எறிந்து. வெள்வளை, தாய்-வெள்ளிய சங்காகிய தாய், வேலை-கடல்.

அரு, குயில்-தமயந்தி? இஃ தாகுபெயர். அணைத்த-வளைத்த, அந்தரத்தே-ஆகாயத்திலே. 'பொன் நாடும்' என்புழி 'நாடும்' என்பது 'ஒக்கும்' என்னும்பொருட்டு; அஃது உவமவாசகமென்க. அன்றி, 'ஆடும்' எனக் கொண்டு '(நிழல்) ஆடுகின்ற' எனப் பொருளுரைத்தலுமாம். மா-பெருமை,

அசா. காவி-நீலமலர், கண்ணி-மாலை, ஆவி-உயிர், கள்-தேனை, வேட்டு-விரும்பி, கனகம் புள்-பொற் பறவை, ஆதரித்த போது-விரும்பியபொழுது,

அஎ. பிழைத்தார்-தவறினார். திறம்-மேன்மை, புறங்கடையிற் சென்றார் - (வியபசரித்தல் கருதிக்) கடைவாயிலின்கட் சென்றார்; 'அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை

நின்றாரிற் பேதையா ரில்' என்னுந் திருக்குறளையும், 'பூணணி மகளிரொடு புறங்கடை நிறுத்தும்' என்னும் மணிமேகலையடியை யுங் கண்டு தெளிக. அழியாநின்றாள்-அழிந்தாள், கொல்-அசை.

அஅ. வையம்-உலகத்தார், செயல்-(அதைத் தடுத்தற் குரிய) செய்கை, மெய் வகையே-மெய்யான விதத்தையே, இங்கு ஒழிய-இவ்விடம் விட்டு நீங்க.

அகூ. மீது எக்-மேலே சென்றும். ஆங்கு அழலும்-அவ் விடத்தும் கொதித்தெழுகின்ற, உம்மைகள் தொக்கன, வெந் தழலை-கொடிய வெப்பத்தை, ஆற்றுவான்-பிணிக்க.

'சூரியன், தேருமோ டாதுமா மாகமீ'

என்றார் கம்பநும். பாரை-பூமியை, ஒளிப்பான்-மறைப்பான்.

கூ௰. பானு-சூரியனது. படு-(தான்) மறையும். அடம்பின் கவடு இலைகள்-அடப்பங் கொடியின் இருபிளவாகிய இலைகள், 'குளம்பு ஏய்க்கும்' என்க, எய்க்கும்-ஒக்கும், தோன்றா-ஒன்றுந் தெரியாத,

கூக. வேலைதனில்-போழ்திண்கன், 'வாழ் மண் தவம் கண்டான்' எண்பதற்கு, வாழ்கின்ற பூமியின் தவப்பயனைக் கண்டான்' எனவும், வாழ்கின்ற உகலத்துயிர்கள் தவத்தைச் (செய்யக்) கண்டான்' எனவும் பொருள் கூறுக. 'வந்து பாழ் மண்டபங் கண்டான்' என்க,

கூஉ. மூரி-சோம்பல்! இஃது ஆகுபெயராய் மந்தகதியை புணர்த்திற்றும், முற்று-முதிர்ந்த, ஆல், தான், என்பன அசை கள், போதராய்-வருக,

கூ௩. வையம்-பூமிக்கு, உடையான்-உடையவனாகிய நளன், கொதுகின்-கொசுகினது, சில் பாடல்-அற்பமாகிய இசையை, கேட்டவா-கேட்க இசைந்தனவா? அன்றி, கேட்டா ஆறு! கேட்கநேர்ந்தபடி என்ன கொடிது! எனப் பொருள் கூறி,

'ஆகற்ற வாகட வானிச் சுனைப்புனமே'

(திருக்கோவை—கூ௰.)

என்பதனை மேற்கோள் காட்டுப. கெண்டை - சேற்கெண்டை மீன் போன்ற. தோட்ட - இதழ்களுடைய, வார் கூந்தலாள் - நீண்ட கூந்தலுடையாள்.

கச. பண்டை வினை-பழவினை. 'ஆர்' என்பது 'யார்' என்பதன் மரூஉ. கொண்டல்-மேகம் போலுங் கூந்தலின், குழை-காதணிகளை. கெண்டை - கெண்டை மீன் போலுங் கண்களினின்று. நீர் வழியல் - நீரைப் பெருக்காதே. வெய்துற்று - புழுங்கி. அழியல் - வருந்தாதே. 'வழியல், அழியல்' என்பன அல்லீற்று எதிர்மறை வியங்கோள் வினைமுற்றுக்கள்.

கரு. அணையும் - சயனத்தையும். மெய் காவல் பூண்ட பரிசனமும் - உடலைக் காக்குந் தொழில் கொண்ட ஏவலாட்களையும். பனிப்ப - நீரைத் துளிக்க. பூணேர்-'பூண் ஏர்' என்றேனும் பூண் நேர்' என்றேனும் பிரிக்க, நேர்-நேர்ந்த.

கசு. 'வனம், திசை' என்பன ஈண்டு ஆகுபெயர்கள். 'வனத்துள்ள உயிர்கள், திசையிலுள்ள உயிர்கள்' என்பன பொருள்கள்; துயின்றது-உறங்கியது, பேர்-யாமம், இந்த நடு இராத்திரியில் 'கழுதுகண் படுக்கும் பானு ளிரவினில்'* என்பர் திருவிளையாடற் புராணமுடையார். 'இனிமேல்' என் றியைக்க. கண் துயில்கை - நித்திரை செய்தல். கடன் - முறை. கை கொடுத்து-தேவி (தலைக்கீழ் அணைபோலத் தன்) கைகளைக் கொடுத்து.

கஎ. புன்கண்-துன்பம். கூர்-மிகுந்த. பொடியாது-பொடியாகா திருக்கின்றது. ஆவி போகாது - உயிர் போகா திருக்கின்றது. வெடியாது - பிளவா திருக்கின்றது. என் - இஃதென்ன வியப்பு!

கஅ. முன்றில் - மண்டபத்தின் முன்னிடம். 'முன்றில், முன்றுனை' என்பன இலக்கணப் போலி. தானை-சேலை. இறைவனுக்குத் துயில என்றனது கைபுகுந்தது - அரசனாகிய நளனுக்கு நித்திரை வர என் கை (அணையாகப்) புகுந்தது. என்னுடைய கால் புகுந்தது - இஃது என் கால் (அவன் அரண்மனையிற்) புகுந்ததன் பயன்; நல்வினை செய்யாத என்னை அவன் மணந்ததன் பயன் என்றபடி. 'காலை வைத்த லக்நம் கனகஞ் சொரிந்தது'

என்னும் பழமொழி காண்க. அன்றி, 'என்றனது கைபுகுந்தது என்னுடைய கால் புகுந்தது' என்பதற்கு 'எனது கைகளும் எனது கால்களும் உடன்பட்டன; என் கைகளின்மேல் தலை வைத்து என் கால்களின்மேற் படுத்தனனென்றபடி' என்பாரு முளர். தமயந்தி கால்களின் மேல் நளன் படுத்துறங்கினு னெனல் சிறிதும் பொருந்தாதென விடுக்க. கண் நீர் வர - கண் களினின்று நீர் ஒழுக.

கக. விண்ணவரும் - தேவரும். தாமம் - (மண) மாலை. தையல் - அழகு. படைக்கண் - வாட்படைபோன்ற கண். 'மற்று ஆரே துயர் அடையார் ஆங்கு' என்பதற்கு 'வினைப்பயன் விளை வில் வேறு யாவர் தாம் துன்ப மடையார்?' எனவும், '(அதைக் காணின்) அப்பொழுது யார் தாம் துன்பமடையார்; ஆகலின், யான் துன்பமடைவது வியப்பன்று' எனவும் பொருள் விரிப்ப.

க00. பூங்கோதை - அழகிய மாலை போலுந் தமயந்தி. 'கோதை' கூந்தலெனின் 'பூங்கோதை' என்பது அன்மொழித் தொகை யென்க. 'கோதை பிரிய கலி (நளனது) நெஞ்சத்தைக் கலக்கினன், என்க.

க0க. மாகத்து - வானத்தில். அரா - 'கேது' வென்னும் பாம்பு. செஞ்சுடரின்-சூரியனிடத்தே. கடுஞ்சுடர்-கருமையாகிய ஒளி, அஃதாவது இருள். விஞ்ச-மிக. மதித்த - (யாவரும்) நன்கு மதித்த. வயம் - வெற்றி. 'உணர்வு உதித்தது' என்க.

க0உ. காரிகை - அழகு மிக்க தமயந்தியின். நீத்து-நீக்கி. அந்தக் கூர் இருளில்-அந்த மிக்க இருளில். போவான் - போக. எய்தியது - பொருந்தியதாகிய. நேரே அறிதற்கு - ஒழுங்காய் அரிய.

க0ங. கண்ணியதை - நினைத்ததை. காய் - (யாவரையும்) வருத்துகின்ற. பண்-இசை. கேள் - உறவு. கிளர்-மிக்க. மருங்கு- பக்கத்தில்.

க0ச. 'துகிலும் உயிரும் இரண்டாக' என்றது புணர்நிலை யணி. முற்றும் - (நாளுக்கு நாள்) முதிர்ந்த. முதல்-வேர். அவள்- அத்தமயந்தியின். தெரிந்தான் - ஆராய்ந்து; இது முற்றெச்சம் என்க. திகைத்து - மயங்கி.

க0ரு. மீண்டு-மறுபடியும். ஆயர்-இடையர். கொணர்ந்த-(கறந்து) கொண்டுவந்த. அடு-காய்ச்சிய. 'ஆயர் கொணர்ந்த பால்' 'அடுபால்' என்றியைக்க. தோயல்-தயிரை; இஃ தாகு பெயர். காலன் வடிவாய வேலான்-யமன் வடிவமாகிய வேலை யுடைய நளன்; 'கால வேலான்' என்றார் கம்பரும்.

க0சு. சிந்துரத்தான்-சிவந்த பாதங்களுடைய. 'சிந்துரத் தால்' எனப் பாடங் கொள்வாரு முளர்; அங்ஙனம் கொள்ளின், 'ஐராவத மென்னும் யானையால்' எனப் பொருளுரைக்க. தெய்வ முனிவன்-நாரதமுனிவர். வசிட்டர் போலப் பிரம்மரிஷியும், விசுவாமித்திரர்போல ராஜரிஷியும் அல்லர்; இவர் படைப்பினுட் பட்ட தேவரிஷி யென்பார் 'தெய்வமுனிவன்' என்றார். தம் பித்த-அசையாது நின்ற. மாநீர்-கங்கை. முந்த-முற்பட. வலித் தது-கடினமுடைத்தாயிற்று. ஒருகால் நாரதமுனிவர் மற்றுஞ் சில முனிவர்களோடு கங்காநதி தீரத்திற்கு வந்து தங்கி நிட்டை கூடி யிருக்கையில் அக் கங்காநதி அவர் தன்னைப் பணியாமை குறித்துச் சினந்து அவரை அழித்தற்குப் பெருகி வர, ஐரா வதம் என்னும் யானை ஆங்கு வந்து நீர் முகந்து அவர்மேல் வீச, அவர் நிட்டை குலைந்து உற்ற துணர்ந்து ஒரு மந்திரஞ் சொல்ல, அக் கங்காநதி தம்பித்தது என்பது கதை. இது சைமினி பாரதத்துள தென்ப.

க0எ. தீக் கானகத்து-(பற்றியெரிகின்ற) நெருப்பை யுடைய காட்டில்; கொடிதாகிய காட்டில் எனினுமாம். கோக் காதலியை-சிறந்த மகளை. குறிக்கொண்மின்-கருத்தில் வைத் துக் காப்பீராக. காதலன்பு-ஆசையும் அன்பும்; இஃ தும்மைத் தொகை; அன்றி, இருபெயரொட் டென்பாரு முளர். ஏதிலன் போல்-அயலானைப் போல.

க0அ. ஏந்து-ஓங்கிய; 'ஏந்திய கொள்கையார் சீறின்' என் றார் நாயனாரும். அன்றி, 'சுமக்கும்' என்பாரு முளர். 'அருளை நீத்தான்' என்பார் 'தன்னருளும் வேறாக' என்றார். தொடை-தாரை. நாண்மாலை-புதியமாலை. இடை இருள்-நடு இராத்திரி.

க௦கூ. தாரு - கற்பக மரம். விரவார்போல் - பகைவரைப்போல. கூர்-மிக்க. 'கால் நகம்' எனப் பிரிக்க. வேந்து-அரசன்.

கக௦. 'நீலம் அளவே நெகிழ அங்குக் காணாது அயர்ந்து நிரை முத்தின் கோலம் மலர் இன் கொடி யிடையாள் கை நீட்டினாள்' என் றநுவயித்து 'நீலம் போன்ற கண்கள் சிறிதளவே திறக்க, (நாயகனை) அங்கே காணாது சோர்ந்து வரிசையாகிய முத்தினது வடிவம்போன்ற நீர்த்துளிகள் தோன்றிய இனிய கொடிபோன்ற இடையுடைய தமயந்தி கைகளை நீட்டினாள்' எனப் பொருளுரைப்பது நேர். அளவு-ஒரு சிறிதளவு; 'அளவு கூட வுரைப்பரிதாயினு, மளவி லாசை துரப்ப வறைகுவேன்' என்றார் சேக்கிழார்நாயனாரும். அன்றி, (அவற்றின்) அளவே அஃதாவது முழுதும் எனினுமாம். மலர்-தோன்றிய; இது வினைத்தொகை யென்க. 'மலரின் கொடி யிடையாள் அங்குக் காணாது நிரை முத்தின் கோலம் நீலம் அளவே நெகிழ அயர்ந்து' என்றியைத்து 'மலர்களையுடைய கொடி போன்ற இடையுடைய தமயந்தி (நளனை) அங்குக் காணாமல் வரிசையாகிய முத்தின் வடிவம் போன்ற நீர்த்துளிகள் நீலமலர் போன்ற கண்களின் அளவாகச் சொரியச் சோர்ந்து; எனப் பொருள் கோடலுமாம். என்னா-என்று. 'வளையினம்' என மாறுக.

ககக. ஒள் தொடியாள்-ஒள்ளிய பொற்றொடி யணிந்த தமயந்தி; தொடி-இது வளை கழலாதபடி முன் கையி னணிவது என்பர் நச்சினார்க்கினியர். மடுத்த துயிலான் மறுகி-கொண்ட நித்திரைக்கு மனம் கலங்கி அஃதாவது ஏன் நித்திரை செய்தோமென்று கலங்கி. 'துயிலான்' என்பது வேற்றுமை மயக்கம். 'என்னே இஃது என்! என்று எழுந்து அடுத்தடுத்து மன்னே! என அழைப்பாள் (ஆயினாள்)' எனப் பொருத்துக.

ககஉ. வெய்ய தரை யென்னும்-கொடிய பூமியாகிய. அமளி-படுக்கை. 'மெல்லமளி' என்புழி மென்மை சாதியடை யென்க. கையரிக் கொண்டு-தேடி. 'ஐயகோ' என்பது இரக்கக் குறிப்பிடைச் சொல். 'மேதி யினம்' என மாறுக. நாடன்-ஈண்டு வீம னென்க.

ககரு. 'அழல் அம்பு' என்க; அழல் - கொதிக்கும்; இது வினைத்தொகை. இனி, 'தீப் போன்ற' எனப் பொருளுரைத்தலுமாம். உருவ - (தைத்து) ஊடுருவ. ஆற்றாது-பொறாது. குழை-காதணிகள். கண்ணீர்க் கொழுந்து-கண்ணீர்த் தாரை.

ககசு. முகில் - மேகம். மின் - மின்னல். வறு நிலத்தின் - வெறுந் தரையில். முகில் கூந்தலுக்கும் மின் தமயந்திக்கும் உவமைக ளாயின. இஃதெதிர்நிறை. ஏனம்-பன்றிகள். மணி-ரத்நங்கள். குண்டு-ஆழம். கை தலைமேல் வைத்தல் துயர் கூர்வார் மாட்டு நிகழுஞ் செய்கை.

ககரு. தரியாது - ஆற்றாது. சிறகாம் - சிறகுகளாகிய. அலைத்து-அடித்துக்கொண்டு. வெய்யோனை - சூரியனை. வாவு பரி-தாவுகின்ற குதிரை பூட்டிய. இது தற்குறிப்பேற்ற உவமை.

ககசு. 'தான் அம் மடந்தைக்கு' எனப் பிரிக்க. மகர மெய் தொக்கது விகாரம். வேந்தன் - நளன். கை வாங்க - ஒளிப்ப. கானாடு - காட்டினுள்.

ககஎ. ஏது-யாது. துயர் கரை - துன்பத்திற்குக் கரை. என் என்னாது என் என்னும்-என் என்று கேளாதது. யாது பற்றி என்று வினவும். 'என்னாதது' என்பது தகரந் தொக்கு 'என்னாது' என் நின்றது. மன் - அரசனே! என்னு - என்று (கூவி).

ககஅ. அல்லி-அகவிதழ்; குமுதமுமாம். அடித் தாமரை-தாமரை மலர்போலும் அடியினது சுவடு. நாறுதலும்-தோன்றுதலும். மல்-மற்போரில். உறு-மிக்க. சாய்ந்த-கவிழ்ந்த.

ககக. வெறித்த - (என்னைக் கண்டு) பயந்து நிற்கின்ற-ஊழி-ஊழிகாலம். 'இந்த நெறிக்கண் எம்மைப் பிறித்து' என்றொட்டுக. வானாடர் - (இந்திரன் முதலிய) தேவர்கள். பெற்றிலா - அடையலாகாத.

கஉ0. வேட்ட - விரும்பிய. கரியை - யானையை. 'பெரும் பசியான் விழுங்கி' என்க. மோட்டு - உயர்வடைந்த. மீட்டு - திரும்பி. ஓராது - அறியாமல். உண் தேன் - (தேனை) உண்ணு

கின்ற தேன் வண்டுகளையுடைய. அறல் - கரு மணல் போலும் போர் ஆர் - போரோடு பொருந்திய.

கஉக. வெம் கண் - கொடிய கண்களையுடைய. அரவு போல் - இராகுவைப்போல. மேல்-மேற்பாகம். பால்-பக்கம். தீ - விடத்தீயை.

கஉஉ. வாள்-ஒளி. மாயாமுன்- இறவாமுன். இலக்கு-குறி.

கஉங. ஆவி - உயிர். பொருமுகம்-போர் செய்தற் குரிய முனையை யுடைய.

கஉச. மல்தொடுத்த-மல் போர் செய்த. பிரிந்தும்-நீங்கியும். மாயாத - இறவாத. வல்வினையேன் - தீவினையேன். 'நீரேனும்' 'காரேனும்' என்புழி உம்மைகள் சிறப்பும்மைகள். கார் - மேகம். கலுழ்ந்து - கலங்கி.

கஉரு. 'உயிர் உடையும்' என மாறுக. ஓகோ - ஐயோ. 'விடை தந்தருள்வாய்' என்க. என்று - என்று. துவர்-பவளம். போலும்.

கஉசு. ஒற்றிவருகின்ற - ஒன்றிவந்த; அடியொற்றி வந்த வென்பாருமுளர். தோடன்-குழையன். பங்கி-மயிர். கார்அரவு- கிருஷ்ண. சர்ப்பம். தெய்வ முகம் - தெய்வத்தன்மை பொருந்திய முகம்.

கஉஎ. வெய்ய - கொடிய- ஐயன்மீர் - 'ஐயன்மார்' என்னுஞ் சொல்லின் ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாதல் விளியுருபென்க. அபயம் - அடைக்கலம். உய்ய - பிழைக்க. ஈரும்-பிளக்கின்ற. பூணுள் - ஆபரணங்களை யுடையாள்.

கஉஅ. சங்கநிதி-குபேரன் நிதிக ளிரண்டனு ளொன்று. நிதிக ளிரண்டாவன பதுமநிதி, சங்கநிதி யென்பன; அவை வடிவத்தான் அப்பெயர் பெற்றன. கலி - வறுமை. கடிந்த - நீங்கிய. காம்பு - மூங்கில். வாய் - வாய்த்த.

கஉகூ. வாயின் - 'இன்' ஐந்தனுருபு. தேரின் - ஆராயின். கைம்மாறு - பிரதியுபகாரம். வென்றி - வெற்றி.

க௩0. இந்து - பிறை. எதோ - எதையோ? புலே-ஈனம். ஏதுவாய் - காரணமாகிய பாவத்தின்கண்; 'ஏது ஆய்' எனப் பிரிப்பாரு முளர்.

க௩க. விழி பதைத்து - கண்கள் துடித்து. ஆடல் - நிர்த்தனத்தையுடைய. அலமரா - சுழன்று. தூறு எலாம் ஆக-புதர்களெல்லாம் கழியும்படி; அஃதாவது ஒரு புதரேனும் விடாது. ஆறு - வழி.

க௩உ. தீக்கண் - தீப்போலுங் கண்களையுடைய. ஆக்கை-உடம்பு; இது 'யாக்கை' என்பதன் மரூஉ. போக்கு-போமிடம்; 'போதல்' எனினுமாம். சீறு-சீறி. நீராய்-சாம்பலாய்.

க௩௩. தமிழ்வாணர்-தமிழ்ப்புலவர்களிடத்தில்; 'வாழ்நர்' என்பது 'வாணர்' என வந்ததென்ப. பிழைத்த - பிழைசெய்த. வான்குடிபோல்-வான்போலுயர்ந்த குடும்பத்தைப்போல. தீத்தழல்-நெருப்பின் வெம்மை. மீ மண்டு-மிக நெருங்கிய. சுரத்து-பாலையில். மாடு - பக்கம். பண்டையுள வாழ்வு - முன் இருந்த செல்வம். மன் - அரசன். இழைத்த - செய்த. தாழ்வு - குறைவு. தன் தலே மேல் தந்து - 'தன் தலைவிதி மேலேற்றி' எனவும், (குற்றமாக நினையாது) மேன்மையாக நினைத்து' எனவும், 'தன் மேலேற்றி' எனவும் பொருளுரைப்ப. புலவரைப் பிழைத்தலாவது வரிசை யறிந்து பொருளுதவாமை முதலியன.

க௩ச. அவ்வளவில் - அப்போது. ஆதி பெருவழியில் - ஆதிகாலந்தொட்டு ஏற்பட்டிருக்கும் பெரிய வழியில் (சென்ற). ஆய் - ஆராயவல்ல. தீவினையேன் - பாவியேன். ஐயுற்றான் . (மானிட மகளோ தெய்வமகளோ வென்று) சந்தேகித்தான்-கமலம்-தாமரை. மயில்-இலக்குமி. உண்டாய எல்லாம் - (அவளுக்கு) உண்டாகிய துன்பமுற்றும்.

க௩ரு. 'உன் ஊர் யாது உன் பேர் யாது' என்க. நெக்கு-நெகிழ்ந்து. நிமித்தம்-காரணம். கட்டுரைத்துக்காண் - உண்மையைச் சொல்; அஃதொரு சொல் லென்ப. இனி 'கட்டுரைத்துக்காண்' என்பது ஒரு தொடரெனக்கொண்டு 'உண்மையைச்

சொல்லிப் பயனைக் காண்பாய்' என்றுரை கூறுதலு மொன்று. காந்தாரம் - ஒரு பண். விட்டு - வாய்விட்டு. வேந்து - பண்பாகு பெயர்.

கநகூ. முன்னை வினை - பழவினை. பிரிய - பிரிதலின். கதிர் ஒளி. ஆரம் பூண் - ஆரமாகிய ஆபரணம்.

கநஎ. திருவை-தமயந்தியை. கொடை-ஈகை. 'வணிகன் நீதி கிடத்துவான் மன்னவர்தம் கீர்த்தியினைப் பார்மேல் நடத்துவான் திருவைச் செலவிட்டு வட்டை நயந்து போயினன்' என்றியைக்க. நீதி கிடத்து-நீதி செலுத்தும். வான் மன்னவர்-பெரிய அரசர்கள்; ஈண்டு 'வீமனும் நளனுமாமென்க'. அன்றி 'சிறந்த ராச குலத்தின்' எனினுமாம். நடத்துவான் - நடத்த; இஃதெதிர்கால வினையெச்சம். வட்டை-வழி. 'கிடத்துவான்', 'நடத்துவான்' என்பன வணிகனை விசேடித்து நிற்பனவெனக் கொண்டு பொருளுரைப்பாரு முளர்.

கநஅ. அற்ற-பாதியாகத் துணிபட்ட. அறு-நீங்காது. உற்ற - மிக்க. கண்டேம் - பார்த்தோம். பொன்தேவி - பொன் போன்ற தேவியே! மடவார் - (தோழிப்) பெண்கள்.

கநகூ. 'இழை புனைவாய்' என மாறுக. ஆய மயிலை-நீங்கள் சொன்னவளாகிய (அந்த மயிலை). கொவ்வைக் கனி-கோவைக் கனிபோலும் வாய். மயில்-சேதிராசன் மனைவி.

கசய. ஏக - போதலும், 'வளை இனம் தாங்குவாய்' என மாறுக. உற்ற-அடைந்த. வினைவழி-வினைப்பயன்.

கசக. அந்தாமரையிலவள் - இலக்குமி. ஏகாரம் வினா. ஐயுற்று - சந்தேகித்து. 'சிந்தா ஆகுலம்' எனப் பிரிக்க. இது தீர்க்க சந்தி. சிந்தாகுலம்-மனக்கலக்கம். கள்ள-குறிப்புப் பெயரெச்சம்.

கசஉ. தனி - தனியாக. அலமருவேன் - சுற்றித்திரிவேனாகிய நான். புலரா - உலர்ந்து. பதறு - தடுமாறி.

கசரு. 'ஒருவகையால் நாடியே' எனப் பிரிக்க. ஒருவகையான் நாடியே' எனப் பிரிப்பின், 'நாடியே' என்பதற்கு 'நாடுவித்து' எனப் பிறவினைப் பொருள் கொள்க. தந்துவிடும் - கொணர்ந்து விடும். கொங்கு - மணம். ஏயும் - பொருந்திய.

கசச. இன்னல் உழந்து - துன்பத்தால் வருந்தி. எகி - சென்று. 'பூங்குயில்' என்குத் தமயந்தி. உணர்தி - அறிவாய். உறழ் - ஒத்த.

கசரு. நாடும் - பொருந்தும். நாடி - தேடி. போதில் திரு - தாமரையில் வாழும் இலக்குமி. நாடும் - விரும்பும்.

கசசு. தாமம்-மாலை. ஓதி - கூந்தல். 'நின்றாளை தமயந்தியாமென்று அறியா' என்றேனும், நின்றாள் 'தமயந்தியை (தமயந்தி) ஆமென்று அறியா' என்றேனுங் கொள்க. அறியா - அறிந்து. 'கொடி' 'கொம்பு; என்பன தமயந்தியைக் குறித்தன.

கசஎ. விழி நீர் - கண்ணீர். கழல் - பாதத்தை. உடல் - உடம்பின். பொங்க - மிக்கு ஓடினமையின். கடல்போலும் காதலார் - கடல்போலப் பரந்த அன்புடைய (சேதியரசன் முதலிய) சுற்றத்தார். கையற்றார் - செயலற்றாராகி. 'தங்கள் உயிர் உடல் ஒத்தார்' - தங்கள் (அறிவுடைய) உயிரும் (அறிவில்) உடலை ஒத்தார்கள். போலும் - உரையசை. எச்சவும்மை விகாரத்தாற் றொக்கதென்க.

கசஅ. மாரி - மேகம். பயந்த - பெற்ற. காரிகை - பெண். வேணியாய் - சடையாய். ஆணி - உரையாணி. பொன்னின் மாற்றினைத் தெரிவிக்கும் உரையாணிபோல இவள் துன்பத்தின் இயல்பினைத் தெரிவித்து நின்றாளென்றபடி. 'பெருமைக்கு மேனைச் சிறுமைக்கும் தத்தங், கருமமே கட்டளைக் கல்' (குறள்) என்பதனோடு ஒப்பிடுக.

கசகூ. 'அறியா, தடுமாறு' என்பன உடன்பாட்டு வினையெச்சங்கள். 'பொன்வடிவின் மேல் வீழ்ந்தாள்' என்க. கோதி - கொழுதி. குருகு - (அன்னப்) பறவைகளை. பணை - வயல். திகைத்து - மயங்கி.

கஙுய. கந்தனையும் - முருகனையொத்த இந்திரசேனனை யும். கன்னியையும் - இந்திரசேனையையும். தனி ஆற-தனிமை நீங்கும்படி. பதியில் - வேற்றுமை மயக்கம். விதியிலே - ஊழ் வினையால்.

கஙுக. கோயில் - அரண்மனை. 'கோயில், அந்தப்புரம், வாயில்' என்பன இடவாகுபெயர். இவை சொல்லான் அஃறிணை யாகலின் 'மயங்கிய' வென அத் திணைவினை கொண்டு முடிந்தன. மயங்கிய - மயங்கினர். கான் ஆள-காட்டை ஆளும்படி; 'கானுள நிலமகளைக் கைவிட்டுப் போனானைக் காத்துப் பின்பு' 'போனானு மொருதம்பி' என்றார் கம்பருமு, காதலன்-நாயகன்.

கஙுஉ. அயிர்ப்பார் - சந்தேகிப்பார். வழுவாத - தவறாத. காமம் - அன்பினால். ஓதம் - குளிர்ச்சி. நாமம் - அச்சம். 'நாம்' என்னும் உரிச்சொல் ஈறு திரிந்தது.

கஙுங. திகைத்து - மயங்கி. அலமந்து - சுழன்று. யான் பட்டதே! நான்பட்ட பாட்டையுஞ் சொல்லலாகுமா! என்ன-என்று (வாய்) சொல்லா நிற்க. படை - வேற்படை போலும்.

கஙுச. செவ்வண்ண வாயாள் - வீமன் மனைவி. தேர்வேந் தன் - வீமன். ஆற்றுவரோ - சகிப்பரோ! மெய்வண்ணம் - உடம்பின் தன்மை. ஓய்ந்து - சோர; இஃதெச்சத் திரிபு. ஒத்த தமர் - (அன்பு) ஒத்த சுற்றத்தார். நின்று நீந்தினாள் - சிறிதுபோது நின்று (நீர் மேலும் பெருகுதலால்) நீந்தினார்கள்.

கஙுரு. பனி - குளிர்ச்சி; 'நடுங்குதற்குரிய' என்பாரு முளர். உன்னை - உன் அருமை பெருமைகளை. என் னினைந்தாய்' என்க. பொன்னினை - பொன்போன்ற தமயந்தியை.

கலிதொடர் காண்டம் முற்றிற்று.

---

க. மூலம் - முதலாகிய. காலிக்கு - பசுக்கூடத்திற்கு. 'மால் யானை அழைப்ப' என்க. அழைப்ப - இது நிகழ்காலச் செயவெனெச்சம். முந்து - முன்பு. அருளும் - அருளிச்செய்த; அஃதாவது, (பிரமனுக்கு) உபதேசித்த. இப்பாட்டிற் பரத்வ ஸௌலப்யங்கள் கூறினமை காண்க. தாமரை - ஆகுபெயர்.

உ. நீறு அணிந்து போதுவார் - விபூதி தரித்துப் (பெருமான் சந்நிதி) புகுவார்; இனி, 'போது வார் நீறு அணிந்து' என்பதற்குத் 'தொன்றுதொட்டு (வேதங்களிற் பேசப்பட்டு) வருகின்ற ஒழுகுகின்ற திருநீற்றைத் தரித்து' எனவும், (அளவிற்) போதிய ஒழுகுகின்ற திருநீற்றைத் தரித்து' எனவும், '(உரிய) காலங்களில் ஒழுகுகின்ற திருநீற்றைத் தரித்து' எனவும் பொருளுரைத்தலுமாம். வார்தல் - ஒழுகுதல்; அஃதாவது நீளச் செல்லுதல்; 'நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்' எனப் பெரியாரும் பணித்தார். ஐந்தெழுத்தை - பஞ்சாக்ஷர மகா மந்திரத்தை. நீதியார் - நல்லொழுக்கமுடைய முனிவர்களுக்கு. அமரர் - தேவர். அம்மான் - தந்தை; அந்த மகானுமாம். ஆடும் - நர்த்தனஞ் செய்யும். அரங்கு - சபை 'உள்ளம் அரங்கு என உரைப்பார்' என்றியைக்க.

ந. வனத் தீயில் - காட்டுத் தீயில். பன்னுகம் - பாம்பு. 'பன்னகம்' என்பது 'பன்னுகம்' என்றாயது; 'காலால் நடவாதது' என்பது அதன் தாதுப் பொருள்.

'பன்னுக வேந்தன்' என்றது கார்க்கோடகனை. மொழி வழி - வார்த்தை வந்த திசை. முரண் - வலிமை. பழிவழி - பழியையுடைய வழி என விரிக்க.

ச. ஆரும் - 'யாரும்' என்புதன் மரூஉ. அரை இருள் நடுராத்திரி. அங்ஙனே-அக் காட்டில். வீரன்-நளன். அதீ

கானில் - அக் கொடிய காட்டில். எரிவானை - எரிகின்ற கார்க் கோடகனை. 'எதிர் கண்டான்' என்க.

ரு. தீக் கடவுள் - அக்நி தேவன். திருமனத்தில் ஆக்கி-நினைத்து. அரவு அரசை - சர்ப்ப ராசனை நோக்கி அடைந் தான்-இஃது அவன் முகமாகச் சென்றானென்னும் பொருட்டு. உடைந்தான் - பின் வாங்கினான். உவந்து போய் புக்கான் - (நளன்) மகிழ்ந்து சென்று புகுந்தான்.

சா. வேத முனி - அநாகச முனிவன். ஆதபம் - சூடு; ஈண்டு 'அக்நிச்கு' ஆயிற்றென்க. காதலால் - அன்போடு. மாலை - பூமாலையின்கண் உள்ள. மணி - நீலமணி போன்ற; அழகிய வென்பது மொன்று. சந்து - இசை; 'சந்தம்' என்பது கடைக்குறைந்து நின்றது.

எ. சீரியாய் - சிறப்புடையாய். கூரும்-மிகுகின்ற. தழல்-அக்நி. வெம்மை-தாபம். படுகின்றான் என்பது கார்க்கோடகனை.

அ. ஏழ் உலகும்-சப்த தீவுகளையும். குன்றும் - மலைகளை யும். குலம் - சிறப்பாகிய. அரவு அரசை - கார்க்கோடகனை. ஆரணியம் தன்னில் - காட்டில். இரவு அரசை - மன்மதனை; நாயகியை விட்டுப் பிரிந்து நினையா திருத்தலின் 'இரவரசை வென்றான்' என்றேனும், அழகின் 'இரவரசை வென்றான்' என்றேனுங் கொள்க. இனி, 'இரவு அரசை' என்பதற்குச் 'சந்திரனை' எனப் பொருளுரைத்தலுமாம். 'திங்க ளன்ன தண் பெருஞ் சாயலும்' [புறம்] என்றார் பிறரும். அன்றி, 'நடுராத்திரி' எனப் பொருள் பகர்வாரு முளர். 'புயத்தான் ஆரணியந் தன் னில் அரவரசை எடுத்துக்கொண்டு அகன்றான்' என முடிக்க.

கூ. வன் தாளால் - வலிய நீட்டி வைக்கும் அடியின்படி. தச என்று இடுகை - பத்து என்று சொல்லிக் கீழ் விடுவாய்; அஃதாவது, பத்தடி சென்றிடுவாய் என்றபடி; 'கடி' யென்று சொல்லி இடுவாய் என்பது மற்றொரு பொருள். தச என்னும் வடசொல் பெயராயின் 'பத்து' எனவும், ஏவல் வினையாயின் 'கடிப்பாய்' எனவும் பொருள் தருமென்க. இங்ஙனம் சிலேடை

எனவும் பொருள் தருமென்க. இங்ஙனம் சிலேடை வகையாற் கார்க்கோடகன் கூறியது தான் நளனைக் கடிக்க நினைத்தலின் அவன் ஏவல்கொண்டு கடித்தபடியாதற்கென் றுணர்க. 'ஏவலாற் றீங்கிழைப்பேன்' என்றிருத்தல் காண்க. போர் மாவலான்-போரிற் குரிய குதிரையை நடத்துவதில் வல்லவனாகிய நளன்.

க0. தீங்கலி-கொடிய கலி புருடனால்; 'தீக்கலி' என்பது மெலித்தல் விகாரம் பெற்றது. செற்ற-வெல்லப்பட்ட. வாய்மையால்-கபடமின்றி. (கார்க்கோடகன்) எயிறு வைத்தான் என்க. எயிறு-பல். 'அது' என்னுஞ் சுட்டு 'உரைப்ப' என்னும் எச்சத்தின்கண் 'உரைத்தல்' என்னுந் தொழிற்பெயரைச் சுட்டி நின்றது.

கக. வீமன் மடந்தை - தமயந்தியினது. விழி - கண்கள். முடிய-முழுவதும். வாமம்-அழகு. ஏமம்-பொன். அகம் போல்-வீடு செல்வங் குறைகுவது போல. வெந்து-வெதும்பி. 'மேனி வெந்து நெடுந்தோள் குறுகிற்று' என்க. தோள்-பால்பகா அஃறிணைப் பெயர். 'ஏ' இரக்கப் பொருட்டு. 'விழி' என்புழிச் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

கஉ. ஆற்றல்-வலிமையுடைய. ஆங்கு-அப்படி. சீற்றம்-கோபம். 'காரணம் என்', என மாறுக. ஏற்று-(பகையரசர்களை) எதிர்த்து நின்று. அமரில்-போரில். கூற்று-யமனை; உடம்பினின்றும் உயிரைக் கூறு செய்தலின் 'கூற்று' ஆயினனென்க. அயில் முகம்-கூர்மையாகிய முனையை யுடைய.

கங. காயும்-(பகைவரை) வருத்துகின்ற. கடம்-மதநீர். மாறு-(இயல்பு) திரிந்தது. வேறு ஆக்கிற்று-யான் செய்தற்குரிய செய்கைக்கு அந்நியமாகிய செய்கையைச் செய்தது.

கச. கூன் இறால்: கூனிய இறான்மீன். 'குவளை பாய' என மாறுக. வாய்-வாயின்கண். தேன்-(அக்குவளையின்) தேன். இறால் பாயும்-தேன் கூட்டிற் றேன் போலப் பாய்கின்ற; 'குருவி கூப்பிட்டான்' என்றாற் போல நின்றது. கானில்-காட்டில். தணியாத-ஆறாத. தாங்கினைப்-(என் பொருட்டுப்) பொறுத்துக்

கொண்டு (வந்து என்னை) எடுத்தாய். அணி-அழகிய; 'அணி யும்' எனினுமாம். 'கொள்கென்றான்' என்புழி அகரந் தொக்கது.

கரு. சாதி மணி துகில்-உயர்வாகிய அழகிய (இவ்) வாடையை. போது-மலர்; இது காலவாகு பெயர். தாதின் துளிக்கு - மகரந்தத்தினின்று வருகின்ற (தேன்) துளிக்கு. துறை-நீர்த்துறை யுடைய. 'ஒளிக்கும் நாள் உரு நீங்கும் என முடித்து 'மறைந்துறையும் நாளிலுள்ள உருவம் நீங்கும்;' அஃதாவது பழைய வுருவம் வரும்' எனப் பொருளுரைக்க. அன்றி, 'ஒளிக்கும் நாள் (நீங்கும்) உரு நீங்கும்' எனத் தனித்தனி அநுவயித்து, 'மறைந் துறையும் நாளும் இந்த வுருவமும் நீங்கும்' என்பது மொன்று. இனி, 'ஒளிக்கும் நாள்' என்பதற்கு வெளிப்பட விரும்பும் நாளில்' என்றுரை பகர்வாரு முளர்.

கசு. வாகு-தோள்; இது 'பாஹு' என்னும் வட சொல் லின் விகாரம். வாகுகன்: தோள் குறைந்தவன். 'நாம் ஆக' என்புழி 'ஆ' வியங்கோண்முற்று; செயவெ னெச்சம் எனினு மமையும். கனகம்-பொன். 'ஆகென்றான்' என்புழி அகரந் தொக்கது. மிக்கான்-சிறந்தவன். செம்மனத்தால்-நடுவு நிலைமை யோடு கூடிய மனமுடைமையால். பார்த்தொழிற்கு-பூமியை யாளுந் தொழிற்கு.

கஎ. 'இணையாரு மில்லான்' என்றது கார்க்கோடகனை; 'யாரும் இணை இல்லான்' என மாறுக. இழைத்த-செய்த. புணை யாகஃ-துணையாக: இது குறிப்பு மொழி. நாகம்-யானைகள். நாகம் ஓர் எட்டும் - ஒப்பற்ற எட்டு அராக்களு மெனினுமாம். திசை யனைத்தும்-பூமிமுற்றும் என்றபடி. 'பணையாக எண் ஆகம் வேந்தன்' என்றியைத்து, '(சூதிற்) பந்தயமாக எண்ணிய மனத்தை யுடைய நளன்' எனப் பொருள் கொள்க. 'அகம்' என்பது 'ஆகம்' என முதனீண்டது. இனி, 'பணை, ஆகம்' என்னுஞ் சொற்களை 'திண்நாகம்' என்பதற்கு அடையாக்கி, 'பருத்த வுடலை யுடைய வலிய யானைகள்' எனப் பொருள் கூறி, 'எண்

ஆக' என்பதற்கு, '(தன்) எண்ணம் ஆகும்படி, அஃதாவது, (தன்) மனந் திகைக்கும்படி' என்பாருமுளர்.

கஅ. கனல் - காமத் தீ. ஏகின்றான் - வினையாலணைந்த பெயர். பனி-நடுக்கத்தையுடைய. குருகு - ஆண்கொக்கானது, தண் படா-தண்மைபடாத; அஃதாவது குளிர்ச்சி கெடாத. தனி பேடை - தன்து தனிமையாகிய பெண் கொக்கை. பார்த்து - எதிர்பார்த்து. கண்படா-உறங்காத. வேலைக்கரை - கடற்கரை: 'வேலைக்கரை கண்டான்' என்க. நினைப்பைக் காற்றாக வுருவகஞ் செய்து நெஞ்சைக் காடாகவும், காமத்தைக் கனலாகவும் உருவகஞ் செய்யாமையின், இஃதேகதேச வுருவகவணி.

கக. கொம்பர்-கொம்பின்கண் இருக்கின்ற; 'அர்' போலி. குருகே-கொக்கே! 'ஒன்று (ம்) கூறாதிருத்தி' என முடிக்க. அம்புயத்தின்-தாமரையின். அறுகாலால்-ஆறாகிய காலால். 'திருநாடன்' என்றது வீமனை. பொன்னை - பொன்போன்ற மகளை. நீத்தேனுக்கு-கைவிட்ட எனக்கு.

உ0. கோதி-கிண்டி. பொறி வண்டு - புள்ளிகளையுடைய ஆண் வண்டு. கன்னி-இளமை. காத்திருக்கும் (தான் உண்ணாது) காத்திருக்கின்ற. ஆவி - உயிர். அற உயிர்த்து - பெருமூச்சு விட்டு. 'நினைந்து ஆவி அழிந்தான்' என்க.

உக. காரிருளில்-மிக்க இருளில். நாதம் அளிக்கின்ற - ஒலிக்கின்ற. ஆழிவாய்-கடற்கரையில். ஆங்கு-தூரத்தில். அலவநண்டே! என் - காரணம் என்ன?

உஉ. பானலே - நீலோற்பலமே! பசுந்தென்றல் - இளந்தென்றல். கானலே-கடற்கரைச்சோலையே! குருகே-நாரையே! யான் உடைய-நான் நாயகியாகவுடைய; மற்றெல்லாவற்றையும் இழந்த நான் உடைய என்பதுமாம். வீங்கு-மிக்க. உணர்ந்தால்-விழித்தால். என் நினைக்கும் - என்ன நினைப்பள்?

உங. 'போவாய் வருவாய் புரண்டு விழுந்து' என்பது எதிர்நிறையணி. 'புரண்டு வருவாய் விழுந்துபோவாய்' என்க.

இரங்கி-ஒலித்து; வருந்தி. நாவாய் குழற-மரக்கலந் தடுமாற; வாயின் நாக் குழற. அலை புரண்டு வருதல், விழுந்து போதல், ஒலித்தல், மரக்கலந் தடுமாறும்படி சலித்தலாகிய கடலின் தரு மங்களைச் சிலேடையால் ஒரு வகை நீக்கி, நாயகியை விட்டுவந்த தன் தன்மைகளாகிய போதல், வருதல், புரளல், விழுதல், வருந் தல், நாக் குழறல், (மனம்) நடுங்கல் என்பனவற்றை அக் கட லின்மீ தேற்றிக் கூறலின், இது தற்குறிப்பேற்றவணி (உத்ப் ரேக்ஷை) யென்க. தீவாய் அரவு - நெருப்பினைகப்பட்ட பாம் பினை; 'நெருப்புப்போன்ற விடத்தை வாயின்கண் உடைய பாம் பினை' எனவுங் கூறலுமாம். அகற்றும் - நீங்கிப் பாதுகாத்த.

'கூத்தாடு மருணேசர் வரையன்பர் பொருளன்பு கொண்டுன்னையு
நீத்தார்கொ ளிழலாரு மிலையாகி நின்றாய்நெ டுங்காலமே
பார்த்தாலு மயலேல கிளைத்தாய் சலித்தாய் பசுந்தென் றலாற்
பூத்தாய்பொன் னிறமாக வென்னுகை மேயன்ன புன்னுகமே'

[திருவருணைக்கலம்பகம்]

'தேயா நின்றாய் மெய்வெளுத்தா யுள்ளங் கறுத்தாய் நிலைதிரிந்து
காயா நின்றா யொருநீயுங் கண்டார் சொல்லக் கேட்டாயோ
பாயா நின்ற மலர்வாளி பறியா நின்றா ரின்மையா
லோயா நின்றே னுயிர்காத்தற் குரியார் யாவ ருடுபதியே'

[கம்பராமாயணம்]

என்னுங் கவிகளோடு ஒப்பு நோக்குக.

உச. முன்னீர்-கடல்; ஈண்டு நகரத்திற்குப் பிரதி னகரம் நிற்பது எதுகை நோக்கி யென்க. ஆக்கல், அளித்தல், அழித் தல் ஆகிய மூன்று நீர்மை யுடைமையிற் கடலை 'முந்நீ' ரென்ப. இனி, ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் ஆகிய மூன்று நீரானுயது என்பாரும், முன் நீர் எனப் பிரித்து, 'முதன்மையாகிய நீர்' என்பாரும் உளர். மடவார் முறுவல் திரள்-மாதர்களது பற்க ளைப் போலும் முத்தின் ராசியை. இனி, 'முந்நீர் மடவார் முறு வல் திரள் குவிப்ப' என்பதற்கு, 'நெய்தனிலப் பெண்கள் (தமது)

பற்களை யொத்த முத்துக்களைக் குவிக்கும்' என்பாரு முண்டு. குவிப்ப - (கரையின் கண்) ஒதுக்க. 'பொன்னீர்' எனவும், 'பொன் நீர்' எனவும் பிரித்து, 'அழகிய குளிர்ச்சியாகிய' எனவும், 'அழகிய நீர்மையுடைய' எனவும் பொருளுரைப்பர். முருகு - தேன். மொய்ம்மலரை - நெருங்கிய மலரை. தும்பி - வண்டு.

உரு. மான் - குதிரை. மடை - சோறு; மடைத்தொழில்- சோறு சமைக்குந் தொழில். ஊன் தேய்க்கும் - (பகைவர்) உடலை அழிக்கின்ற; ஊன் என்பது ஆகுபெயர். நறவம் தேன் - மண மிக்க தேன். தான் - அசை.

உசு. அரசற்கு - இருதுபர்ணனுக்கு. செம்மொழி - உண்மைச் சொல். தருமின்-அழைத்துவாரும். மிக்கான் என்றது நளனை.

உஎ. அடையா-சேராத. 'கொல்' என்பது அசை. கைத் தொழிலாவன தேர் செலுத்தல், உண்டி சமைத்தல்.

உஅ. அலர் - தாமரை மலரினின்றும். தேறல் - தேன். கொடை - ஈகை.

உகூ. இருங் கானில்-பெரிய காட்டில். நீத்த-விட்டகன்ற, இகல்-வலிமை. 'நாடுகென' என்புழி அகரந் தொக்கது. கோதை - தமயந்தி; 'பூப்புனை மாலையு மாலைபுனை மாதருந், தோற்புனை வின்னாண் டொடர்கைக் கட்டியுங், கோச்சேரன் பெயருங் கோதையென் றாகும்' என்பது காண்க. புரை - ஒத்த. 'வேந்தன்' என்றது வீமனை. புரோகிதன் பெயர் சுவேதன் என்க. உணர்ந்து - ஆய்ந்தறிந்து.

௩0. தன் காதலியை - தன் மனைவியை. சோர் துயிலின்- (தன்னை) மறந்த நித்திரையில். 'தேர் வேந்தற்கு நீத்தல் அன்றோ துணிவு' என்றொட்டுக. அறைந்தால்-சொன்னால். எதிர் மாற்றம் - மறுமொழி. தேர்ந்து - தெளிந்து.

௩க. மின் ஆடும் - மின் அசைகின்ற; 'மின் நாடும்' எனப் பிரித்து 'மின் தேடி வருகின்ற' எனினுமாம். மால் - பெரிய. மேகம் என்பது மொன்று. வேலையும்-கடலும். குறிஞ்சி, முல்லை,

மருதம், நெய்தல் ஆகிய நானிலத்துந் தேடினு னென்றபடி. மன்னு - நிலைபெற்ற. கடம் - மதநீர். களியானை - களிக்கும் யானைச் சேனையை யுடைய.

நஉ. போதுமோ-அமையுமோ? தான் - அசை. உரை-சொல்லை. ஏற்றினுன்-கொண்டவனுகி; இது முற்றெச்சம். 'தார் வேந்தன் அந்த வுரை தன் செவியில் ஏற்றினுன் (ஆகி) எதிர் வந்தான்' எனப் பொருத்துக.

நந. ஒள் தொடி - ஒளியாகிய தொடியை யுடைய தமயந்தி; இஃ தன்மொழித்தொகை. பண்டை விதி - பழவினை. தாளம்-முத்து. தாமம்-மாலை. நீத்தான் என்று - (அவள் நாயகன் விரும்பிக்) கைவிட்டா னென்று, ஐயுறேல்-சந்தேகப்படல் வேண்டா.

நச. உறைந்தனை-தங்கினுய். நாடினை-தேடினுய். 'காவலன்' என்றது நளனை. தலைப்பட்ட ஆறு-எதிர்ப்பட்டபடி. அலைப்பட்ட - அலையைப் பொருந்தின.

நரு. வாக்கினுல்-சொல்லுஞ் சொல்லான். மன்னவனை-நளனை. மறித்து - (அச் சொல்லைத்) தவிர்த்து. ஆக்கையே-உடம்பினையே; ஏகாரம் பிரிநிலை. ஆக்கை-இது 'யாக்கை' என்பதன் மரூஉ. குலம்-சிறப்பாகிய. 'நூல் ஏந்து' என மாற்றுக; இது வடநூன் முடிபு.

நசு. மீண்டு - மறுவலும். பூண்டாள்-மேற்கொண்டாள், நீண்ட கொடை வேந்தற்கு-மிக்க ஈகையை யுடைய இருதுபர்ணனுக்கு. 'அந்தண! நீ போய் நீண்ட கொடை வேந்தற்கு உரைத்தால்' என்றியைக்க. இ தூரம்-இவ்வளவு தூரத்திற்கு. 'படை வேந்தன்' என்றது நளனை. தேர்க்கோலம் கொள்வான் - சாரதியாவன். பரிந்து - விரைந்து; அன்புகொண்டு என்பது மொன்று.

நஎ. அங்கு-விதர்ப்ப தேசத்தில். செங்கோலாய்-நீதியை யுடைய இருதுபர்ணனே! அ நாளும்-அந்தச் சுயம்வர நாளும். நாளை அளவு-நாளையே. 'அந்நா ளளவும் நாளையே' எனக் கூட்டு வாரு முளர். தென் ஆளும் - 'அழகை யாள்கின்ற' வெனவும்,

'(வண்டின்) இசையை யாள்கின்ற' வெனவும் பொருள் கொள்க. 'தேன்' என்பது 'தென்' என முதல் குறுகிற்றென்பாரு முளர்.

௩அ. சுவேதனை 'வேதமொழிவாணன்' என்றது அவன் பொய் சொல்லானெனல் குறித்தற்கென்க. 'பொய்ம்மை மொழி புகன்றறியேம் புகலமன மெண்ணுகினு, மெய்ம்மையல துரையா நா வேதநவில் பயிற்சியால்' (நைடதம்) என்றிருத்தல் காண்க. மீண்டு-மறுவலும். காதலித்தாள்-விரும்பினுள். காதலி-மகள். செய்கோ - செய்வேன். இகல் - பகை. மின் - ஒளி.

௩௯. கொண்டானுக்கு அல்லால் - கணவனுக்கு (உரிய ளாதல்) அன்றி. இறவாத - (பிறனொருவனுக்கு) வரம்பு கடந்து உரியளாகாத. பறி-மீன் இடுங் கருவி. பீறி-கிழித்து. பருவரால்-பருமையாகிய வரால் மீன்கள். இச் சொல்-இரண்டாஞ் சுயம் வர மென்னும் இந்தச் சொல்.

௪௦. எறிகின்ற-எறிந்த; இஃது தியல்பு பற்றி வந்த கால வழுவமைதி. நளன் முன்னே-நளனிடத்தே. முன்னாளில் - (தமயந்தி) சுயம்வரம் நடந்த நாளில். அன்னதற்கு-அப்படி விழுந்ததெனக் கொள்ளுதற்கு. காரணம்-ஏது. ஈது-இந்த இரண்டாஞ் சுயம்வரமே; ஏகாரந் தொக்கது. கடாம் - மதநீர். வாரணம் அன்னன்-யானையை யொத்த இருதுபர்ணன். இருதுபர்ணனுக்கு மதயானையை உவமித்தது அவன் தன்மை யறியாது மயங்கினமை தோன்றற் கென்க. மதித்து - (தன்னை) நன்கு மதித்து.

௪க. முன்னை வினையான் - பூருவ கருமத்தான். முடிந்ததோ - (இரண்டாஞ் சுயம்வரம்) கூடிற்றோ? தான் - அசை. காண - காணும்படி. இசைந்ததோ - அமைந்ததோ? ஒவ்வாத-பொருந்தாத. உரைப்பட்டது-வழங்கியது.

௪உ. காவலனுக்கு-இருதுபர்ண ராசனுக்கு. ஏவல் கடன்-பணிசெய்யுங் கடமையை. பூண்டேன் - மேற்கொண்டேன். ஏவல் - பணியை. மாவை-குதிரையை. 'மலர்த்தேன் கொங்கை துளிக்கும் தார்' என்க. தார் - மாலை.

சரு. ஒற்றை ஆழி தனி தேர் என்ன - ஒரு சக்கரத்தை யுடைய ஒப்பற்ற (சூரியன்) இரதத்தைப்போல. கொற்றம்-வெற்றியைத் தரத்தக்க. இதற்கு-இத் தேரில்; இது வேற்றுமை மயக்கம். 'ஏறுகென்ற' என்புழி அகரந் தொக்கது. 'பாம்மென்று' என்பது சப்தாநுகரணம். அளி - வண்டுகள். முரல - ஒலிப்ப. தீ தேறல் - இனிமையாகிய தேனை. வாக்கும் - வார்க்கின்ற.

சச. முந்தை வினை - பழவினை. மூவா - கெடாத. மயல் - மயக்கம். 'மயல் கொண்டான்' என்பது இருதுபர்ணனை. சிந்தையினும் - மனத்தினும். கடுக - விரைய. சந்தம் விரை தார் - அழகும் மணமு முடைய மாலை; அன்றி, மயிர்ச் சாந்தின் மணமும் மாலையும் என்பாருமுளர். குன்றாத - நீங்காத. மெல் ஓதி - மென்மையாகிய கூந்தலையுடைய தமயந்தியின். தேர்கின்றான் - ஆராய்கின்ற வாகுகன். ஊர்கின்ற - நடத்துகின்ற.

சரு. மேல் ஆடை - உத்தரீயம். அவ்வளவில் - அப்போழ்தினுள். நாலாறு - இருபத்து நான்கு. இஃது உம்மைத் தொகையெனக் கொண்டு 'பத்து' என்பது மொன்று. 'மா நடந்ததே' என்க. தோலாமை - வெற்றியை; அன்றி, 'தோலா மை' எனப் பிரித்துக் 'குறையாத மயக்கத்தை' எனினுமாம். 'மேல் கொண்டான்' என்றது இருதுபர்ணனை. வெம்மை - கொடுமை. கலி - கலியால். 'சூதின் மால் கொண்டான்' என்றது நளனை. கோல் - முட்கோல். 'கோல் கொண்ட' என்பது ஈண்டு 'நடத்திய' என்னும் பொருட்டு.

சசு. இ தாழ் பணையில் - இந்தப் பள்ளமாகிய வயலின் கண். பார் - (கணக்கிட்டுப்) பார்க்க; பார்த்து என்னிடம் கணித வித்தை யுண்மை தெரிந்துகொள்க என்றபடி. 'அதனில் தேர் உய்த்து நிறுத்தி' என்க. தேவர் - (சுயம்வரத்திற்கு வந்த) இந்திரன் முதலிய தேவர்கள். தார் - மணமாலை.

சஎ. ஏர் - உழுகின்ற எருது; 'ஏரழ குழுபெற் றப்பேர்' என்னும் பதினொராவது நிகண்டு. கோல்-தாற்றுக்கோல். தேன்

தொடை - தேன் கூடு. பீறி - கிழிபடுதலின். கார் அடுத்த - மேகத்தை அளாவிய. 'தேன் பாய்தலிற் சோலைகள் செழித்து வளர்ந்து மேகமண்டலத்தை அளாவின' என்பது பொருள். தேர் அடுத்த மா தொழில்-தேரிற் பூட்டிய குதிரையை நடத்துந் தொழில்: அஃதாவது அசுவ ஹ்ருதய வித்தை. இ தொழில் - இந்தக் கணிதத்தொழில்: அஃதாவது அக்ஷஹ்ருதய வித்தை. மாற்றுதியோ - மாற்றிக்கொள்ள விரும்புவாயோ? உரைத்தான்- (அக்ஷஹ்ருதய வித்தையைச்) சொன்னான். 'மிக்கானை' என்றது நளனை.

சஅ. சந்திரன் சுவர்க்கி - சந்திரன் சுவர்க்கியை; இரண்டனுருபு தொக்க தென்க. கொண்டாடும் - புகழ்ந்து பாடுகின்ற. காவலன்பால் - நளனிடம்.

சகூ. அலவன்-நண்டு. காமர்-அழகு. 'நகரி - நகரம்; அஃதாவது குண்டினபுரம். கூற்றம் அன்ன-யமனை யொத்த. கரி ஒன்று - ஒரு யானை ; இது பட்டத்திற் குரிய எழுயர் அரசுவா வென்க. உடையா னென்றது இருதுபர்ணனை.

ரு0. கோயில் - அரண்மனை. முற்றத்து - முன்றிலின். கொற்றவற்கு-வீமனுக்கு. பணித்து - (வாயில் காப்பாரை) ஏவி. மன் விரவு - மிகுதியாக (மலர்கள்) நெருங்கிய ; 'விரவு தாரான் (ஆகிய) மன்' என மாற்றி யுரைத்தலுமாம்.

ருக. கன்னி-புதுமை. மாந்தி-உண்டு. வரி-இசைப்பாட்டு; ரேகையுமாம். நெய்தற்கு - கருநெய்தற் பூவின் தேனை. அவாவும்-விரும்பும். அவாவியவாறு - விரும்பியபடி. இதன்கண் விளி இருதுபர்ணன் கலவியின்ப மிகத் தினைத்துத் தமயந்தியை மணக்க நினைத்து வந்தமை குறிப்பித்த லுணர்க.

ருஉ. ஆதரவால் - ஆசையால். 'யான் இங்ஙன் வந்தடைந்தேன்' என்க. வேற் கண்ணா ளென்றது தமயந்தியை. துரப்ப- விரைவின் நடத்தலின். தெளியாது - ஆராய்ந்தறியாது. முன் போந்த - வெளிவந்த ; விரைந்து வந்த வெனினுமாம்.

௫௩. ஆதி - முதன்மை. பரி-குதிரைகளை, விட்டு-அவிழ்த்து விட்டு. ஆற்றி - களைப்பாற்றி. கோது இல் - குற்றமில்லாத. அடிசில் - சோறு. முடிப்பான் : எதிர்கால வினையெச்சம். மேதி - எருமை. கண் விழிக்கும்-கண்போல மலரும். மதித்து-நினைத்து. 'முடிப்பான் மதித்து' என்க. மடைவாயில் - மடைப்பள்ளியில், சமையலறையில்.

௫௪. மறைநூல் - இருபெயரொட்டு; உம்மைத் தொகையென்பது மொன்று. யாதும்-(சமைத்தற் குரிய கருவி) யொன்றும். எல்லாம் - உண்டி யெல்லாம். வரம் பாகன் - மேன்மையாகிய வாகுகன்.

௫௫. சுரத்து இடையில் - பாலைவனத்து நடுவே. இடை இருளின - நடுராத்திரியில். அயிர்த்த - சந்தேகித்த. என்றாள் - என்று ஒரு தோழிக்குச் சொன்னாள். நயந்து - விரும்பி.

௫௬. குமர னென்றது இந்திரசேனனை. போத - மிக. 'போத அருகு ஆக' என் றியைக்க. இனி, 'போத(வும்) விளையாட(வும்) விட்டு' எனக் கொள்வாரு முண்டு. 'மேல் அவன் செயல் நாடு' என்க. 'விளை ஆடும்' என்றார் நளன் பிரிவால் அவள் உடன மெலிந்தமை தெரித்தற்கென்க. மதித்து-ஆராய்ந்து துணிந்து.

௫௭. 'காணா, நடுங்கா, உயிரா, அணையா' என்பன உடன் பாட்டு வினையெச்சங்கள். வெய்துயிர்த்தலாவது நெருப்புயிர்த்தல். வன்மம் - பகைக் குணம்.

௫௮. வாழ் - வாழ்தற்குக் காரணமாகிய. 'வாழ்வு ஏந்தல்' எனப் பிரிப்பாரு முளர். 'இந் நகர்க்கே' என்புழிக் 'கு' வ்வுருபு ஏழாவதன் இடப்பொருளது. அழுது 'அழா நின்று' என்பதன் திரிபு.

௫௯. அழிவு எய்தி - (நிறை) அழிந்து. வள்ளம்-வட்டில். உள்ளம் போல் - ஊக்கம் சிந்தியது போல.

௬0. இழுக்கு - குற்றம். செங்கை வளம்-சிவந்த கையின் வண்மை பெற்ற; அஃதாவது சிறந்த ரேகைகள் எறப்பெற்ற; சிவந்த ரேகைகளையுடைய. 'இளவரசு - இந்திரசேனனை.

சுக. மாற்றம்-சொல். 'நெஞ்சால்' என வேண்டாது கூறி ஞர் நல்ல நினைவுகள் பயின்றதெனத் தாம் வேண்டியதன் சிறப்பு முடித்தற் கென்க. அடு மடையா - மடை அடுவாய்! எஞ் சாது - குறையாது. சிறு தொழி லென்றது தேரோட்டுந் தொழிலே. 'எங்கோமான் வலி வாய்மையே' என்க. வாய் மையே - சத்தியமே. 'தீமையே' என்புழி ஏகாரம் பிரிநிலையும், 'வாய்மையே' என்புழி ஏகாரம் சிறப்புமாம். கண்டாய் - முன் னிலை யசை.

சுஉ. 'எந்தை கழலிணையின் எம்மருங்கும் வடுக் காண லாம்' என்க. கந்து - கட்டுத்தறி. சுளியும் - கோபித்து முறிக் கும். பணி முடியில் பார் - ஆதிசேடனுடைய முடியிலுள்ள பூமியை. மணிமுடியின் - இரத்தின கிரீடத்தால். வடு - தழும்பு.

சுஙூ. உன்னை அறியாது - உன் பெருமையை யறியாமல். முனிந்தருளல் - கோபித்தல் வேண்டா; இஃது அல்லீற்று எதிர் மறை வியங்கோள் முற்று. 'கண் நீர் வார முடி சாய்த்து நின் றான்' என்க.

சுச. கொற்றம்-வெற்றி. குமரனென்றது இந்திரசேனனை. கோதை யென்றது இந்திரசேனையை. அ மாற்றம் - அந்த மொழியை.

சுரு. அளைந்து - குழைத்து. 'கொங்கை வருடிக் குழை திருத்தி' என்பது பாடபேதம். குழல்-கூந்தலே. கோலம்-அணி. கருகியவோ - கருத்தனவோ? காதலனை - நாயகன் அழகினை. முன்னாள் - பிரிவிற்கு முற்காலத்தில்.

சுசு. மன்னவற்கு-இருதுபர்ணனுக்கு. 'மற்றும்' என்பதன் கண் உம்மையைத் 'தொழில்' என்பதனோடும், 'தொழிலே' என் பதன்கண் ஏகாரத்தை 'மன்னவன' என்பதனோடுங் கூட்டுக. இரண்டாவது 'மற்று' 'மற்றை' என்பதன் றிரிபு. குறித்து- எண்ணித் துணிந்து.

சுஎ. கண்ணி - மாலை. 'கண்ணியான்' என்றது வீமனை. காதலி - தமயந்தி. காதலனை - கணவனாகிய நளனை. கண்ணுற் றான் - இது முற்றெச்சம். ஓதம் - குளிர்ந்த நீரை. 'வள நாடன்'

என்றது நளனை. தெரிவு அரிதா - அறிதல் அரியதாகலின். 'திகைத்து நின்றான்' என்க.

௬௮. செம்மை வாய் மொழிக்கும் - நடுவு நிலைமையுடைய வாய்ச் சொற்கும். 'வாய்மொழி' வாய்மைச் சொற்களுமாம். ஒவ்வாது-பொருந்தாமல். எ வாயும்-எல்லா வழியானும். நுணங்கியது - நுணித்தறியத் தக்கது (ஆகிய). மதித்து தெளிந்தான்- ஆராய்ந்து துணிந்தான்.

௬௯. 'மந்தி ஐந்தலையின் நாக பண மென்று பைந்தலைய பூகத்தின் பாளைதனை ஐயுற்று ஒளியாதிருக்கும் திருநாடா' என் றியைத்துப் பொருள் கொள்க. இங்ஙனம் விளித்தமையின் 'நின்னைத் தெளிய எம்மாலாகா' தென்பது குறிப்பெச்சம். பணம் - படம். பைந்தலைய-பசுமையாகிய தலையையுடைய. பூகத் தின் - கமுகின். 'உன் உருக்காட்டு' என்க.

௭௦. அரவரசன் - கார்க்கோடகன். பூண்டு அளிக்கும். மேற்கொண்டு (உயிர்களைக்) காக்கின்ற. துகிலின் - வஸ்திரத் தின். கோத் தாயம் - அரசுரிமை, 'கோ' என்றது நளனை.

௭௧. மிக்கோன் - (தேவர்களிற்) சிறந்தவனாகிய நாராயண னுடைய. மெய் அடியே - நிலையாவன வாகிய திருவடிகளே- சார்வு ஆக - தஞ்சமாக. புக்கோர் - சரணடைந்தாருடைய. அ காலம் - (அவ்வஸ்திரங்களை அணிந்த) அப்போது. கரந்து உறையும் - மறைந்து வசிக்கும். மான் அகம் தேர்-குதிரைகளைத் தன்னிடத் துடைய' தேர்; இனி, 'மால் நகம் தேர்' எனப் பிரித்து, 'பெருமையாகிய மலையை யொத்த தேர்' என்பாரு முளர்.

௭௨. தாதையை - தந்தையை. குஞ்சியான் - மயிர் முடியை யுடைய இந்திரசேனன். புக்கு அணைந்து - போய்ச் சேர்ந்து. கோது இலா - குற்றமில்லாத. மின் இடையாளோடும் - மின் போன்ற இடையையுடைய இந்திரசேனையோடும்.

௭௩. களபம் - கலவைச்சாந்து. மாசும்-அழுக்கும். போத- நிரம்ப. 'வேந்தன்' என்றது நளனை. அவற்கு - அந்த நள னுக்கு.

எச. வெவ்விடம் - கொடிய நஞ்சு. வார்-கச்சு. 'அ மன்னனே' என்புழி மகரமெய் தொக்கது. 'விழி இரண்டும் நின்று நீரான் பறைத்தன' என்க. நின்று - (தாப) விரிந்து; அஃதாவது (இமையாது) நின்று.

எரு. இமையோர் - தேவர்கள். தே மாரி - தேன் மழை. 'வேந்தன்' என்றது நளனை. பூ மாரி - மலர் மழை.

எசு. செங்கோன் முறைமைக்கும் - (உனது) நீதி முறைமைக்கும். யார் போதுவார் - யார் வருவார்? அஃதாவது பெண்ணிலும் ஆணிலும் முன்வருவா ரில்லை என்றபடி. '(கலி) என்றான்' என எழுவாய் வருவிக்க. அன்பால் - அன்பொடு; இஃ துருபு மயக்கம். 'பாரளிப்பான்' என்றது நளனை.

எஎ. சரிதம்-நடை. செல்ல-முட்டின்றி நிகழ. 'வேலாய்' என்றது கலியை நோக்கி என்க. அடையேல் - சேராதே; இஃது அல்லீற்று எதிர்மறை வியங்கோள். 'மணி கிளர்' என மாறுக. வாள் தானை - வாட்படையை யுடைய; அன்றி, வாளேந்திய சேனையை யுடைய எனினுமாம். 'உன் சரிதஞ் சொல்லி' எனப் பாடமோதுவாரு முளர்.

எஅ. 'வேலாய்' என்றது நளனை நோக்கி யென்க. கால் - வீசுகின்ற. அயில் - கூர்மையாகிய. மெய்-இஃ துண்மை. காவி - நீலமலர். மட்டு - தேன். கட்டுரைத்து - உறுதியாகச் சொல்லி.

எகூ. வழுவா - தவறாத. தட - பெருமை; 'தடவுங் கயவு நளியும் பெருமை' என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். புதைய - மறைய. விதேயக் கோன் - விதர்ப்ப தேசத்திற் கரசனாகிய வீமன். புதுமைப்பண் புணர்த்தும் 'விருந்து' என்னும் பெயர் புதியவர்களுக்கு ஆகிவரும்; அஃ திங்குப் புதியவர்களுக்குச் செய்யுஞ் சிறந்த உபசாரத்திற்கு ஆயிற் றென்க.

அ0. உன்னை - உன் சீர்மையை. ஒன்றும் உணராது-சிறிது மறியாது. 'தாராய்' என்றது இருதுபர்ணன் நளனை நோக்கி விளித்த தென்க. 'பொறுக்கென்று' என்புழி, அகரந் தொக்க தென்க. பின்னை-அதன்மேல். மேல் நீர்மை-உயர்வாகிய தன்மை.

குன்று - குன்றி. மிசைக்கொண்டான் - ஏறினன். மால் - பெருமை. மன் - இருதுபர்ணன்.

அக. வில் தானை - விற் சேனை. முற்று - (பருவம்) நிறைந்த; சூழ்ந்த எனினுமாம். ஆம்பல் - அல்லிமலர். தேன் நீர் - தேனாகிய நீரை. அருகு - பக்கத்திலிருக்கின்ற. மா நீர் - 'மிகுதியாகிய நீர்'; அன்றி, 'பெருமையாகிய நீர்மையுடைய' எனப் பொருள் கூறி, 'மன்' என்னுஞ் சொற்கு விசேடண மாக்குதலு மொன்று.

அஉ. தானவரை வெல்லத் தரித்த நெடு வை வேலாய்-முருகனே : ஈண்டு முருகனை யொத்த நளனே! தானவரை - அசுரரை. இனி, 'தானவரை வெல்ல' என்பதற்கு 'அசுரர் போலக் கொடிய பகைவரை வெல்லுதற்கு' என்றேனும், '(பகைவரது) மதநீரையுடைய மலைபோன்ற யானைச் சேனையை வெல்லுதற்கு' என்றேனும் பொருள் கூறி, நேரே நளனுக்கு ஆக்குதலுமாம். ஏனை நெறி - இனிக் கடக்க வேண்டிய வழி. 'அப்புறம் மாவிந்தம்' எனப் பிரிக்க. 'மிக்கு அப்புறம்' எனக் கூட்டுக.

அங. கங்குல் - இரவு. இகல்-'வலியுடைய' என்றேனும், '(பகைவரைப்) பகைக்கின்ற' என்றேனும் பொருள் கொள்க. எறி - (அலை) எறிகிற. 'அங்கு செய்க்கு' என மாறுக. செய்க்கு-வயலுக்கு. 'அருக்குமா' என்புழி 'ஆறு' என்பது கடைக் குறைந்த தென்க. குன்றில் - உதயகிரியில். செருக்கும் - களிக்கின்ற. மான் - குதிரை. வெய்யோன் - சூரியன்.

அச. மன்றல் - மணம். பூ விந்தை - தாமரை மலரில் வீற்றிருக்கின்ற இலக்குமி. பொழில் - சோலை.

அரு. மறு சூதுக்கு - மறு சூதாட்டத்திற்கு. பணயம் - பந்தயப் பொருள். கொற்றவனை-அரசனாகிய புட்கரனை. குலம்-சிறப்பு. தண் தெரியல் - குளிர்ச்சியாகிய மாலை. 'தேர் வேந்தன்' என்றது நளனை.

அசு. மாயம் நெடு சூதில்-வஞ்சனை மிக்க சூதாட்டத்தில். விஞ்சித்த-(எல்லாச் செல்வங்களையும்) வஞ்சித்துப் பெற்ற. வல்

நெஞ்சன் - கடினமாகிய மனத்தையுடைய புட்கரன். பெருமை ஆய தானை சூழ - பெருமையாகிய சேனை புடைசூழ. இருந் தானை - இருந்த நளனை. 'எதிர் கண்டான்' என்க.

அஎ. தேர்ச்சி இலா - ஆராய்ச்சி யறிவில்லாத. வெங் கோல் - கொடுங்கோலை யுடைய. அம் கோலம் - அழகிய அலங்கார மமைந்த. யாவர்க்கும் - (நின் மக்களிருவர் முதலிய மற்) றெல்லார்க்கும். தீது இலவே' அஃதாவது ஷேமமுண்டோ? 'தீது இலவே: என்று வினவினன் என்க.

அஅ. ஓராது - உணராது. இயம்ப - (புட்கரன்) கேட்க. மை ஆழியில் துயிலும் மால் - கருமையாகிய கடலின்கண் கண் வளருந் திருமால்; பாற்கடலை 'மை யாழி' என்றார், கண் வளரும் திருமால் மேனியின் கரிய வொளி பரவிப் பாய்ந்து கருமை யாகத் தோன்றலின்: 'நீலக் கடலு ணெடுங்காலங் கண்வளர்ந் தான்' என்றார் பெரியாழ்வாரும். வண்மை புனை - ஈகையை அணியாகக்கொண்ட. ஆழி - மோதிரம். கழித்து - கழற்றி. 'கழித்து வைத்தான்' என மாறுக.

அகூ. அருகு இருந்தார் - பக்கத்திருந்த அரசர்கள். மதிக்க - கொண்டாட. தானை - சேனை. வேந்து - நளன்.

கூO. வழிக்கொண்டான் - (புட்கரன்) சென்றான். செந் தமிழோர் - செந்தமிழ்ப் புலவர். நா வேய்ந்த - நாவினாற் றொடுத்த. போற்றிசைக்கும் - துதிக்கும்.

கூக. புகழ் ஆன - புகழ்பெற்ற. பொன் நகரம்-சுவர்க்கம். புரந்தரனை - இந்திரனை. பொலிந்து - விளங்கி. 'நல் நகரம்' என்றது மாவிந்த நகரத்தை.

கூஉ. கார் - மேகத்தை. பெற்ற - (காணப்) பெற்ற. தோகையோ - மயிலோ; இது வினையாகுபெயர். வாள் - ஒளி. நிறை புலமோ - (விளைவு) நிறைந்த வயலோ. பார் - பூமியை; அஃதாவது நிடத தேசத்தை. எதிர் - ஒப்பு.

கலிநீங்கு காண்டம் முற்றிற்று.

# நள வெண்பா

## பாட்டு முதற்குறிப் பகராதி